# மங்கையர் மலர்




MANGAYAR MALAR ஏப்ரல் 1997 விலை ரூ. 10

இந்தியாவின் மிகப் பெரிய தங்க நகைக் கடை

# சரவணா ஸ்டோர்ஸ்

**(தங்க நகைகள், ஜவுளிகள், பாத்திரங்கள்)**

*ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை-17.*

**தங்க, வெள்ளி நகைகளுக்கு செய்கூலி இல்லை**



**22. ct. தங்கம்**

**1 கிராம் ரூ. 437**

(விலை மாற்றம் உண்டு)

**அதிகம் கல் எடையுள்ள நகை களுக்கு மட்டும் 10% தள்ளுபடி மேலும் செய்கூலி, சேதாரம் இல்லை**

நாங்கள் விற்கும் தங்க நகைகள் மற்ற எந்த கடைகளையும் விட உயர்வான தரம் என்று சவால் விட்டு உறுதி கூறுகிறோம்.

**இந்தியாவின் மிகப் பெரிய பட்டு ஜவுளி மாளிகை**

**பட்டுபுடவைகளுக்கு 10% தள்ளுபடி**

வெட்கிரைண்டர் ரூ. 1,800/- முதல், கேஸ் ஸ்டவ் டபுள்பர்னர் ரூ. 550/- முதல், மிக்ஸி ரூ. 650/- முதல், கலர் டி.வி. ரூ 11,590/- முதல், பிரிட்ஜ் 165 லி. ரூ. 8000/- முதல், வாஷிங் மெஷின் ரூ. 3,700/- முதல், டேப்ரிக்கார்டர் ரூ. 1,212/- முதல், பூனம் சேலைகள் ரூ. 120/- முதல், ரெடிமேட் ஷர்ட் ரூ. 45/- முதல், ரெடிமேட் பேண்ட், ஜீன்ஸ் பேண்ட் ரூ. 150/- முதல், சர்ட் பிட் 2 மீ. ரூ. 35/- முதல், ஜவுளிகள், ரெடிமேட் ஆடைகள், பாத்திரங்கள், பீரோ, கட்டில், பிளாஸ்டிக் பொருட்கள், சூட்கேஸ், ஃபேன் மற்றும் கடிகாரங்கள்.

---

**ஞாயிறு விற்பனை உண்டு**



காந்த விழிகள், கருங்கூந்தல் இவற்றைப்
பற்றி இங்கு நாங்கள் பேசவில்லை.....









ஆனால் அந்த காது, மூக்கு - இதில்தான் எத்தனை வகை ! கூரிய, உருண்டையான, அகலமான அவை எங்களுக்குப் பரவசமூட்டுகின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான அணிகலன்கள் வடிவமைப்பது ஒரு கலை. எங்களுக்கோ, இதுவே தியானம் !

தனலஷ்மி ஜுவெல்லர்ஸில் நாங்கள், அரிய நாகரீக வடிவமைப்பில் கலை வடிவங்களை உருவாக்குவதில் அனுபவமும், நிபுணத்துவமும் பெற்றவர்கள்.

உங்களுடைய அணிகலன் தேவைக்கோர் முழுமையான தீர்வை வடிவமைப்பதிலும் அதே கவனம், அக்கறை காண்பிப்பவர்கள் நாங்கள்.

எங்கள் வெற்றியின் இரகசியம் சாதாரணமானதே. அணிகலன்களை வடிவமைப்பதற்கு முன் எங்கள் நோக்கம் பெண்மைக்குப் பெருமை சேர்ப்பதே. எங்கள் தரத்தைப் பற்றி நாங்கள் பேசாததற்கு இதுவும் ஒரு காரணம்.



**தனலஷ்மி ஜுவெல்லர்ஸ்**
59, உஸ்மான் ரோடு,
தி. நகர், (பனகல் பார்க் அருகில்),

**அணிகலன்களுக்கான**

# மங்கையர் மலர்

மலர் : 17 ஏப்ரல் 1997 இதழ் : 3

## கோடை வந்தாச்சு....





## கவிதை.....



## கதைகள்.....





## மருத்துவம்.....



## அழகு.....





## குடும்ப உறவுகளுககு....

## தெரிந்து கொள்ள....



## அபிமான தொடர்கள்....



## மஞ்சுளா ரமேஷின்....



15 புள்ளி, 8-ல் நிற்க; இடைப்புள்ளி

ஸ்ரீராம நவமி கோலம்



— ஆ. உமாமகேஸ்வரி

# மனிதப் பண்பாடு மலரட்டும்!

வேலை செய்யும் இடங்களில் பெண்கள் அவமானப்படுத்தப்படுவது பற்றி நிறைய செய்திகள் அவ்வப்போது வந்து கொண்டுதான் இருக்கும். இது எந்தக் காலத்தில் இல்லை?

அது ஏனோ, ஆண் என்பவன் எப்போதும் பெண்ணை அவள் உடல்ரீதியாகவே பார்ப்பது என்பது நிலை நிறுத்தப்பட்டது.

'அதெல்லாம் இல்லை, இப்போதெல்லாம் எவ்வளவோ காலம் மாறிவிட்டது, பெண்களின் திறமைகளை ஏற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்!' என்ற சமாதானப் பேச்சுக்கள்.

'இன்னும் என்ன சுதந்திரம் வேணும்? நாங்கதான் சுதந்திரம் வேணும்னு போராடணும்' என்ற கிண்டல் கேலிகள்.

இன்னும்... இன்னும்.. எத்தனை அறிவு, எத்தனை விஞ்ஞான வளர்ச்சி, எத்தனை 'க்ளோனிங்' கண்டுபிடிப்புகள் என உலகம் முன்னேறினாலும் பெண்ணைக் கொச்சையாகத்தான் பார்கிறார்கள் என்பதை அவ்வப்போது அறிய நேரிடும்போது அதிர்ச்சி கோபம் என்ற நிலையெல்லாம் போய் மிருந்த மன வேதனை தான் ஏற்படுகிறது.



• 'பஸ்' ரோமியோ'வைச் சாத்தும் பெண் போலீஸ்

மார்ச் 8. உலகப் பெண்கள் தினம். அதுவும் இந்த வருடம் நிறைய பேர் போட்டி போட்டுக் கொண்டு கொண்டாடியிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பெண்கள் தினத்தையொட்டி போக்குவரத்துத் தொழிலாளர்களின் அகில உலக ஸ்தாபனம் (இண்டர்நேஷனல் ட்ரான்ஸ்போர்ட் வொர்க்கர்ஸ் ஃபெடரேஷன்) வெளியிட்டுள்ள அறிக்கையைப் படிக்கும் போது மனம் குமுறத்தான் செய்கிறது.

மிகவுயர்ந்த சம்பளம், அந்தஸ்து எனச் சாதாரண பெண்களால் கனவு காணப்படும் வேலையான 'ஏர்-ஹோஸ்டஸ்' எனப்படும் விமானப் பணிபெண்கள் எப்படியெல்லாம் தங்களுடைய பணி நேரங்களில் அவமானப்படுகிறார்கள் என்பதை விளக்கியிருக்கிறது அந்த அறிக்கை.

பெண்களை, அவர்களின் கவர்ச்சியைப் பொருளாக வைத்தே விமானக் கம்பெனிகள் விளம்பரம் செய்யும்போது விமானப் பயணிகள் அனைவரும் அப்பெண்களைப் பார்ப்பதே உடல் ரீதியாகத்தான்.

அதிலும் விமானத்தில் பயணம் செய்பவர்கள் பெரிய நிலையில் இருக்கக் கூடியவர்கள். பெரும் படிப்பாளிகள், பெரும் கனவான்கள், சமுதாயத்தில் மதிக்கப்படுகிறவர்கள். ஆனால் என்ன பிரயோஜனம்? விமானப் பணிப் பெண்ணைப் பின்புறம் தட்டுவதும், மார்பைத் தொடுவதும் வேறு பலவிதமாக அவளை இழிவாக நடத்துவதும்... விவரமாக வெளியிட்டு இருக்கிறார்கள். பயணிகளில் சிலர் எப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள் என்று இந்தியாவில் மட்டும் என்றில்லை, உலகெங்கிலுமுள்ள பல விமான பணிப்பெண்கள் மனம் குமுறி தெரிவித்து இருக்கிறார்கள்.



ஆகாசத்தில் பறக்கும் விமானப் பணிப் பெண்களுக்கு மட்டுமில்லை இந்த இழிநிலை. கல்சுமந்து கட்டிட வேலைக்கு வரும் சித்தாள் எனும் பெண்ணை மேலே வேலை பார்க்கும்

**மஞ்சுளா ரமேஷ்**

மேஸ்திரிகளோ மற்ற ஆண்களோ எப்படி யெல்லாம் கேவலப்படுத்துகிறார்கள். சில 'எக்ஸ்போர்ட்' கம்பெனிகளில் வேலை பார்க்கும் நூற்றுக்கணக்கான பெண்கள் சூபர் வைஸரிடம் மாட்டிக் கொண்டு விழிப்பார்கள்.

போதாததற்கு பல பத்திரிகைகளில் டாக்டர், நர்ஸ் பற்றியும், மானேஜர் ஸெகரட்ரி பற்றியும் எத்தனை ஜோக்குகள். வேலை பார்க்கச் செல்லும் பெண்கள் எல்லோருமே இப்படித்தான் என்பது போல கிண்டலடிக்கும் பேச்சுக்கள்.

இதெல்லாம் பழைய பஞ்சாங்கப் பேச்சுக்கள் என்று சொல்வதற்கு இல்லாமல் இன்னமும் நடந்து கொண்டுதான் இருக்கிறது.

போதாததற்கு இருக்கவே இருக்கிறது திரைப்படங்கள். நம்முடைய அரசாங்கம் கோடிக்கணக்கில் செலவழித்து 'அறிவொளி' இயக்கம் நடத்தி வருகிறது. கிராமங்களில் எல்லாம் பெண் கல்வி உயர வேண்டுமென. ஆனால் சினிமாவில் காண்பதென்ன?

படித்துவிட்டு அரைக்கால் டிராயர் போட்டுப் பெண்கள் கிராமத்துக்கு வந்து திமிர் பிடித்து அலைவதாகவும், கிராமத்து ஹீரோ அவளை அடக்கிப் புடைவை கட்டி சோகப் பாட்டு பாடச் செய்வதாகவும்... பெண்கள் படித்தால் இப்படித்தான் திமிர் பிடித்து அலைவார்கள் என்று சொல்வதாக இல்லையா இது? பெண் கல்விக்கு இதைவிட பெரிய துரோகம் வேறென்ன இருக்க முடியும்?

எந்தக் கிராமத்தில் வயதுப் பெண்கள் ஏழெட்டுப் பையன்களுடன் கில்லியும், பம்பரமும் விளையாடிக் கொண்டு இருக்கிறார்கள், அதுவும் 'இறக்கிக்' கட்டிய தாவணியுடன்.

அதுவும்... சமீப காலமாக பெண்மையைத் திரைப்படத்தில் காட்டுகின்ற அவலம் இருக்கிறதே... ஒவ்வொரு நடிகையும் தான் ஃபீல்டில் நிற்க வேண்டும் என்பதற்காக 'எதற்கும்' துணிந்தவர்களாக, துறந்தவர்களாக.... ஆண்டவனே...

தன்னுடன் ஒத்த ஒரு மனித ஜீவன் தானும் படித்து சரிநிகர் சமானமாக அறிவும் ஞானமும் கொண்டு உயர்ந்து வரும்போது சம நேசத்துடன் பாசத்துடன் ஒருவருக்கொருவர் வாழ்ந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அதை விடுத்து இன்னமும் கீழ்த்தரமான நிலையிலேயே இருபாலாரையும் வைத்துக் கொண்டிருக்கும் தன்மை எப்போது மாறப்போகிறது?

பெண்கள் இப்படிப்பட்ட அமைப்புக்களிலே அவமானப்படுத்தப்படும் போது அனைவரும் சேர்ந்து ஒற்றுமையாக போர்க்குரல் எழுப்புவதே இதற்குத் தீர்வாக அமையும். யாரோ ஓரிருவர் பேசினால் 'ஆமாம், ரொம்பத்தான் வேஷம் போடறா' எனக் கொச்சைப்படுத்தப்படுகிறாள். விமானப் பணிப் பெண்கள் விஷயத்தில் கூட தனியொருத்தியாக எதிர்க்கும் போது.

"எம் மேல புகார் சொன்னா உன்னைத் தொலைச்சுடுவேன். நீ ரொம்ப மோசமா நடந்துகிட்டேன்னு நான் புகார் பண்ணுவேன்" என்றெல்லாம் 'பெரிய மனிதர்கள்' பேசி இருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட சமயங்களில் அங்கிருக்கும் ஒட்டுமொத்தப் பெண்களும் எதிர்த்துக் குரல் கொடுத்திருந்தால் அவன் அடங்கிப் போயிருப்பான். அதே போல பெண்கள் அதிகமாக வேலை பார்க்கும் நிறுவனங்களில் இப்படிப்பட்ட 'அவமானங்கள்' ஏற்படுமானால் இது தனியொருத்திக்கு நேர்ந்ததாக ஆங்காங்கே புலம்பிக் கொண்டிருக்காமல் அனைவரும் சேர்ந்து குரல் எழுப்ப வேண்டும்.

பெண் அவமானப்படுத்தப்படுவாளேயானால் பதிலுக்கு 'செமை'யாக வாங்கிக் கட்டிக் கொள்ள நேரும் எனத் தெரிந்து கொண்டார்களேயானால் இந்த வக்கிரப் போக்கு நிச்சயம் குறையும். சமீபத்தில் பெண் கராத்தே போலீஸ் சென்னையில் அதிரடி நடவடிக்கை எடுக்கவில்லையா? தொடர்ந்து இப்படிப்பட்ட 'பதிலடிகள்' காட்டமாகத் தொடர்ந்து இருந்தால் நிச்சயம் இந்த 'அவமானங்களை' நம்மால் துடைக்க முடியும்.

இந்த விஷயத்தில், பெண்களின் ஒற்றுமையும், ஒருமித்த சிந்தனையும் நாளடைவில் இந்தக் கீழ்த்தரமான போக்கை நிச்சயம் மாற்றும். மிருகப் போக்கு மாறி ஒருவருக்கொருவர் மரியாதையும், அன்பும் கொண்டு பழகும் 'மனிதப் பண்பாடு' விரைவில் மலரட்டும்.

---

**வாழ்க்கையில் தடைகள் வருவது சகஜம். அப்போது நாம் ஆறு போல செயல்பட வேண்டும். அதாவது சிறு கற்களை ஆறு அடித்துச் சென்று விடுகிறது (சிறு தடைகளை பொருட்படுத்தவே கூடாது) சற்று பெரிய பாறைகளை ஆறு தாண்டிச் சென்று விடுகிறது. (சற்று பெரிய தடைகளை முயன்று தாண்டி விட வேண்டும்) குன்று அல்லது மலை எதிர்பட்டால் ஆறு பிரிந்து சுற்றிச் சென்று விடுகிறது. (பெரிய தடைகளை விட்டு விலகி வேறு வழியாக நம் இலக்கை அடைய வேண்டும்). (ஒரு வங்கி அதிகாரி கூறியது).**

**— எஸ். கல்யாணி**




# Hayagriva Silk House

*(Silk Cloth Merchants)*

70, G. N. Chetty Road, T. Nagar, Chennai - 600 017. Ph: 8234989 / 8230939.

.... எண்ணங்களுக்கேற்ற வண்ணங்களில் பட்டு சேலைகள் ....

# காவேரி ஹெர்பல் சோப்பு

## நறுமணம் நிறைந்த புதிய அனுபவம்




நாள் முழுவதும்
உங்கள்
சருமத்தை
பாதுகாக்க
இயற்கை தரும்
நன்மை.

---

# சுவாசக் கோளாறுக்கு இயற்கை தரும் நிவாரணம்!




ஆயுர்வேதம். நவீன உலகத்திற்கு பண்டைய ரிஷிகள் வழங்கிய அரிய பொக்கிஷம் - எல்லாம் அடங்கியது. இயற்கையின் மகத்துவங்கள் அனைத்தும் நமக்கு உதவும் வகையில் ஒருங்கே பெற்றுத் தருவது ஆயுர்வேதம். ஆயுர்வேத மருத்துவத்தின் சிறப்புகளையெல்லாம் ஒருங்கே கொண்டது பங்கஜ கஸ்தூரி.

இயற்கையெனும் மூலிகைப் பெட்டகத்திலிருந்து உருவாக்கப்பட்ட சக்திமிக்க தயாரிப்பு பங்கஜ கஸ்தூரி. ஆடாதோடை, இலவங்கம், இராம்பு, ஏலக்காய், திப்பிலி, மிளகு, சுக்கு முதலிய சக்தி வாய்ந்த மூலிகைகளாலான அரியதொரு கலவை இது.

சுவாசக் கோளாறு, இடைவிடாத தும்மல், அலர்ஜியினாலான மார்ச்சளி, யூஸ்னோ:பிலியா, நீங்காத கபம் முதலிய அனைத்து நோய்களுக்கும் நிரூபிக்கப்பட்ட நிவாரணம்.

**பங்கஜ கஸ்தூரி®**

ஆங்கில/ஆயுர்வேத மருந்துக் கடைகள் எல்லாவற்றிலும் கிடைக்கிறது.

ஆயுர்வேதம் சிபாரிசு செய்யும் அரிதான மூலிகைகளின் சரியான கலவை



தயாரிப்பாளர்கள்:
**பங்கஜ கஸ்தூரி ஹெர்பல்ஸ் இந்தியா லிமிடெட்**
பூவச்சல், திருவனந்தபுரம் 695 575, கேரளம்.
போன் 0471-290301, ஃபேக்ஸ் 0471-290059

Insight-94

---

சூப்பர் ஸ்டாக்கிஸ்ட் :
**டிரேட் லைன்ஸ் மார்க்கெட்டிங்**, 31, பில்கிங்டன் ரோடு, அயனாவரம்,
சென்னை 600 023, போன் : 612169, 612427, ஃபேக்ஸ் : 6443918

# மனைவியின் வேண்டுகோளை நிறைவேற்றிய கணவர்!



• ஜகன்னாதன்

"நீங்க உணவுத் துறையிலே என்னென்னவோ கண்டு பிடிப்பெல்லாம் செய்யறீங்க. எனக்குச் சமையலறையிலே தேவையான் ஒரு விஷயத்தைச் செய்து கொடுங்களேன்!"

என்றார் பிரேமா தன் இன்ஜினியர் கணவர் ஜகன்னாதனிடம்.

''என்னது, என் தொழிலுக்கே சவால் விடுறியே....'' என்ற கணவருக்கு உண்மையிலே பிரேமாவின் வேண்டுகோள் சவாலாகத்தான் இருந்தது எனலாம்.

ஜகன்னாதன் இன்ஜினியரிங் முடித்து விட்டு பல டீ எஸ்டேட்டுகளில் பணியாற்றியவர். உணவுப் பொருள் தயாரிப்பு தொழிற் பொறியியல் வல்லுனர் இவர். எஸ்டேட்டில் உணவுப் பொருள் தயாரிப்பில் பல உபகரணங்களையும் கண்டு பிடித்துக் கொடுத்திருக்கிறார். தொழில் நகரமான கோவையில் ஆரம்ப நிலையில் தொடங்கப் படும் தொழில்களுக்குத் தேவையான உபகரணங்களைத் தயாரித்துத் தருவதிலும் வல்லவராக இருந்திருக்கிறார். அதனால்தான் மனைவியிடமிருந்து இந்த வேண்டுகோள்!

• கிருஷ்ணவேணி

கோயமுத்தூரில் குழந்தை மருத்துவ நிபுணரான பிரேமா ஜகன்னாதன் பாரம் பரியப் பழக்கங்களிலிருந்து மாறாத கூட்டுக் குடும்பத்தில் வாழ்பவர். தெலுங்குக்காரர்களுக்கே உரிய துவையல், தொக்கு இவையெல்லாம் அதனதன் பதம் மாறாமல் இருக்க வேண்டும் அவருடைய வீட்டுப் பெரியவர்களுக்கு.

அம்மியில் அரைத்துத் துவையல் செய்ய முடியுமா? உலக்கையில் இடித்து அதிரசம் செய்ய முடியுமா? அவசரயுகத்திற்கு மிக்ஸியும், கிரைண்டரும்தான். ஆனால் பிரச்னை மிக்ஸியில் அரைத்தால் ஒரு நிமிஷம் தவறினாலும் 'மொழுக்'கென ஆகி விடும். கிரைண்டரிலோ தண்ணீர் விட்டுத்தான் அரைக்க முடியும். தவிரவும் மிஷினிற்குச் சென்று அதிரசமாவு, முறுக்கு மாவிற்கு அரைப்பதைச் சில விசேஷங்களுக்குத் தவிர்க்க வேண்டும் என்பார்கள். என்ன செய்ய?

அதனால்தான் பல உபகரணங்களைத் தயாரித்த கணவரிடம் இந்த வேண்டுகோளை வைத்தார் --

''எனக்குப் 'பொர பொர'வென துவையல் அரைக்க, அரிசி உப்புமாவிற்கு நொய் உடைக்க, உலக்கையில் இடிச்சு எடுக்கிற மாதிரி தொக்கு அரைக்க இந்த மாதிரியெல்லாம் செய்யக் கூடிய ஒரு இயந்திரம் தேவை!''

முதலில் ஜகன்னாதனுக்குச் சிரிப்பு வந்தாலும் பிறகு யோசிக்க ஆரம்பித்து இருக்கிறார். இப்படியான ஒன்றை நாம் ஏன் செய்ய முயற்சி செய்யக் கூடாது. சரி, இவற்றை இப்போது இருக்கும் மின்சார இயந்திரங்கள் ஏன் செய்ய முடியவில்லை?



• பிரேமா

உலக்கையால் இடிக்கும் தொக்கு போலச் செய்ய முடியாவிட்டாலும் கரகரவென துவையல் அரைக்க முடியும். ஆனால் மிகுந்த விழிப்போடு மிகப் பக்குவமாக அரைக்கத் தெரிந்தவர்களுக்கே இது சாத்தியம் என்பதை அறிந்து கொண்டார். மிக்ஸியையும், கிரைண்டரையும் ஆராய்ந்தார். பொதுவாக நம் பக்கத்துக்காரர்களின் உணவுப் பக்குவத் தேவையையும் புரிந்து கொண்டார். இதன் விளைவாக இவர் கண்டு பிடித்ததுதான் 'அம்மி' எனும் புதுவகைக் கிரைண்டர்.

இதன் சிறப்பே அரைக்கும் பகுதி இதில் தொங்கிக் கொண்டிருப்பதுதான். நமக்கு எந்தப் பதத்தில் அரைக்க வேண்டுமோ அதற்குத் தகுந்த அளவிற்கு எளிய ஒரு 'ஸ்குரு'வின் மூலமாக அட்ஜஸ்ட் செய்து வைத்துக் கொண்டால் போதும். இது அம்மியாக அரைக்கிறது. உலக்கையாகக் குத்தித் தொக்கு ஆக்குகிறது. மிஷினாக மாவு உடைக்கிறது. சாதம் கலக்க வேண்டுமா, புளியோதரையையோ, எலுமிச்சம்பழ சாறையோ தேங்காயையோ போட்டுச் சாதத்தைப் போட்டு விட்டால் ஒரே சீராகக் கலந்து விடுகிறது. தேங்காயா துருவிக் கொடுத்து விடுகிறது....

''நம்முடைய பழைய கால அரைத்தலின் சிறப்பே அதன் குளுமை என்றுதான் சொல்ல வேண்டும். அம்மியிலோ, ஆட்டுக்கல்லிலோ அரைக்கும் பகுதி அரைப்பவரின் கையில் இருக்கும். அதை அவரவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப லேசாகவோ, தட்டியோ, அழுத்தியோ அரைப்பார்கள். நம் பெரியவர்கள் இந்த அரைக்கும் பக்குவத்தில் தான் நம் உடல் நலத்திற்குத் தேவையான சத்தினைப் பெறச் செய்தார்கள் என்று கூட சொல்லலாம். இஞ்சித் துவையல் என்றால் கொஞ்சம் சக்கை இருக்க வேண்டும். வெண்ணையாக அரைத்து விட்டால் என்ன பிரயோஜனம்?

பல பருப்புகளும் தனியாவும் 'கொர கொர'வென அதனதன் பக்குவத்தில் ஒன்று சேர்ந்து ஒரு இரசாயன மாற்றத்தை ஏற்படுத்துகிறது. அந்தப் பக்குவம் தான் உடல் நலத்திற்கு நல்லது என நினைத்தார்கள். ஆனால் இன்றைய அவசரத்தில் 'பக்குவம்' எல்லாம் போய் வெறும் ருசிக்காக சாப்பிடுகின்ற நிலை ஏற்பட்டு விட்டது'' என்று அக்குடும்பத்தின் வயதான பெண்மணியான கிருஷ்ணவேணியின் பேச்சைக் கேட்ட போது பிரமித்துத்தான் போனோம்.

"இவருடைய அறிவுரை வழிகாட்டுதல்கள் தான் என்னுடைய கண்டு பிடிப்பிற்குப் பல வகையிலும் உதவி செய்ததுன்னு கூட சொல்லணும். 'அம்மி'யை எந்தெந்த அளவில் 'அட்ஜஸ்ட்' செய்து வைத்து எந்தெந்த பக்குவத்திற்கு அரைக்க முடியும் என்பதையெல்லாம் யோசித்துச் செய்ய அக்காவின் பேச்சுதான் காரணம்" என்கிறார் ஜகன்னாதன்.

அவர்களின் குடும்பத்து மற்ற உறுப்பினர்களான புஷ்பாவும், லதா மோகனும் திருமணமாகி வெளியூரில் வசிப்பவர்கள். கையோடு

• உலக்கை போய்...

• ...கிரைண்டர் வந்தது

# அருள்தரும் அங்காள பரமேஸ்வரி ஆலய திருப்பணி, வரகடை

**கொருக்கை (அஞ்சல்) நீடூர் (வழி) மயிலாடுதுறை வட்டம்**

இவ்வாலய குடமுழுக்கு 18 ஆண்டுகளுக்கு பிறகு மீண்டும் நடத்திட முடிவு செய்யப்பட்டு உள்ளது.

சேவார்த்திகள் வசதியோடு வந்து தங்க மண்டபம், அங்க பிரதட்சணம் செய்ய வசதி மற்றும் வண்ணம் தீட்டப்பெற்ற கோபுரங்கள் ஆகிய திருப்பணிகள் ரூபாய் 3 லட்சம் மதிப்பீட்டில் தொடங்கப்பட்டுள்ளது. நன்கொடையை **'தலைவர், அருள்மிகு அங்காள பரமேஸ்வரி ஆலயத் திருப்பணிக்குழு, வரகடை'** என்ற பெயரில் வரைவோலை/ பணவிடை (Drafts/Money orders)) மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி இறைவனின் அருள் பெற வேண்டுகிறோம்.

இவண்

**V. ஆறுமுகம்** I.A.S. (Retd.)

தலைவர், திருப்பணிக்குழு

19- A கணபதி நகர், மயிலாடுதுறை - 609 203.

'அம்மி'யைக் கொண்டு போய் அவர்கள் ஊரில் பிரபலப் படுத்திக் கொண்டு வருகிறார் கள்.

பம்பாயில் இதை முதலில் அதிசயமாகப் பார்த்த மகா ராஷ்டிரப் பெண்மணிகள் இப் போது தங்கள் சமையல் அறைத் தோழியாக ஏற்றுக் கொண்டு விட்டார்களாம்.

"இடிக்க, அரைக்க என்னும் போது அடிப்பகுதி ரொம்ப உறுதியாக இருக்க வேண்டும். அதற்காகத்தான் மிகவும் உறுதி யான முறையில் 'பாட்டம்' அமைத்திருக்கிறோம். எப்படி நம் பழைய சமையலறை அம்மியும், குழவியும் தேயத் தேய பக்குவமாக அரைக்க வருமோ அதே போல இந்த 'அம்மி'யிலும் நாளாக நாளாக பக்குவம் மேலும் மேலும் சிறப்பாக இருக்கும்" என்கிறார் ஜகன்னாதன்.

பேடண்ட் உரிமைக்கு விண்ணப்பித் திருக்கும் இவர், தன்னுடைய கண்டு பிடிப்பினை யாரும் காப்பியடித்து விடக் கூடாது என்பதிலும் கவனமாக இருக் கிறார்? 'ஸ்ரீ ராகவேந்திரா ஃபேப் ரிகேஷன்ஸ்' எனும் பெயரில் கவுண்டம் பாளையம் காந்தி நகரில் (தொ. 444385) தொழிற் சாலையை நிறுவி வர்த்தகரீதி யாக 'அம்மி'யைத் தயாரித்து மார்க்கெட் செய்ய ஆரம்பித்து இருக்கிறார்.


• தொங்கும் அரைக்கும் கல்

எப்படியோ, ஆக மொத்தம் கடைசியில் மனைவியின் வேண்டுகோளை வெற்றிகர மாக நிறைவேற்றி விட்டார்! அதனால் தற்போது ஒரு தொழிற்சாலையை நிறுவி 'அம்மி'யை விற்பனை செய்ய வும் ஆரம்பித்து விட்டிருக் கிறார். இருவருக்கும் வெற்றி தானே!

— 'புவன்'

படங்கள் : ராஜு நாராயண்



# SAMPRAAS BEAUTY CENTRE
## & School of Cosmetology

நாங்கள் கீழ்க்கண்ட அழகுக்கலை பயிற்சியினை தேர்ச்சி பெற்ற மற்றும் அனுபவமிக்கவர்களால் கற்று தருகிறோம்.

| | |
|---|---|
| **Bleach** | **Bridal Make-up** |
| **Latest Facials** | **Mehandi** |
| **Pedicure &** | **Hair Styles** |
| **Manicure** | **Hair Treatment** |
| **Waxing** | **Perming** |
| **Hair Cuts** | **Hair Colouring** |
| **Galvanic** | **2 Months complete Beautician Course** |

ஒவ்வொரு மாணவியிடமும் தனி கவனம் செலுத்தி கற்று தரப்படும். மாணவிகளில் மிகச் சிறந்த மூன்று பேர்களை தேர்ந்தெடுத்து பரிசு வழங்கப்படும். வெளியூர் மாணவிகளுக்கு ஹாஸ்டல் வசதி செய்து தரப்படும்.

So hurry up! Join immediately and get 25% discount on course fees. Offer open till June '97

**SAMPRAAS BEAUTY CENTRE,**

**Mrs. Vanathi Balasubramaniam**

**Gokul Arcade No. 19B, I Floor, No. 2, Sardar Patel Road, Adyar, Chennai - 600 020.**

**Ph : 4917862, 414434 & 415712**

# ஆஹா வந்திடுச்சு.....!

"சிறப்புத் தள்ளுபடி விற்பனை"

06.04.97 முதல் 12.04.97 வரை

***ஏழுதினங்கள் மட்டுமே!***
***நா வாங்கிட்டேன்பா.....! நீ போய் வாங்கலே.... இச்சலுகை மேற்கு மாம்பலத்தில் மட்டும் தானாம்....!***

நிறைய டிசைன் வந்திருக்கு ஆனா பார்க்க முடியலே! தேவைக்கு அள்ளிட்டு வந்திட்டேன் லாபம்தானே.....!



நேரம் : காலை 10.00 முதல் இரவு 9.00 மணி வரை.
உணவு இடைவேளை இல்லை!




உயர்ரக மதுரை சுங்குடி புடவைகளின் விற்பனையாளர்கள்.

# RAMACHANDRA SAREES

(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

H.O. No. 37-B, Arya Gowder Road, Postal Colony Bus Stop, West Mambalam, Chennai - 33. Ph : 4896532

# வருடத்தின் முக்கிய தினங்கள்

**வருடத்தின் முக்கிய தினங்கள், வினாடி வினாவிலும், பொது அறிவு, நுழைவுத் தேர்வுகளிலும் கேட்கப்படுகிறது. கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் 'தகவல் பலகையில்' எழுதி வைத்தால் மாணவர்களின் கவனத்தில் பதிந்து விடும்.**

**நாம் வீட்டில் குறித்து வைத்துக் கொண்டாலும் நல்லதுதானே!**





**ஜனவரி**

12 - தேசிய இளைஞர் தினம்
15 - தரைப் படைதினம்
25 - அகில உலக சுங்க தினம்
26 - இந்திய குடியரசு தினம்
30 - தியாகிகள் தினம்/ தொழுநோய் ஒழிப்பு தினம்

**பிப்ரவரி**

14 - காதலர் தினம்
28 - தேசிய விஞ்ஞான தினம்




**மார்ச்**

4 - தேசிய பாதுகாப்பு தினம்
8 - அகில உலக மகளிர் தினம்
15 - உலக நுகர்வோர் தினம்
3 வது ஞாயிறு - உலக ஊனமுற்றோர் தினம்
21 - உலக வன தினம்
23 - உலக வானிலை ஆராய்ச்சி தினம்
24 - அகில உலக இனபாகுபாடு ஒழிப்பு தினம்
28 - உலக மேடை தினம்



**ஏப்ரல்**

1 - முட்டாள் தினம்
7 - உலக சுகாதார தினம்
14 - தீயணைப்பு தினம்
18 - உலக மரபு தினம்
22 - பூமி தினம்/உலகக் குழந்தைகள் தினம்

**மே**

1 - உழைப்பாளர் தினம், மே தினம்
3 - பத்திரிகை சுதந்திர தினம்
2 வது ஞாயிறு - தாய்மார்கள் தினம்
8 - செஞ்சிலுவை தினம் (Red Cross Day)
12 - அகில உலக செவிலியர் தினம் (Nurses' Day)
15 - உலக குடும்ப தினம்
17 - தொலைத் தொடர் தினம்





அட்டையில் குமாரி மைத்ரேயி ஸ்ரீனிவாசன். தந்தை சீனிவாசன் எழுத்தாளர். மைத்ரேயி திருச்சி இந்திரா காந்தி கல்லூரியில் பி.பி.ஏ. இரண்டாம் ஆண்டு படிக்கிறார். தானும் எழுதுவதோடு கல்லூரி நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றிருக்கிறாராம்.

வண்ணப்படம் : ஜி. சுரேஷ்

(World Telecommunication Day)
24 - காமன்வெல்த் தினம்
31 - புகை ஒழிப்பு தினம்

**ஜூன்**
5 - உலக சுற்றுச் சூழல் தினம்
26 - அகில உலக போதைப் பொருள் ஒழிப்பு தினம்

**ஜூலை**
1 - மருத்துவர் தினம் (Doctor's Day)
11 - உலக மக்கள் தொகை தினம்

**ஆகஸ்ட்**
9 - வெள்ளையனே வெளியேறு தினம்
15 - இந்திய சுதந்திர தினம்

**செப்டம்பர்**
5 - ஆசிரியர் தினம்
8 - உலக கல்வியறிவு தினம் (World Literacy Day)
13 - உலக நட்புறவு தினம் (World Friendship Day)
2 வது ஞாயிறு - தாத்தாக்கள் தினம் (Grandfather's Day)
23 - அகில உலக கப்பல் தினம் (International Shipping Day)
26 - காது கேளாதோர் தினம்
27 - உலக சுற்றுலா தினம்

**அக்டோபர்**
2 - உலக பிராணிகள் தினம் (World Animal Day)
8 - விமானப்படை தினம்/ முதியோர் தினம்
9 - தேசிய தபால் தினம் (Universal Postal Union Day)
13 - அணு ஆயுத ஒழிப்பு தினம்
14 - உலக தரக் கட்டுப்பாடு தினம்
3 வது ஞாயிறு - மாமியார் தினம் (Mother-in-Law's Day)
15 - பார்வையற்றோர் தினம்/ வெள்ளை ஊன்றுகோல் தினம்
16 - உலக உணவு தினம்
24 - ஐ.நா. தினம்
29 - உலக சைவ உணவுக்காரர் தினம் (World Vegetarian Day)
30 - உலக சிக்கன தினம் (World Thrift Day)
31 - தேசிய ஒருமைப்பாடு தினம்/Rededication Day

**நவம்பர்**
14 - குழந்தைகள் தினம்

**டிசம்பர்**
1 - உலக எய்ட்ஸ் தினம்
4 - கடற்படை தினம்
7 - கொடி தினம்
8 - மனநிலை குறைபாடு உடையோர் தினம் (Mentally Retarded's Day)
10 - மனித உரிமை தினம்
23 - உழவர் தினம்

தொகுப்பு : குமாரி குப்புசாமி

THE NEW COLORS OF SPRING 1997

# VIRTUAL VIOLET

THE LOOK FROM SHEER TO SHOCKING




REVLON

*Revolutionary*

# பறக்க முயலும் கிணற்றுத்தவளை

உஷா ஸ்ரீகுமார்

ஏதோ வருத்தம். அன்னிக்கு 'நீல்கிரீஸ்' வாசலில் கூட என்னை அவசர அவசரமாய் தவிர்த்து விட்டு ஆட்டோவுக்குள் ஏறினான். என்ன ப்ராப்ளம்?"

"காம்ப்ளெக்ஸ்..."

"???"

"ஒரு விதத் தாழ்வு மனப்பான்மை..

"முடிவாய் என்ன சொல்கிறாய்?"

மௌனம்.

"அடம் பண்ணாதே... நீ அங்கே வராட்டி நல்லாயிருக்காது. கிருஷ்ணாவும், சுஜியும் தப்பாய் எடுத்துக் கொள்வார்கள்."

கிருஷ்ணா என் பதினேழு வருட நண்பன். விளம்பர ஏஜென்ஸியில் விஷுவலைசராக இருக்கும் சுஜாதா அவன் மனைவி. என் சிநேகிதி... 'அண்ணி', 'சிஸ்டர்' போன்ற உறவுப் போர்வைகளில்லாத ஆரோக்கியமான நட்பு எங்களது. அவர்களுக்கு இன்று நான்காவது திருமண நாள். குறிப்பிட்ட பத்துப் பேர்களுக்கு மட்டும் விருந்து. அனைவருமே அன்யோன்யமாகப் பழகும் நட்புக் கூட்டம். அங்கே நான் மட்டும் தனியாக, விஜியில்லாமல்.

"டேய் ஃபூல் உன்னை மட்டும் யார்ரா வரச் சொன்னது? எங்கே விஜி? வீட்டில் பூட்டி வச்சிட்டு வந்தியா?" கேள்விகள் வரும்.

"உடம்பு சரியில்லே." பொய் சொல்லி சமாளித்தாலோ....

"என்ன உடம்பு? யார் டாக்டர்? குட்நியூசா?" கேள்விகள் தொடரும்.

"ப்ளீஸ் கிளம்பு விஜி." முகத்தில் 'ஓல்ட் ஸ்பைஸ்'ஸை அடித்துக் கொண்டேன். "எனக்காக ப்ளீஸ்."

"உங்க இஷ்டப்படி நான் இருக்கணும். ஆனால், என் ஆசைகள் உங்களுக்கு அபத்தமாய் தோணும்." மீண்டும் பழைய பல்லவி.

"உனக்கு அறிவே கிடையாதா விஜி? எவ்வளவு தடவை சொன்னாலும் புரிஞ்சுக்க மாட்டேங்கறியே, உன்னால முடியாது. ஏன், புலியைப் பார்த்து சூடு போட்டுக்க நினைக்கிறே?"

"உங்க ப்ரெண்ட்ஸ் பெண்டாட்டிங்களுக்கு ஒரு நியாயம் எனக்கொரு நியாயமா?"

"உன்னோட பேச எனக்கு நேரமில்லை. கிளம்புறேன். நீ வீட்டிலேயே கிட...."

ஹீரோ ஹோண்டாவைக் கிளப்பினேன்.

விருந்தும், அரட்டையும் முடிய ஒன்பதரை ஆகிவிட்டது.

"ராஜு, கொஞ்சம் இந்தக் காலி ஹாட்கேஸ்களை சமையல் ரூம் சிங்க் கிட்டே வச்சிடுங்களேன், ப்ளீஸ்" சுஜி சகஜமாக உதவிக்குக் கூப்பிட்டாள்.

"என்ன கோபம் விஜிக்கு?"

எதிர்பாராத கேள்வி.

"ச்செச்செ. அவ சித்தி பொண்ணுக்கு..."

"கதை வுடாதீங்க... அவளுக்கு எங்கிட்டே வேலைக்குப் போற பெண்களைக் கண்டு. சல்வார் கமீஸ் போடுபவர்களையும், வேகமான இங்கிலீஷ் பேசுபவர்களையும் கண்டு... நீங்க வெறும் ஹவுஸ் வைஃப் தானாங்கிற கேள்வி அவளை அவமானப்படுத்துது... அதனால ஒரே லடாய். தினமும் என்கிட்டே ரகளைதான். 'ஒரு நல்ல வேலை வாங்கித் தாங்க...'ன்னு. என் மண்டை ஒடையுது சுஜி.."

"வாங்கிக் கொடுங்களேன். நீங்க பர்சானல் ஆபீசர். உங்களால முடியாதா என்ன?"

"கிண்டல் பண்ணுறியா சுஜி, உனக்கு அவளைப் பத்தித் தெரியாதா என்ன..."

ஒரு வருஷத்திற்கு முன்... அன்று, அம்மாவின் லெட்டரோடும், போட்டோவோடும் கிருஷ்ணா, சுஜி வீட்டுக்குத்தான் வந்தேன்.

"பாருய்யா. பேரு விஜயகுமாரியாம். ராஜா ராணி சினிமா ஹீரோயின் மாதிரி, ஊரில் பொம்பளை காலேஜ் கிடையாதுங்கிறதால, ப்ளஸ் டூவோட படிப்பு பணால். குத்துவிளக்கு மாதிரியிருக்கா. குடும்பம் நடத்த இது போதாதா? 'உங்கப்பா வாக்குக் கொடுத்தாச்'ன்னு அம்மா எழுதியிருக்காங்க. எப்படிடா விளக்கோட குடும்பம் நடத்துவது?

கிண்டலில் கோபத்தை மறைக்கப் பார்த்த போது.

"போய் நேரில் பாருங்க. முடிந்தால் பேசிப் பாருங்க. ஆனால் பத்து நிமிஷப் பேச்சில் ரொம்பப் புரிஞ்சுடாது. நீங்க நினைக்கிறா மாதிரி, பேரும், ஊரும், ப்ளஸ்டூவும் மனைவியாவதற்கு இடைஞ்சலான தகுதிகள் இல்லை ராஜு."

கஜி தீர்க்கமாக, மெதுவாகப் பேசினான்.

முதல் பார்வையிலேயே விஜி ஒரு மிரண்ட குழந்தையாகத் தெரிந்தாள்.

கல்யாணமான பிறகு, அவளது வெகுளித்தனமே அவளுடைய தனி அழகாகத் தோன்றியது.

மோட்டார் பைக்கில் உட்கார நடுங்கியதும்,



மெல்லிய ஒளி சூழ்ந்த ஓட்டலில் சாப்பிடப் போன போது.

"சாப்பாட்டில் ஏதாவது விழுந்தாக் கூடத் தெரியாதே... இத்தனை' காசு வாங்கறான். ஒரு 'ட்யூப் லைட்' போடக் கூடாதோ" என்று கேட்டபோது கண்களில் நீர் ததும்ப சிரித்தேன்.

வாழ்க்கை மிக ரம்யமாக நகர்ந்தது. கடந்த ஒன்பது மாதங்களாக....

விஜிக்கும் சென்னை கடைகள், வசதியான ஃப்ளாட், ரிமோட்டுடன் கூடிய டீவியில் தெரியும் சேனலுக்கொரு தமிழ் சினிமா, காஸ் ஸ்டவ் சமையல், கெய்சர் போன்றவைகள் மிகவும் பிடித்து விட்டதாலோ என்னவோ வாழ்க்கை நிம்மதியாக நகர்ந்தது.

ஆபீஸ் கிளம்பும் முன் 'கதவை பூட்டிக்கோ, வ்யூ ஃபைண்டர் வழியே பார்த்துவிட்டு திற..." தினசரி ஆலோசனை கொடுத்தேன்.

வாரம் மூன்று நாட்கள் சாயந்திரம் ஷாப்பிங் போனோம்.

"தனியே போக முடியாதுப்பா. இந்த ட்ராஃபிக்கைப் பார்த்தாலே, பஸ் கூட்டத்தையும் ஆட்டோ வேகத்தையும் அவங்க செந்தமிழையும் நினைச்சாலே தலை சுத்துதுப்பா."

இப்படியிருந்த விஜி திடீரென்று,

"நான் வேலைக்குப் போகணும். இப்படி வீட்டி லேயே வெட்டியாக இருக்கப் பிடிக்கலை. வேலை வாங்கித்தாங்க" என்று போன மாதம் ஆரம்பித்த போது.

"சாயங்காலம் ஹனிபா கடை [illegible] வித்தா வாங்கி வரேன்" சிரித்தேன்.

முறைத்தாள்.

"அசடு உனக்கு என்ன வேலை செய்யத் தெரியும். கிராஜுவேட் கூட இல்லை. டைப்பிங் ஷார்ட்ஹாண்டு தெரியாது. வேணா சமையல் வேலை கிடைக்கும். அதை இங்கேயே ஜோராய்ப் பண்ணேன். ரசிச்சு சாப்பிடறேன்."

"உங்க ஃப்ரெண்ட்ஸ் பெண்டாட்டிகள் போகலியா?".

"அது சரி. அவங்களும் நீயும் ஒண்ணா?"

முகத்தைத் தூக்கியபடி உள்ளே சென்றாள்.

அன்று



தயிர் வைக்கும் பாத்திரத்தில் அதன் மூடிப் பகுதியை சுற்றி மிகச் சிறிய ஈ அமர்ந்து கொண்டிருந்தது. பாத்திரத்தை மாற்றினாலும் அது போவதாய் இல்லை. சரி என்று ஒரு யோசனையாக மூடிப் பகுதியை சுற்றிலும் தான் உப்பை எடுத்துத் தடவி விட்டேன். அவ்வளவும் எங்கே போயிற்று என்று தெரியவில்லை. அன்று முதல் அந்தப் பாத்திரத்தை கழுவி தயிர் தோய்த்து சுற்றிலும் உப்பை தினசரி தடவி விடுகிறேன்.

— த. சாந்தி

ஆரம்பித்த பல்லவிதான் தொடர்கதையாகி விட்டது.

விளக்கி முடித்தேன்.

சுஜி சிரித்தாள்.

"ஏன் சிரிக்கறே சுஜி. சரியா ரோட்டை க்ராஸ் பண்ண பயம்... வாசலில் வாக்யூம் க்ளீனர் சேல்ஸ்மேன் வந்தால் பதட்டம்... எதை யும் நான் இல்லாம சமாளிக்கத் தெரியாது. இவளுக்குப் போய் என்ன வேலை வாங்கித் தரட்டும்? சொல்லு...."

"சரி ராஜு". பின்னே, அவள் வாழ்க்கையில் உருப்படியாக என்னதான் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறீங்க?"

"வீட்டை கவனிச்சுக்கிட்டும், எங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளை நல்லபடியா வளர்க்கட்டும். சந்தோஷமாய் மூவி பார்க்கட்டும்... அவளை கவனிச்சுக்கத்தான் நான் இருக்கேனே...."

"வெரி குட்." கை தட்டினாள்.

"சராசரி, மண்டை கனம் மிகுந்த இந்திய ஆண்மகன். தான் என்பதையே பிரதானமாக நினைக்கும் ஈகோ பெருத்த சுயநலவாதி... நீங்க."

"சுஜி."

"உங்களுக்குத் தேவை வீட்டை கவனிச்சுக்க ஒரு சம்பளமில்லாத வேலைக்காரி. உங்கள் வாரிசுகளை வளர்க்க ஒரு விசுவாசமான ஆயா... உங்களை சூப்பர் மேனாக பூஜிக்கும் ஒரு ஆதர்ச மனைவி. எதொண்ணுக்கும் உங்களையே சார்ந்து நிற்கும் ஒரு அடிமை... பிரியத்துடன் சொன்னால் வெகுளி..."

"நீங்க தப்பாய் புரிஞ்சுக்கிட்டீங்க, சுஜி."

"இல்லை. உங்களைப் பொறுத்தவரை அவள் உலகம் தெரியாதவள். ஆனால், இந்த உலகம் தெரியாத மண்ணாந்தை எப்படி நாளைய உலகில் எதிர் நீச்சல் போடக் கூடிய குழந்தைகளை வளர்ப்பாள்? அவள் தெருவை கிராஸ் செய்யத் தெரியாதவள். அப்பேர்ப்பட்ட முட்டாள் எப்படி குடும்பச் சிக்கல்களை சமாளிப்பாள்? படிப்பு இல்லாதவள். அவளால் எப்படி குழந்தைகளின் படிப்பில் உதவ முடியும். முட்டாள் அம்மாவை எந்தக் குழந்தை மதிக்கும்? எல்லாம் சரி... அவளை கவனிச்சுக்க நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால், ஒரு வேளை உங்களுக்கு ஏதாவது ஒண்ணுன்னா, பிறகு ஒண்ணும் தெரியாத அந்த வெகுளிப் பெண் எப்படி தன்னந்தனியாக இந்தப் பொல்லாத உலகத்தில் எதிர் நீச்சல் போடப் போகிறாள்? ஒரு வேளை, உங்களுக்குப் பிறகு அவளுக்கு இந்த பூமியில் என்ன வேலைன்னு கேட்கப் போகிறீர்களா? அவளை உடன் கட்டை ஏறவும் சொல்வீர்களா? ஏனென்றால் நாளைக்கு அவள் மட்டும் வாழ்ந்து என்னத்தைக் கிழிக்கப் போகிறாள்? அவளால் தனியாகத்தான் எதுவும் சமாளிக்கத் தெரியாதே..."

"சாரி சுஜி, நான் அப்படி நினைக்கலை..."

"ராஜு" இத்தனை நாட்களாக கிராமத்தில் கிணற்றுத் தவளையாக இருந்துவிட்டாள். அவளையொத்தவர்கள் இங்கே இருக்கும் விதத்தால் மலைத்துப் போய் விட்டாள். தானும் மாற நினைக்கிறாள். தன் காலில் நிற்க விரும்புகிறாள். வழிதான் தெரியவில்லை. அதுதான் உங்களை வேலை வாங்கித் தரச் சொல்லித் நொங்குகிறாள். குஞ்சுக்கு சாப்பாடு போடுவது மட்டும் தாய்ப் பறவையின் கடமையல்ல... அதற்கு இரை தேடச் சொல்லிக் கொடுத்துப் பறக்கவும் கற்றுத் தருவதுதான் நல்ல தாய்க்கு அடையாளம். உங்க குஞ்சை என்ன செய்வது என்று நீங்கதான் முடிவு செய்யணும்."

காலையில்....

"விஜி... என் ஃப்ரெண்டோட நர்சரி ஸ்கூல் பக்கத்தில்தான் இருக்கு. கொஞ்ச நாள் அங்கே வேலைக்குப் போறியா? பெரிய சம்பளம் கிடைக்காது. ஆனால் நீ உலகத்தை கொஞ்சம் புரிஞ்சுப்பே... அது ஒரு வித்தியாசமான அனுபவமாக இருக்கும். பன்னிரண்டு மணி வரை தான் வேலை. மத்தியானம் கம்ப்யூட்டர் கோர்ஸ்ல சேர்ந்துக்கலாம். பொழுதை வெட்டியாகப் போக்க வேண்டாம் பார். ஆறே மாதத்தில் வேறு நல்ல வேலை வாங்கிடலாம்."

"ம்ம்ம்... என்னால கம்ப்யூட்டர் கத்துக்க முடியுமா? எனக்கு இங்கிலீஷ் கூட சரளமாய் வராதே..."

"அசடு, கம்ப்யூட்டருக்கு இங்கிலீஷ், தமிழ், எல்லாமே ஒண்ணுதான். அதன் மொழியே தனி. அதைப் புரிஞ்சுக்க விடா முயற்சி மட்டும் போதும். அது உன்கிட்டே இருக்கு..."

விஜி முகம் மலர சிரித்தாள். குழந்தையைப் போல...

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604



# இந்த மாதம் எப்படி?

## மேஷ ராசி :



அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம்.

மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனும் மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரனுடன் சேர்ந்து சூரியனும், மாதம் பூராவும் இராகுவும் உங்களுக்குப் பல விதங்களில் நன்மை புரிவார்கள். கட்டிட லாபம், தனலாபம், பதவி உயர்வு, கலையுலகில் உள்ளவர்களுக்குக் கீர்த்தி என எல்லா இனங்களிலும் வெற்றியைத் தருவார்கள். சனியும் குருவும் பரிவர்த்தனை பெறுவதாலும், அவ்விரு கிரகங்களால் நன்மையில்லையெனினும் தீமைகளோ தொல்லைகளோ ஏற்பட நியாயமில்லை. மேஷ ராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு பூராவுமே கஜகேசரி யோகம் உண்டு. இதனால் பண வருவாய், செய்யும் தொழிலில் வெற்றி புகழ் இவை கிடைக்க வேண்டும். வக்கிரம் பெற்ற செவ்வாய் 5-ல் இருப்பதால் உங்கள் குழந்தைகளின் கல்வி பற்றிய கவலை ஏற்படலாம். அத்துடன் உயர்வு, தாழ்வு இரத்த அழுத்த சம்பந்தமாக உடல் நிலை சற்று பாதிக்கப்பட்டாலும் பயப்படத் தேவையில்லை. புதன் தாய் வீட்டு உறவுக்காரர்களுடன் இருக்கும் நல்லதொரு உறவு பாதிக்கும் வண்ணம் ஏதேனும் சிறு நிகழ்ச்சிகளை உண்டாக்கி மனதிற்கு வருத்தத்தை அளிக்கலாம். எனவே, அனைத்து கிரகங்களுக்கும் சேர்த்து உங்கள் நட்சத்திரத்தன்று அல்லது மாதத்தின் முதல் செவ்வாய் அல்லது சனிக் கிழமையில் உங்கள் பெயரில் ஒருமுறை அர்ச்சனை செய்யுங்கள். அன்று அனைத்து கிரகங்களுக்கும் அகல் விளக்கேற்றி வையுங்கள்.

## ரிஷப ராசி :



கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் செவ்வாய், புதன், ராகு தவிர மற்ற அனைத்து கிரகங்களும் அனுகூலமான நிலையில் உள்ளதால் உங்களது செயல்கள் அனைத்திலும் வெற்றி உண்டு. குழந்தைகளின் கல்விநிலை, குடும்பத்தின் அமைதியான சூழ்நிலை, தொழில், உத்தியோகம் அனைத்திலும் மனம் விரும்பும் வண்ணம் நல்லவை அதிகமாக நடக்கும். மாதத்தின் பிற்பகுதியில் அரசுத் துறையில் உள்ளவர்கள் சற்றுக் கவனமுடன் செயல்பட வேண்டும். கடன் வாங்குபவர்களும் சரி, கொடுப்பவர்களும் சரி எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. சுப நிகழ்ச்சிக்கும் இடம் உண்டு. அது திருமணமாகவோ, புதுமனை புகுவிழாவாகவோ கூட இருக்கலாம். வெளிநாட்டிற்குச் செல்லும் முயற்சியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வெற்றி கிடைக்கும். விசா, பாஸ்போர்ட் சம்பந்தமான விவகாரங்களில் உங்களுக்கு அனுகூலமான சூழ்நிலை தெரிகிறது. புதிய தொழில் ஒன்றை ஆரம்பிக்கலாமா என எண்ணுபவர்கள், வீணான சிந்தனையை விட்டு ஆக்கப்பூர்வமான செயலில் ஈடுபடுங்கள். புதிதாகப் பழக வருபவர்களிடம் எச்சரிக்கை தேவை. உங்கள் குழந்தைகள் விஷயங்களில் கூட, அவர்களது கல்விநிலை, ஒழுக்கநிலை இவைகளைக் கண்காணித்து, அதற்கேற்ப அன்பான அணுகுமுறையைக் கையாண்டு அவர்களது கவனத்

### ஏப்ரல் 1997

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | 29 | 30 | | | |

தைக் கல்வியில் செலுத்த ஆவன செய்வது நல்லது. ஸ்ரீசுப்ரமணிய புஜங்கம், மற்றும் ராக வேந்திரர் ஸ்தோத்திரம், தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரம் படிப்பது நல்லது. துர்க்கைக்கு அர்ச்சனையும் ராகு காலத்தில் செய்யலாம். செவ்வாய் 4-ல் இருப்பதால் உங்கள் மனதில் தோன்றும் "தான்" எனும் குணத்தைக் குறைப் பது, அல்லது அதற்கு இடம் கொடாமலே இருப்பது நல்லது.

## மிதுன ராசி :



*மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.*

இராசிநாதன் மாதம் பூராவும் 11-ல் இருப்ப தால் மாணவ மாணவிகளுக்குத் தேர்வுகளில் முதலிடம் பெறும் அளவிற்கு புதன் உதவுவார். எனினும் உங்கள் முயற்சியும் நன்கு அமைந் தால் அமோகமான வெற்றியே அமைந்திட லாம். இது எத்துறையினர்க்கும் எவ்வினத் தினருக்கும் பொருந்தும். மாத ஆரம்பத்தில் கேதுவும் சனியும் சில இனங்களில் இடைஞ் சல்கள் ஏற்பட வழிவகுக்கலாம். ஆயினும் புத னைப் போலவே சூரியனும் கலையுலகில் உள்ளவர்களுக்கும், குறிப்பாகப் படத்துறை, இசைத்துறையில் உள்ளவர்களுக்கு நல்லதொரு கீர்த்தியைத் தரும் வண்ணம் வாய்ப்பை ஏற் படுத்தக் கூடும். புது ஒப்பந்தங்களும், புதுத் தொழிலுக்கான வலுவான நிலையும் கூட உரு வாகலாம். பயன்படுத்திக் கொள்ளுங்கள். மாதத் தின் முதலிரண்டு வாரங்களில் ஒரு பெண் ணால் பிரச்னைகள் உருவாகி, உங்கள் அந்தஸ் துக்குக் களங்கத்தை உண்டாக்கலாம். அதே சமயம் வக்கிர செவ்வாய் உங்கள் எதிரிகளின் செல்வாக்கிற்கும் பங்கம் விளைவித்து, உங்கள் பக்கம் நியாயம் நிற்க உதவிடலாம். ஆயினும் ராகுவால் உங்கள் தாயாரின் உடல்நிலை பாதிக்கப்பட்டுச் சரியாகும். சுபநிகழ்ச்சி ஒன்று மாதத்தின் பின்பகுதியில்தான் கை கூடிவரும். அப்போது வீடு வாங்கும் யோகமும் கூட ஏற் படும். அஷ்டமத்துக் குருவால் புத்திரர்கள் மூலமோ, அல்லது திடீர் உடல்நலக் குறை வாலோ உங்களுக்கு உள்ளத்தாலும், உடலாலும் மனநெகிழ்வும் வருத்தமும் உண்டாகலாம். உங்கள் ஊரில் இருக்கும் கணபதியின் சன்ன திக்குச் சென்று குருவுக்கு அர்ச்சனை செய்ய லாம்.

**ஜவ்வரிசி வடாம் போடும் சீசன் ஆரம்ப மாகி விட்டது. இந்த முறை ஜவ்வரிசி வடாம் போடும் போது 25 கிராம் வெந்தயத்தை ஊறவைத்து முளைகட்டி அரைத்து ¼ கிலோ ஜவ்வரிசியுடன் வேகவைத்து வடாம் போடுங்கள். உடலுக்குக் குளிர்ச்சி.**

**— கிரிஜா. வி.**



## கடக ராசி :



*புனர்பூசம் 4 ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

மாதம் பூராவும் குருவும், புதனும், ராகுவும் உதவும் நிலையில் உள்ளதால் குழந்தைகளின் கல்வியில் முன்னேற்றம் ஏற்படுவதுடன், உங்க ளது தொழிலில் கணிசமான இலாபமும், வாகன யோகமும் ஏற்படும். கல்வியில் முத லிடம் கூட பெறும் வாய்ப்பு உங்கள் குழந்தை களுக்கு உண்டு. அதனால் அளவோடு கண்டித்து, அதே சமயம் அபரிமிதமான உற்சாகத்தையும் மூட்டி அவர்கள் தங்களது தேர்வுகளில் நன்கு எழுது வதற்குத் தயார் செய்யுங்கள். மாதத்தின் பிற்பகுதியில் சூரியன் உச்சம் பெறுவதால் கீர்த் திக்குப் பங்கமிருக்காது. எனினும் அதீத உஷ்ணத் தாலும் அலைச்சலாலும் உடல் நிலை பாதிக்க லாம். இராசிக்கு குரு பார்வை இருப்பதால் விபரீதமாக ஒன்றும் ஏற்பட்டு விடாது. மற்ற படி சனியினால் சில இனங்களில் தோல்வியைத் தழுவ வேண்டி இருக்கும். என்றாலும் அது உங்களைப் பெரும் அளவிற்குப் பாதிக்காது. நீதித்துறை, நிதித்துறை, காவல்துறை ஆகியவை களில் பணிபுரிபவர்கள் கவனமுடன் செய லாற்ற வேண்டிய காலகட்டம். ஆனால் உகந்த முறையில் உங்களை வழிநடத்த குரு தன் பார் வையால் அருள் புரிகிறார். கவலை வேண் டாம். திங்கட்கிழமை களிலும், புதன் கிழமை களிலும் கருட தரிசனம் செய்வது நல்லது.

## சிம்ம ராசி :



*மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம்.*

இராசிநாதனாகிய சூரியன் உச்சம் பெறுகின்ற மாதத்தின்

**என் சிநேகிதி வீட்டிற்குச் சென்றிருந்த போது கவனித்தேன். டெய்லர் வைத்திருப்பது போன்று சற்றுப் பெரிய சைஸ் கத்தரி! சமையலறையில் கீரை, பச்சை மிளகாய், இஞ்சி, தேங்காய் பத்தை போன்றவற்றை நிமிஷமாக பொடிப் பொடியாக நறுக்க உபயோகிக்கிறாள். நாமும் முயற்சிக்க லாமே!**

**— சரோஜா**



பிற்பகுதி அதாவது தமிழ்ப் புத்தாண்டின் ஆரம்பகாலம், உங்களுக்கு நீங்கள் எதிர் பார்க்கும் பதவியை அல்லது ஒரு நண்பரின் உதவியை கண்டிப்பாக பெறுவீர்கள். அதனால் ஆதாயம் உண்டு. ஆயினும் சுக்கிரன் ஒருவரே உங்கள் குடும்பத்தில் அமைதியான சூழ்நிலை யையும், அதே சமயம் சுபநிகழ்ச்சியையும் ஏற் படுத்துவார். மற்றபடி எந்தக் கிரகமும் உதவும் நிலையில் இல்லை. எனவே, எத்துறையைச் சார்ந்தவர்களாக இருப்பினும் எச்சரிக்கை யுடன் செயல்பட வேண்டும். தற்போது கூட்டுத் தொழில் வேண்டாம். புது முயற்சியை யும் தவிர்ப்பது நலம். வெளிநாட்டுப் பிர யாணமோ, உள்நாட்டில் தொலை தூரப் பிர யாணமோ ஏற்பட சுக்கிரன் உதவலாம். புத்தி ரர்கள் விஷயத்தில் சற்று தனிப்பட்ட கவனம் செலுத்தப்பட வேண்டும். அவர்களது கல்வி யில் மட்டுமல்ல, பழகும் பழக்கத்திலும் கூட அவர்கள் மீது உங்கள் கண்காணிப்பு அவசியம். உங்களுக்கு இந்த மாதத்தில் சில சமயங்களில் எந்தக் காரியத்திலும் தடங்கலுக்கு வாய்ப்பு உள்ளது. எனினும் பக்தியினால் எதிர்பார்ப் பதைவிட அதிகம் பெறலாம் என்பதற்கு ஏற்ப இறை உணர்வுடன் செயல்களைச் செய்யுங்கள். கணபதி, துர்க்கை, சுப்பிரமணியர் மற்றும் பெருமாளுக்கும் நெய்விளக்கேற்றுங்கள். உடல் நலம் பாதித்தாலும் மனநலம் நன்கு அமையும். சூரிய நமஸ்காரம் தெரிந்தவர்கள் காலையில் முறைப்படி நமஸ்கரித்து சூரியனது அருளைப் பெறலாம். ஆதித்ய ஹிருதயத்தைப் படிப்பதன் மூலம் கோர்ட் விவகாரங்களில் ஜெயம் பெறலாம்.

## கன்னி ராசி :



*உத்திரம் 2, 3, 4 ஆம் பாதங் கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.*

சிறந்ததொரு காலகட்டம் ஆரம்பம். நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். திருமணத்திற்குக் காத்திருப்பவர்களுக்கு அது சிறப்பாக நடந் தேறும் நிலை உண்டு. நீங்களும் முயற்சிக்க வேண்டும். எட்டில் உள்ள புதன் எத்துறை யினர்க்கும் நல்லதொரு வாய்ப்பினைக் கொடுப் பார். 2-ம் இடத்து இராகுவை குரு பார்ப்பதால் குடும்பத்தில் ஏற்பட இருந்த ஒரு பிரிவினை யைத் தடுப்பார். மாத ஆரம்பத்தில் குடும்பத் தில் இருந்த அமைதி மறைந்து, சுக்கிரனால் மனக்குழப்பம் அதிகமானாலும், மாதத்தின் பிற் பகுதியில் ஓர் எதிர்பாராத தனலாபத்தின் மூலம் அதைத் தடுக்கலாம். பிரயாணம் ஒன்று உண்டு. அது தொழில் சம்பந்தமாகவும், இட மாற்றம் காரணமாகவும், ஏற்பட்டு இலாபகர மாக அமையும். 12-ல் செவ்வாய் இருப்பது சரி யில்லை என்றாலும் சூரியன் உச்சம் பெறுவ தால் மாதத்தின் பிற்பகுதியில் அதன் கடுமை குறையும். கண்நோய், பித்த மயக்கம் இவை ஏற்பட்டுச் சரியாகும். சுபநிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்வதன் மூலம் வஸ்திர லாபம் உண்டு. வங்கித்துறை, மற்றும் அரசு சம்பந்த மான எத்துறையைச் சார்ந்தவர்களுக்கும் வரு வாய் கூடும். பதவியும் உயரும். தன்வந்திரி, மிருத்யுஞ்சய ஜபங்களைச் செய்யலாம். பெரு மாள் கோயில் சென்று தாயாரையும், திரு மாலையும் ஆழ்வாராதிகளையும் ஆஞ்ச நேயரையும் சேவிப்பது நல்லது.

## துலா ராசி :



*சித்திரை 3, 4 ஆம் பாதங் கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.*

குரு, சனி இவர்களால் பாதிப்பு இல்லை. இரும்பு, இயந்திரம், மற்றும் சுரங்கத் தொழில் சம்பந்தப்பட்டவர்களுக்குக் கூடுதலான ஆதாயம் ஏற்படலாம். எனினும் மாதம் பூரா வும் இராசிநாதன் ஏதோ ஒரு விதத்தில் குடும் பத்தில் ஏதாவது பிரச்னைகளை உண்டு பண்ண வாய்ப்புண்டு. எனவே எச்சரிக்கை யுடன் பேசுங்கள். படபடப்பைக் குறைத்துக் கொள்ளுங்கள். மற்றபடி சூரியனால் அரசுப் பணியில் உள்ளவர்களுக்குப் பதவி உயர்வு உண்டு. எத்துறையில் உள்ள பணியாளர்களுக் கும் இது பொருந்தும். ஏதோ ஒரு விதத்தில்

# நீங்க நெனச்சா முடியாதா?



**ஹா**ய் உஷா... என்ன பட்டுப் புடவை அமர்க்களமா இருக்கே. ஏதாவது கல்யாணத்துக்கு போயிட்டு வறியா?

ஆமாம், என்னோட ஆபீஸ்ல ஒர்க் பண்ற மீனாவுக்கு கல்யாணம்.

பாவம் அவ ரொம்ப ஏழை. ஆபீஸ் ஸ்டாஃப் எல்லாரும் சேர்ந்து ஹெல்ப் பண்ணி கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணினோம். கடவுள் புண்ணியத்துல **'Marriage happened well'.**

அப்படியா! ரொம்ப சந்தோஷம். ஆனா, உஷா தப்பா நெனச்சுக்காதே. கடவுள் புண்ணியத்துல கல்யாணம் நல்லபடியா நடந்ததுன்னு இங்கிலீஷ்ல சொல்லணும்னா **'By God's grace the marriage went off well'** னு சொல்லணும். **'happened'** னு சொல்றது சரியில்லை.

இதேபோல ஒரு ப்ரோக்ராம், ஃபங்ஷன், இதெல்லாம் நல்லபடியா நடந்ததுன்னு சொல்லும்போது **'went off well'**ங்கற வார்த்தையை 'யூஸ்' பண்ணணும்.

**The Programme went off well.** புரோக்ராம் நல்லபடியா நடந்தது.

**The function went off well,** ஃபங்ஷன் நல்லபடியா நடந்தது.

கல்யாணம் நல்லபடியா நடந்துதான்னு விசாரிக்கணும்னா,



**Did the marriage go off well?**னு கேக்கணும்.

ஃபங்ஷன் எப்படி நடந்ததுன்னு விசாரிக்கணும்னா.

**How did the function go off?** னு கேக்கலாம். இதேபோல

**How did the marriage go off?** கல்யாணம் எப்படி நடந்தது?

**How did the programme go off?** ப்ரோக்ராம் எப்படி நடந்தது என்றெல்லாம் விசாரிக்கலாம்.

'கவலைப்படாதே எல்லாம் நல்லபடியா நடக்கும்' என்று மற்றவர்களை தைரியப்படுத்தும்போது **Don't worry, everything will go off well** னு சொல்லணும்.

**Thank you** ஹேமா, நீ சொன்ன விஷயமெல்லாம் ரொம்ப யூஸ்ஃபுல்லா இருக்கு. ஆனா ஒரு சந்தேகம் நீயும் என்னோட ஒரே ஸ்கூல்ல ஒண்ணாத்தானே படிச்சே, உன்னால மட்டும் எப்படி இவ்வளவு நல்லா இங்கிலீஷ்ல பேச முடியறது?

ஓ... அதுவா... நான் **விவேகானந்தா கல்வி நிலையத்துல** சேர்ந்து இங்கிலீஷ் பேச கத்துக்கிட்டேன்.

அப்படீன்னா நானும் இந்த கோர்ஸ்ல சேர்ந்தா இங்கிலீஷ்ல பேசக் கத்துக்க முடியுமா?

'நிச்சயம் முடியும் உஷா.

**Thank you** ஹேமா, நானும் உடனே **Join** பண்றேன்.

**'All the best** உஷா'



இதுவரை உங்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டு உங்கள் மன அமைதியைக் கெடுத்துவந்த உங்களது அனுகூலச் சத்துரு உங்களை விட்டு விலகி உங்களுக்கு மனநிம்மதி ஏற்பட கேது உதவுவார். கவலை வேண்டாம். பழைய பாக்கிகள் வசூலாகலாம். அதைக் கொண்டு ஏதேனும் தவணை முறையில் பொருளை வாங்கி நீங்கள் கடனாளி யாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். இராகு வால் ஏதேனும் ஒருவிதத்தில் தன நஷ்டமோ, மனக்குழப்பமோ, வருத்தமோ கூட ஏற்பட வாய்ப்பு உண்டு. ஒரு பெண் மூலம் வீட்டில் சில்லறைத் தொல்லைகள் ஏற்பட்டு குடும்பத் தில் சலசலப்பு ஏற்பட்டு அடங்கும். உங்கள் இஷ்ட தேவதைகளை மனதாரத் துதியுங்கள். துன்பங்கள் தூசாகி விடும்.

## விருச்சிக ராசி :



*விசாகம் 4 ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

மாதம் பூராவும் புதனால் அனுகூலம் உண்டு. எனவே வியாபாரம், சோதிடம், மருத்துவம் மற்றும் மர்மக்கலைகளைச் சார்ந்தவர்களுக்கு முன்னேற்றம் ஏற்படும். ராகு 11-ல் இருப்பதால் தாகப்பனார் வழி சொத்து சம்பந்தமான தாவாவில் வெற்றி கிடைக்கும். மாதத்தின் பிற்பகுதியில் சூரியனால் அரசுத் துறையில் உள்ளவர்களுக்கும், அரசியலைச் சார்ந்துள்ளவர்களுக்கும் நற்பயன்கள் விளையலாம். மாதத்தின் முற்பகுதியில் வீட்டில் சுப நிகழ்ச்சி ஒன்று நடக்கும். திருமணம் நடக்கும் வாய்ப்பும் எதிர்பார்த்திருப்பவர்களுக்கு நடக்கலாம். அதே சுக்கிரன் பிற்பகுதியில் குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகளை உருவாக்கித் தாம்பத்ய வாழ்வில் அமைதியின்மையை உண்டாக்கலாம். மற்ற கிரகங்கள் யாவும் அனுகூலமான நிலையில் இல்லைதான் எனினும் செவ்வாய் ஆட்சி உச்சம் பெற்றிருந்தாலும் அல்லது சனி, குரு ஆகியவர்கள் நல்ல நிலையில் ஜாதகத்தில் அமைந்திருந்தாலும் அவர்களது தசாபுக்தி நடந்தாலும் இந்த கோட்சாரம் உங்களை அவ்வளவாகப் பாதிக்காது. ஸ்ரீ சுப்பிரமணியருக்கும் சனீஸ்வரனுக்கும் அர்ச்சனை செய்யுங்கள். இந்த மாதத்தில் உங்களுக்கு எந்தவிதத்திலாவது நல்லதொரு மாற்றம் நிகழும். அது உத்தியோக ரீதியாகவும் அமையலாம். அல்லது தொழில் ரீதியாகவும் கூட ஏற்படலாம். ஸ்ரீ சுதர்ஸன மந்திரத்தையோ, அல்லது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையோ, பாராயணம் செய்வது நல்லது.

## தனுசு ராசி :



*மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம்.*

ஆண் மூலம் அரசாளும் என்பார்கள். நட்சத்திரத்தின் காரணமாகத் தடைபட்டுக் கொண்டிருந்த உங்கள் திருமணம் இந்த மாதத்தில் நிச்சயமாக நடக்கும் வாய்ப்பு உள்ளது. ஆண்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தால் தோஷமில்லை என்றும், பெண்களுக்கு மூலம் நட்சத்திரமாக இருந்தால் மாமனாருக்கு ஆகாது என்று கூறினாலும், மற்ற கிரகங்கள் சாதகமாக அமைந்து, உங்கள் இராசிநாதனாகிய குருவின் பார்வை இராசிக்கு இருப்பின் மேற்படி தோஷம் விலகி விடும். தற்போது குருபலம் கைகூடி வந்துள்ளதால் முயற்சிக்கவும். சுகஸ்தானம் எனும் 4-ம் இடத்தில் மாத ஆரம்பத்தில் நான்கு கிரகங்கள் உள்ளதால் தாயாரின் உடல்நிலை பாதிக்கப்பட்டு சரியாகும். மாதம் பூராவும் சுக்கிரனின் ஆதிக்கம் சாதகமாக இருப்பதால் குழந்தைகளின் கல்வி, மனைவியின் உடல் நிலை, மற்றும் பொருளாதார நிலை நன்கு அமையும். உத்தியோக ரீதியாகவோ, அல்லது தொழில் நிமித்தமாகவோ குடும்பத்தை விட்டுச் சிறிது காலம் வெளியூரில் தங்க வேண்டி வரலாம். அதனால் நன்மையே அதிகம் கிடைக்கும். ரோக ஸ்தானத்தையும், எட்டாமிடத்தையும் மற்றும் 10-ம் இடத்தையும் குரு பார்ப்பதால் உடல்நிலை, மற்றும் பொருளாதார நிலை நன்கு அமையும். கவலை வேண்டாம். தட்சிணா

---

**ரோட்டி-செஃப் வாங்கிவிட்டு, சப்பாத்தி சரியாக வரவில்லையேனில் அதைத் தூக்கி விட்டெறிய வேண்டாம். சப்பாத்தி மாவை சிறு சிறு உருண்டைகளாக்கி ரோட்டி செஃபில் பூரிகளாக்கி, பேப்பரில் பரத்தி பூரி பொரிக்கலாம். கையால் இடுவதை விட வேகமாக வேலை நடக்கிறது. தட்டை மாவையும் இதே போல் பண்ணலாம். ரோட்டி செஃப் பூரி செஃப் ஆகிவிடும்.**



**— ராஜேஸ்வரி**

மூர்த்திக்கு அர்ச்சனை செய்துவிட்டு வரலாம்.

## மகர ராசி :



*உத்திராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.*

உங்கள் இராசிநாதன் நீச்சம் பெற்றாலும் சனியுடன் பரிவர்த்தனை பெறுவதால் அவரால் உங்களுக்கு எந்தவித பாதிப்பும் இல்லை. 3-ம் இடத்தில் உள்ள கேது, சனி, மற்றும் 4-ம் இடத்தில் உள்ள புதன், ஆகியவர்களுடன், சுக்கிரனது சஞ்சாரமும் மாதம் பூராவும் எல்லாவிதங்களிலும், எத்துறையில் உள்ளவர்களுக்கும் உதவும் நிலையிலேயே இருப்பதால், உங்கள் முயற்சியில் வெற்றி உண்டு. குடும்பத்தில் குதூகலமும் மகிழ்ச்சியும் நிறைந்து காணப்படும். சுபநிகழ்ச்சிகள் காரணமாக உறவினர்களது வருகை இருக்கும். கடன் திரும். அடகு வைக்கப்பட்ட நகைகள் மீட்கப்படலாம். ரியல் எஸ்டேட் எனும் மனை வாங்கி மற்றும் கட்டிடம் கட்டி விற்பவர்களுக்கு மட்டுமே அங்காரகன் 8-ம் இடத்தில் இருப்பதாலும், இராகு 9-ல் உள்ளதாலும் சில தடங்கல்கள் ஏற்பட்டு, பொருளாதாரத்தில் சிக்கல்கள் ஏற்படும். எனவே, ஹேரம்ப கணபதி ஹோமம் ஒன்றுடன் லக்ஷ்மி ஹோமம் ஒன்றையும் செய்வதன் மூலம் சிக்கல்களிலிருந்து விடுபடலாம். மற்றபடி மகர ராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு முழுவதுமே கிரகங்களில் பெரும்பான்மையானவை உதவும் நிலையிலேயே இருக்கும். சூரியன் மாதத்தின் முற்பகுதியில் 3-ம் இடத்திலிருந்து கீர்த்தியை வழங்குவார். அரசியல்வாதிகளுக்கு ஆதாயம் தரும் மாதமாகவே இருக்கும். அரசுத் துறையில் உள்ளவர்களுக்குப் பதவி உயர்வு உண்டு. பெண்களைப் பொறுத்த மட்டில் இந்த மாதம் பலவிதங்களில் இலாபகரமாக இருக்கும். புத்திரகாரகன் நீச்சம் பெற்றதும் 9-ல் இராகு இருப்பதும் சரியல்ல. பரிவர்த்தனை பெற்றாலும் குழந்தைகளைப் பற்றிய பிரச்னைகளைப் பொறுத்து குரு பலவீனமானவரே. இதற்கு தட்சிணாமூர்த்தியையும், சரஸ்வதி தேவியையும், தோத்திரம் செய்வதுடன் கோளறு பதிகத்தையும் படித்தல் நல்லது.

## கும்ப ராசி :



*அவிட்டம் 3, 4 ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 ஆம் பாதங்கள்.*

சுக்கிரன் மாதம் பூராவும் உதவும் நிலை. அதனால் குடும்பத்தில் அமைதி உண்டு. குழந்தைகளுக்காகக் காத்திருப்பவர்களுக்குக் குழந்தை உண்டாகும் யோகமும் சுக்கிரனால் உண்டு. அத்துடன் மாதத்தின் முற்பகுதியில் உங்களுக்கு ஏதோ ஒருவிதத்தில் பாராட்டும், புகழும் கிடைக்கும். கலைஞர்களுக்கு ஏற்றமுடைய மாதம். குறிப்பாக நுட்பக் கலைஞர்களுக்குக் கட்டாயம் முன்னேற்றம் தருகின்ற காலகட்டம். பெரும் பதவியும் கிடைக்கும். இது எத்துறையில் உள்ள எத்தகைய பணியாளர்களுக்கும் பொருந்தும். ஒரு சிலருக்கு அரசு சார்பிலிருந்து சில கௌரவப் பதவி கூட கிடைக்கும். சூரியன் கூட மாதத்தின் பிற்பகுதியில் நல்லதொரு நிலையில் உலாவுவதால் படத் தயாரிப்பாளர்கள், கலைஞர்களுக்கு எதிர்பார்த்த தனலாபம் வரும். எனினும் 3-ல் உள்ள புதனால் அரசியல்வாதிகளுக்கும், அரசுத்துறையிலும், தொழில் நிறுவனங்களிலும் உள்ள மேலதிகாரிகளுக்கும் ஏதேனும் ஒருவிதத்தில் அரசாங்கத்தின் மூலம் தொல்லைகள் ஏற்படலாம். எனவே, அப்படிப்பட்டவர்கள் எச்சரிக்கையுடன் செயல்புரிவது நல்லது. 7-ல் உள்ள செவ்வாய் வாழ்க்கைத் துணையின் நலனில் ஏதேனும் இன்னல்களைத் தரலாம். அது உடல் நிலை காரணமாகவும், அமையலாம். அல்லது வேறொருவரின் தலையீடு காரணமாகவும் இருக்கலாம். எனவே, இடம் பொருள் ஏவல் அறிந்து அதற்கேற்ப உங்கள் நாக்கை உணவு விஷயத்திலும் சரி, பேசும் முறையிலும் சரி அளவோடு வைத்திருப்பது நல்லது எனத் தோன்றுகிறது. ஒரு தூரத்து உறவினர் பற்றிய கவலையை ராகு தரலாம். எனவே, குருவாயூரப்பனையும் பழனி முருகனையும் தரிசனம் செய்து விட்டு வரலாம். வாய்ப்பும் வசதியும்



**கேசரி செய்யும் போது, தண்ணீரின் அளவை குறைத்து, பால் ஒரு டம்ளர் சேர்த்துக் கொண்டால் சுவை கூடும். புதுமையாகவும் இருக்கும்.**

**— ஜெயா**

இல்லாதவர்கள் வாய்மொழியாகவாவது அவர்களைப் பிரார்த்திக்கலாமே!

## மீன ராசி :



*பூரட்டாதி 4 ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

அசுர குருவான சுக்கிரனும், தேவ குருவான பிரகஸ்பதியும் உதவும் நிலையில் உள்ளனர். 11-ம் இடத்தில் உள்ள குருவுக்கு ஏகாதசிப் பிரகஸ்பதி என்ற பெயரும் உண்டு. எனவே, அவரால் நன்மைகள் இல்லை என்றாலும் தனது பார்வை மூலம் உங்கள் குடும்பத்திற்குரிய பொருளாதாரத் தேவையைச் சிரமமின்றி நீங்கள் வைத்திருக்க உதவுவார். குழந்தைகளின் கல்வியில் முன்னேற்றம் உண்டு. கணவன் மனைவி உறவு சுமுகமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும். சுக்கிரனால் வீடு வாங்கவும், தாம்பத்ய உறவில் மகிழ்ச்சியாக இருக்கவும், மற்றும் பதவி உயர்வொன்று பெறுவதற்கும் தேவையான சுபிட்ச நிலை இருக்கும். கட்டிடக் காண்ட்ராக்டர்கள், கலைப்பொருள் வியாபாரிகள் அரசுத்துறை, வங்கித் துறைப் பணியாளர்கள் ஆகிய அனைவருக்கும் திருப்திகரமான சூழ்நிலை எல்லா விதத்திலும் நிலவும். 6-ம் இடத்தில் உள்ள வக்கிர செவ்வாய் நிலமொன்று வாங்க உதவுவார். தொழிற் சாலையொன்றை நிர்மாணிக்கவும் வாங்கவும் கூடும். கேது, சூரியன் போன்ற பாவ கிரகங்களால் சிறு சிறு சோதனைகள் ஏற்படுவதற்கு வாய்ப்பு உள்ளது. பரிவர்த்தனை பெறும் ஜென்ம சனியால் சிரமம் ஏற்பட நியாயமில்லை என்றாலும் 7½ சனியின் பிடியில் அல்லவா உங்கள் ராசி அமைந்துள்ளது! எனவே ஒரு கணபதி ஹோமம், நவக்கிரக ஹோமம் இவைகளைச் செய்யுங்கள். அல்லது உலகநலனுக்காக ஆன்மிக ஆன்றோர்களால் நடத்தப்படுகின்ற ஹோமங்களில் உங்களால் இயன்ற அளவு பொருளுதவி செய்து கலந்து கொண்டு ரட்சை பெறலாம்.

## மாதம் ஒரு மந்திரம் :

**நோ**யற்ற வாழ்வே குறைவற்ற செல்வம். எனவே நாம் ஆரோக்யத்துடன் வாழ அநேக வழிமுறைகளை நமது முன்னோர் வகுத்தளித்துள்ளனர். குறிப்பாகப் பிரார்த்தனை மூலம் எதிர்பார்ப்பதை விட நாம் அதிகம் ஆண்டவனிடமிருந்து பெற முடியும். அந்த வகையில் நம்மை நோய் நாடாமல் இருக்கவும், அப்படி மீறி நோய் வந்தால் அதிலிருந்து நம்மைக் காத்துக் கொள்ளவும் கீழ்க்காணும் மந்த்ரம் உதவியாக இருக்கும். இதைத் தினமும் படிப்பது நல்லது. அத்துடன் நாம் மருந்து சாப்பிடும் போதோ, அல்லது குழந்தைகளுக்கு ஊட்டும் பொழுதோ கூட இந்த மந்திரத்தைக் கூறினால் நோய் சீக்கிரம் குணமடையும்.

***ஓம் நமோ பகவதே வாஸு தேவாய***
***தந் வந்தரயே அம்ருத கலச ஹஸ்தாய***
***ஸர்வ ஆமய நாசனாய***
***த்ரைலோக நாதாய***
***ஸ்ரீ மகா விஷ்ணுவே நம:***

**பின்குறிப்பு :**

வாசக அன்பர்கள் அனைவரும் எதிர்வரும் ஈசுவர ஆண்டில் அனைத்து நலன்களும் பெற வேண்டுமென வாழ்த்துவதுடன், நம்மை ஆளும் பரம்பொருளின் பெயரையே தாங்கிக் கொண்டு வரும் ஈசுவர ஆண்டானது வளங்கள் பெருகி, வான் பொய்யாது பொழிந்து, நிம்மதியானதொரு வாழ்வு வாழ அனைத்து மக்களுக்கும் உதவிடும் என்பதையும் கூற விரும்புகிறோம். அத்தகையதொரு நல்ல நிலை ஏற்பட நாமும் எல்லாம் வல்ல பரம்பொருளை பிரார்த்திப்போமாக.

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**



பாஸந்தி செய்ய எளிய வழி. தினமும் வாங்கும் பாலைக்காய்ச்சி ஃபிரிட்ஜில் வையுங்கள். ஆடை நன்றாகப் படியும். தினமும் இந்த ஆடையை எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு ஃபிரிட்ஜிலேயே வைக்கவும். ஒரு வாரம் சென்று அரை லிட்டர் பாலில், தேவையான சர்க்கரை சேர்த்துக் கொதி வந்தவுடன் எடுத்து வைத்திருக்கும் ஆடையைச் சேர்த்துக் கிளறி ஏலப்பொடி, முந்திரி, சாரப்பருப்பு சேர்க்கவும். சுவையான பாஸந்தி ரெடி.

— சந்திரா




# இந்தியனாகட்டும் அல்லது வெஸ்ட்
# இந்தியனாகட்டும். திறமைசாலிகளின்
# கருத்து இதுவே. பெஸ்ட் பைனாப்பிள்,
# ரஸ்னா பைனாப்பிள்.

அறிமுகப்படுத்துகிறோம் புதிய ரஸ்னா பைனாப்பிள் ரிச். ஒவ்வொரு கோப்பை உங்களுக்கு அளித்திடும் குளிர்ச்சியான, புத்துணர்வூட்டும், மகிழ்ச்சிகரமான சுவை. வெஸ்ட் இந்தியத் தீவுகளின் பரவசமூட்டும் அசல் பைனாப்பிள் சுவையை நீங்கள் பெறுவீர்கள். ஆகையால் தான், அனைவரும், இந்தியனாகட்டும் அல்லது வெஸ்ட் இந்தியனாகட்டும் பைனாப்பிளின் சுவையைப் பருகி மகிழ புத்துணர்வூட்டும் ரஸ்னா பைனாப்பிள்தான் சிறந்த வழி என ஒப்புக்கொள்கின்றனர்.
இதற்கு நிகர் வேறொன்றும் இல்லை.





# கர்பிணி பெண்களே இது உண்மையா? . . .

மருத்துவமனை பிரசவ மேசைகள் கடைநிலை ஊழியரால் மிகவும் கவன குறைவாக சுத்தம் செய்யப்படுகிறதே . . .

பிரசவ மேசையில் விரித்த ரப்பர் சீட்டுகளை கொதிநீரில் STERILIZE செய்ய முடியாது. செய்வதும் இல்லை.

எத்தனையோ பேர் பயன்படுத்தி கறை படிந்த அந்த ரப்பர் சீட்டுகளில் நீங்களும் படுத்தால், உங்களுக்கும், குழந்தைக்கும் **Infection** ஆகுமே . . . உண்மையா?

பிரசவத்தின் போது இரத்தம், AMNIOTIC நீர் மற்றும் கழிவுகளில் இடுப்பு நனைந்து, முதுகு முதல் தலைவரை பரவி, பல மணி நேரங்கள் நனையும் போது அருவருப்பாக இருக்குமே, உண்மையா.

பிரசவம் தாமதம் ஆகி, பலமணி நேரங்கள் இரும்பு மேசை மேல் கஷ்டப்படும்போது குறுக்கில் உராய்வு ஏற்பட்டு ரணமாகி விடுகிறதே . . . இது உண்மையா? . . .

வெளிநாடுகளில் கண்டறிந்த முறைப்படி நேர்த்தியாக செய்யப்பட்ட **Gynae Care** யை டெலிவரி டேபிள்களில் விரித்துவிட்டால், உங்களையும், உங்கள் குழந்தையையும் INFECTION ஆகாமல் அரண்போல் பாதுகாக்கிறது. இரத்தம் இடுப்பிற்கு மேல் பரவாமல் தடுத்து, உங்களை சுத்தமாக வைத்து இருக்கிறது.

குட்டி மெத்தை போன்ற Gynae Care இடுப்பிற்கு கீழ் இதமாக இருந்து உராய்வை தடுக்கிறது. தாய் போல் காக்கும் Gynae Care பிரசவத்திற்காக போகும்போது நீங்களே, எங்களிடம் வாங்கிக் கொண்டு போங்கள்.

ரூ. 105/- M.O./D.D. அனுப்பினால் கொரியர் மூலம் உடனே அனுப்புவோம்.

தயாரிப்பாளர்கள்

**Vishal Health Care Products**
25, Mudaliyar South Street
Kottar, Nagercoil 629 002
Ph: 04652-26861

**WANTED DISTRIBUTORS**




# Always Ask



Key BRAND

**ICE CREAM POWDER**

**CUSTARD POWDER**

**BAKING POWDER**

**JELLY CRYSTALS**




Unique Advtg. Ph: 457828

MFD. BY ✆ 452293
ROOPAM ENTERPRISES
MADRAS-600 035.

**இன்றைய நடுத்தர வயதுப் பெண்கள் ஏராளமான உடல் ரீதியான, குறிப்பாக மாதவிடாய் கருப்பை பிரச்னைகளோடு வாழ்கிறார்கள். எதிர்கால பெண்களாவது இத்தகைய பிரச்னைகள் இல்லாமல் வாழ ஆரம்ப முதலே அவர்களை ஆரோக்கியமாக வளர்க்க வேண்டும் என்று கூறும் டாக்டர் எஸ். ஜெயராம் அதற்கான வழிமுறைகளையும் கூறுகிறார்....**



• டாக்டர் ஜெயராம்

# வருங்காலப் பெண்களுக்கு...

②

**டாக்டர் எஸ். ஜெயராம்**

சிறுமி என்னும் நிலைமாறி பெரிய வளாகும் நிலைதான் இரண்டாவது காலகட்டம். இது பெண்களின் வாழ்வில் மிகவும் முக்கியமாக இடம் பெறுவதாகும். உடல் ரீதியாக மட்டுமின்றி மனரீதியாகவும் அவளிடம் ஏற்படும் மாறுதல்கள். 7 வயது முடியும் நேரம்தான் மொட்டு போன்ற அமைப்பு கொண்ட கருப்பை விழிப்பு ஏற்பட்டு வளரத்துவங்கும். 14 வயதாகும் நேரம் கருப்பை வளர்ந்து 7 வயதிலிருந்ததைப் போல இரண்டு மடங்காகியிருக்கும்.

இரண்டாம் கட்ட வளர்ச்சியில்தான் அவள் பெண்ணாகிறாள். மொட்டு மலர்ந்து மலராகி மணம் வீசுவது இந்த நேரத்தில் தான். மூளையின் பகுதியில் அமைந்துள்ள பிட்யூட்டரி சுரப்பியில் ஒரு புதிய இயக்கம்/ஒரு விழிப்புணர்வு. உடலில் அவள் தானே தன்னை பார்த்து வியந்து கொள்ள வைக்கக்கூடிய சில மாற்றங்கள், மனதிலும் சில மாற்றங்கள். ஓடியாடி ஆட்டம் போட்ட அவள் அடங்கி - காரியார்த்தமாக சிந்திக்க ஆரம்பிக்கிறாள். இதனால்தான் கிராமப்புறங்களில் பருவமடையாத பெண்களை "புத்தியறியாத பெண்" என்று சொல்வது வழக்கம்.

இந்தக் காலகட்டத்தில் உணவு விஷயத்தில் அதிகக் கவனம் தேவை. மனம், உடல் இவைகளுடன் மிக முக்கியமான உள்ளுறுப்பான 'கருப்பை' வளர்ச்சியும் நேராக அமைய, வேண்டாததைத் தவிர்த்து சில முக்கியமான உணவுகளைத் தர வேண்டும். உணவின் தன்மைகளை பொருத்துதான் ஹார்மோன் சுரப்பிகளின் சீரான வளர்ச்சி அமையும். தகுந்த வயதில் பருவமடைவதற்கும், கருப்பை சம்பந்தப்பட்ட பிரச்னைகள் இல்லாமல் இருப்பதற்கும் உணவு முறைகளும் அடிப்படை காரணங்களாகும்.

சுற்றுச் சூழலுக்கு ஏற்ப உடற் பயிற்சி செய்ய வேண்டும். விளையாட்டுகளும் இருந்தால் மிகவும் நல்லது. இப்படி தனியாக எதுவுமில்லாத நிலையில் பள்ளியில் தரும் பயிற்சிகளையும், விளையாட்டுக்களையுமாவது ஊக்குவிக்க வேண்டும். அனைத்து அம்சங்களும் ஒரு சேர அமைந்து முழுமையான பெண்மை உருவாகும் காலம் இது என்பதைத் தாய்மார்கள்

மனதில் கொள்ள வேண்டும்.

கணைச்சூடு உடலின் உள்ளுறுப்புகளை எப்படி பாதிக்கிறது என்பதை சென்ற இதழில் பார்த்தோம். உடல் வறண்டு மிகவும் ஒல்லியாகப் போய் காட்சி தரும் பிள்ளைகள் அநேகம் பேர் உண்டு. இதற்குப் பாட்டியின் கைவைத்தியமான கற்றாழை சோறு வைத்தியம் நல்ல பலன் தரும். 'தண்ணீர் விட்டான் கிழங்கு' சேர்த்துச் செய்யப்படும் சர்பத்களும், மருந்துகளும் நல்ல பலன் தரும். பூலாத்தி நெய், வில்வாதி நெய், கதலிப்பழ இளகம் போன்றவை வறண்டு வளர்ச்சியில்லாமலுள்ள பெண்களுக்கு நல்ல வாளிப்பான வடிவம் தருவதுடன் கருப்பை வளர்ச்சி பெறவும் உதவும்.

இந்த வயதுகளில் விதை அதிகமுள்ள பழங்கள், இனிப்பு, புளிப்பு, துவர்ப்புச் சுவைகள் உள்ள பழங்களை நிறைய உண்ண வேண்டும். மாதுளம்பழம் மிகவும் நல்லது. ¾ பங்கு பழுத்து செம்பழமாக உள்ள கொய்யாப்பழம் நிறைய உண்ண வேண்டும். பால், மோர், நெய், தயிர் போன்றவைகளை உணவில் அதிகம் சேர்க்க வேண்டும். விதை அதிகமுள்ள பழங்களை உண்ணுவதால் கருமுட்டைகளை உருவாக்கும் 'ஓவரி'கள் வளர்ச்சியும், வலுவும் பெற இது உதவும்.

கருமுட்டை உருவாகும் பைகள் (ஓவரிகள்) சரிவர கவனிக்கப்படாவிட்டால் அதில் நீர்க் கட்டிகள் உருவாகவும், அதிகமான ரத்தப் போக்கு, மகப்பேறு இல்லாமல் போதல் போன்ற பலவித மாதவிலக்கு கோளாறுகளுக்கு ஆரம்பமாகவும் அமைந்து விடும். பால், தயிர் சேர்த்துக் கொள்ளுவதால் உடலில் கொழுப்புச் சத்து சேர்ந்து உடல் அதிகமாகப் பெருத்து விடும் என்ற எண்ணமே வேண்டாம். இதற்காகத்தான் சில முக்கிய உடற்பயிற்சிகளோ/ விளையாட்டோ தேவை என்பது.

உடல் பருமன் பாரம்பரியத்தினாலும் வருவது என்பதை மறக்கக் கூடாது. சாக்லேட் போன்ற தவிர்க்க வேண்டியவைகளை ஒதுக்க முடியவில்லை என்னும் போது முக்கிய சத்துள்ள உணவுகளை உண்ட பின்பு அவைகளை ஒன்றிரண்டு மேலே தரலாம். ஆனால் அவைகளே உணவாகக் கூடாது. பால், வெண்ணை, நெய், இனிப்பு சேர்ந்த பொருட்கள் கோழை சத்துக்களைப் பெருக்கி மூளை, நிணநீர் மண்டலத்துக்கு ஊட்டமும், சுரப்பிகளுக்கு வலுவும் தருகிறது. பாலியல் தன்மையை போஷிக்கிறது என்கிறது சித்த மருத்துவம்.

நேரத்தோடு படுக்கைக்குச் செல்வதுதான் சாலச் சிறந்தது. இரவு ஒருமணி, இரண்டு மணி வரை கண்விழித்து தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பார்ப்பது நம் காலநிலைக்கு நல்லதல்ல. முன்பெல்லாம் இரவு 9.30 மணிக்குள் உறங்குவதும், அதிகாலையில் விழிப்பதும் வழக்கம்.

EMERALD CORAL

# யார் அந்த அதிர்ஷ்டசாலி

பெரியவர்களா?- முதல் பரிசு 2-ம் பரிசு 3-ம் பரிசு
(ரூ.10,000, ரூ.7,000, ரூ.3,000)

குழந்தைகளா? (30 மாணவர்களுக்கு ரூ700 மதிப்புள்ள
நோட்டுப்புத்தகங்கள். L.K.G.முதல் +2 வரை)

**இப்பரிசுத் திட்டம் ரூ.201/- செலுத்தி ஜாதகம் பார்ப்பவர்களுக்கு மட்டுமே!**

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சனைகளுக்கும் தீர்வு நிச்சயம் உண்டு. அவ்வாறு ஏற்படும் பிரச்சனைகளை அவர்களின் ஜாதகத்திற்கு ஏற்றாற் போல் எண் கணிதம், கைரேகை, ஜாதகம் முதலியவைகளைக் கொண்டு பல கோணங்களில் ஆராய்ந்து கைதேர்ந்த ஜோதிடர்களால், ஜீவனுள்ள அதிர்ஷ்டக் கற்களை "ஜெய்ப்பூர் ஜெம்ஸ் அண்ட் ஜுவல்ஸ்" பரிந்துரை செய்கிறது.

**முக்கிய அறிவிப்பு ;**

**முக்கியமாக மார்ச் 97 முதல் ரூ 201/- செலுத்தி காசெட் மூலமாக, நாங்கள் பரிந்துரைச் செய்யும் அதிர்ஷ்டக் கற்களை அணிந்து ஒரு வருடத்திற்கு பின் பிரச்சனைகள் தீரவில்லை என்று கருதுபவர்களின் கற்களை சிறிதளவு தள்ளுபடி செய்து நாங்களே எடுத்துக் கொள்கிறோம். இது போன்ற சவாலை வேறு யாரும் தர முடியாது. ஏனெனில், நாங்கள் வழங்கும் கற்கள் சுத்தமான, ஜீவனுள்ள அதிர்ஷ்டக் கற்கள் என்பது உறுதி.**

வெளிநாட்டில் வாழும் இந்தியர்கள் மற்றும் வெளிநாட்டினர் எங்களை E-Mail மூலம் நேரடியாக தொடர்பு கொள்ளலாம். 14 யு.எஸ். டாலர்கள் (அ) ரூ. 450/-ஐ D.D. யாக Mr. Rajendrakumar M. Metha என்ற பெயருக்கு அனுப்பி தங்களின் எதிர்கால பலன்களை உடனடியாக பெற்றுக் கொள்ளலாம். இதனுடன் ஜாதகம், பிறந்த இடம், பிறந்த தேதி, நேரம், உங்களுடைய E.Mail Number முதலியவற்றையும் குறிப்பிட்டு அனுப்ப வேண்டும்.

**E.Mail Address: punitrm @ giasmda. vsnl. net. in**

வெளியூர் அன்பர்கள் தங்கள் ஜாதக நகலுடன் ரூ. 101க்கு நீங்கள் எந்த ஜாதிக் கற்கள் அணிந்து கொள்ளலாம் என்று மட்டும் சொல்லப்படும். ரூ. 151/-க்கு நீங்கள் ஜாதகத்துடன் கேட்கும் ஐந்து கேள்விகளுக்கு பதில் அளிக்கப்படும். ரூ. 201/-க்கு முழு பலன்களும் ஆடியோ கேசட் மூலம் தரப்படும். ஜாதகத்துடன் கொரியர் சார்ஜ் (தமிழகம் ரூ. 25/-, தென் மாநிலங்கள் ரூ. 30/-, வடமாநிலங்கள் ரூ. 60/- ) சேர்த்து அனுப்ப வேண்டும்.

Sri Rajendra Kumar M. Mehta.

**JAIPUR GEM'S 'N' JEWEL**

On Appointment only

NEAR PANAGAL PARK, OPP. A.R.R. COMPLEX
52-A, NORTH USMAN ROAD, T.NAGAR, MADRAS - 600 017.
SOUTH INDIA, TAMIL NADU, PHONE : 8253404 PAGER NO: 9632-709074
WORKING HOURS : 10.00 A.M. TO 7.30 P.M. SUNDAY HOLIDAY

RUBY (எல்லா ஜாதிக்கற்களும் எங்களிடம் கிடைக்கும்) PEARL

உலகத்தில் உள்ள பல கோடி மக்களின் நோய்கள் ஜீவனுள்ள கற்கள் அணிவதன் மூலம் குணமாக சாத்தியமுண்டு

CAT'S EYE
SAPPHIRE
DIAMOND
PUSHPARAGAM
GOMETHAKAM

ஆனால் இன்று நிலைமை தலைகீழாகி விட்டது. இது மூளையின் இயல்பான செயல் பாட்டை பாதிக்கும். 8 மணி நேர இரவு உறக்கம் ஆரோக்கிய வாழ்க்கைக்கு அவசியம் தேவை. மூளையின் செயல்பாட்டை பொறுத்து தான் மற்ற உறுப்புகளின் செயல்பாடுகள் அமையும். இதனால்தான் வாரம் இருமுறை எண்ணெய் குளியல் திட்டம் வேண்டும் என் பார்கள் பாட்டிமார்கள்.

இந்த வயதுகளில் மலரும் பருவத்தில் மூளை நரம்பு மண்டலம், பாலியல் உறுப்புகள் போன்றவைகளை வலுப் பெறச் செய்யும் உணவு வகைகளில் மிகவும் முக்கியமானது உளுத்தங்களி என்பது மிகவும் பிரசித்தம். இன்றைக்கு 35 வயது கடந்த தாய்மார்கள் இதைக் கண்டிப்பாக உண்டு இருப்பார்கள். பெண்களுக்கு இந்த உளுத்தங்களி எத்தனை பெரிய நன்மை செய்கிறது என்று தெரிந்த வர்கள் நம்மில் எத்தனை பேர்? மூளை மற்றும் நரம்பியல் நோய்களுக்கு 'மஹா மாவு தைலம்' என்ற விசேஷமான 'பிடி' தைலம் (மஸாஜ் எண் ணெய்) இன்றும் கூட உண்டு. இந்த எண் ணெயில் முக்கியமாகப் பயன்படுவது உளுந்து தான் என்றாலே உளுந்தின் பெருமை புரியும். வறண்ட சருமம், வளராத மார்பகம், ஒட்டிய கன்னங்கள், இவைகளை சரியாக்கி கருப்பை மற்றும் அதனைச் சார்ந்த உறுப்புகளையும் அடிப்படையிலேயே பலப்படுத்தி உடல் வளர்ச்சிக்கு உதவும். முக்கியமாக கர்ப்ப சூடு தணிவதால் சீரான வளர்ச்சிக்கு வழியாகிறது. தினந்தோறும் காலை நெல்லிக்காய் அளவு பசு வெண்ணெயை விழுங்கி வருவதும் நல்ல பலன் தரும்.

### உளுந்தங்களி செய்யும் முறை :

தோல் நீக்காத உளுந்து 1 பங்கு, புழுங்கல் அரிசி 1½ பங்கு, (விரும்பினால் சமபங்கு) இவைகளின் மொத்த அளவில் 1/16 பங்கு வெந்தயம் சேர்க்க வேண்டும். வெந்தயத்தை கற்றாழை சாறு அல்லது தயிர் தெளிவில் ஊற வைத்து உலர்த்தி சேர்க்க வேண்டும். பின்பு லேசாக வறுத்து இவைகளை மிஷினில் அரைத்து மாவாக்கி வைத்துக் கொண்டு 1 அல்லது 2 அகப்பை மாவினை திட்டமான அளவு நீரில் கரைத்து நன்கு கலக்கி அடுப்பில் சிறு தீயாக வைத்து பசைபோல கிளறி திரண்டு வரும் பதத்தில் போதுமான அளவு பனை வெல்லம் அல்லது பனங்கற்கண்டு பொடி சேர்த்துக் கிளறி களிப்பக்குவம் வந்தவுடன் 10 தேக்கரண்டி சுத்தமான நல்லெண்ணெய் சேர்த்து நன்கு கிளறி எடுக்க வேண்டும்.

சைவ உணவு உண்பவர்கள் அப்படியே உண்ணலாம். அசைவ உணவு பழக்கமுள்ள வர்கள் இதனுடன் கோழிமுட்டையை உடைத்து நுரை எழும்ப கலக்கி ஊற்றிக் கிளறி எடுத்து உண்ணலாம். சுவை மட்டுமல்லாமல் பலனும் மிகக் கொண்டதுதான் இந்த உளுந் தங்களி. இது உண்ணும் நாட்களில் காரம் மிகுந்த மற்றும் மசாலாக்கள் சேர்ந்த உணவு வகைகள் உண்ணக் கூடாது. தொடர்ந்து இதை உண்டுவர கருப்பை சார்ந்த நோய்கள் எதுவுமே வராது. இடுப்பு உளைச்சல், கால்வலி என்ன வென்றே தெரியாது. தற்போது 35 வயது தாண்டிய பெண்களில் பலருக்குக் கருப்பை கோளாறுகள், சினைமுட்டை உருவாவதில் கோளாறு - இப்படி பல ஆரம்பிப்பதைப் பார்க் கிறோம். இதனால் குழந்தை பெறும் வாய்ப்பை இழக்கவும் கூடும். இந்தப் பரிதாப நிலை தடுக்க முதல்தர உணவுதான் இந்த உளுந்தங்களி. இதை 7, 8 வயதிலேயே தர ஆரம்பித்து விட லாம். 10 வயதுக்குமேல் கண்டிப்பாக வாரம் ஒருமுறை தர வேண்டும்.

இதே போன்ற சத்துள்ள/பயனுள்ள இன் னும் சில உணவுகள் பருத்திக் கொட்டைப் பால்கஞ்சி, தினை அரிசி மாவு, மரவள்ளிக்

---

## கொசுவர்த்தி நாமே செய்யலாமே!



**துளசி, தும்பை, புதினா, கற்பூரவல்லி, தருவைப் புல் ஆகியவைகளை 25 கிராம் வீதம் எடுத்து வந்து தண்ணீர் சேர்க்காமல் மைய அரைக்க வேண்டும். அத்துடன் 25 கிராம் மைதாவை சேர்த்து தண்ணீரில் கொதிக்க வைத்து இறக்கி ஆற விடவும். வட்டவடிவ மாகவோ, சதுரமாகவோ எடுத்து நன்றாகக் காய வைத்து பாலிதீன் பைகளில் போட்டு வைத்துக் கொண்டு தேவையான பொழுது உபயோகிக்கலாம். கொசு ஓடியே போகும்.**

— ***திராவிடமணி மேகநாதன்***

பொலபொல வென்ற சாதத்திற்குத் தனி சுவைதான். ஆனால் ஒரு நாள் போல் ஒரு நாள் இல்லாமல் விதவிதமாக சாதம் வருகிறது. வாங்கிய அரிசி மூட்டையை 'செக்' செய்த என் கணவர், அரிசியை 20 நிமிடம் (கழுவிவிட்டு) ஊறவைத்து சாதம் வடிக்க வேண்டும் என்று குறிப்பு இருப்பதாகக் கூறினார். முதலில் பயமாகத்தான் இருந்தது, அரிசி ஊறிப் போனால் கெட்டு விடும் என்று பழைய காலத்தில் சொல்வார்களே என்று. ஆனால் குறிப்பைப் பார்த்துவிட்டு தினமும் அரிசியை இருமுறைக் கழுவி நீரை வடிகட்டி அப்படியே வைத்து விட்டு பிறகு பச்சைத் தண்ணீர் விட்டு குக்கரில் வைக்கிறேன். பிறகென்ன சாதம் தும்பைப்பூ வெளுப்பு. பொலபொல வென்ற சாதம் அசத்துகிறது. பழைய அரிசி எனின் ஒன்றுக்கு 2½ மடங்கு நீரும், மிகப் பழைய அரிசி எனின் ஒன்றுக்கு மூன்று தண்ணீரும் வைக்கலாம்.

— கமலா



கிழங்கு (ஆள் வள்ளிக்கிழங்குதான்) ஆகும். இந்த ஆள்வள்ளிக் கிழங்குடன் மஞ்சள் சேர்த்து வேக வைத்து இதனுடன் உப்பு, மிளகுத் தூள் சேர்த்து உண்ண அபார வலிமை கிடைக்கும்.

14 வயதில் பருவமடைவதுதான் இயற்கையானது. ஆனால் தற்போது 10, 11 வயதில் கூட பெண்கள் பூப்படைந்து விடுகின்றனர். உணவு தானியங்கள், பழங்கள் முன்பைவிட அதி விரைவில் குறுகிய காலத்தில் பலன் தரும் வகையில் இரசாயன பொருட்கள் - உரங்கள் - மருந்துகளினால் உற்பத்தி செய்யப்படுகின்றன. 6 மாதத்திய விளைச்சல் 3 மாதத்திலேயே கூட கிடைக்கிறது! அதாவது ஒரு வித்து குறுகிய காலத்திலேயே இன்னொரு வித்தை உற்பத்தி செய்து விடுகிறது. இவைகளில் உள்ள அதே வேகம் அதைத் தினமும் உண்டு வருபவர்களிடமும் காண முடிகிறது. அதிகமாக பால் சுரக்கும் வகையில் செயற்கையாக தயாரிக்கப்படும் மாட்டுத்தீவனம், அதிக முட்டை இடவேண்டி தயாராகும் கோழித் தீவனங்கள், அதிகமாக பால் கறக்க மாடுகளுக்குப் போடப்படும் ஊசி இவையும் அப்படியே மனித உடலிலும் விளைவை உண்டு பண்ணாதா என்ன?

17 வயது வரை கூட ஒரு பெண் பருவமடையா விட்டால் அதற்கு மேல் காலம் தாழ்த்தல் கூடாது. நவீன மருத்துவத்தில் கருமுட்டையை உருவாக்கும் ஹார்மோன் சிகிச்சையினால் (FSH) இதை வெளிப்படுத்தி விடுவார்கள். ஆனால் இந்த சிகிச்சை பலருக்கு முடியாத தொடர்கதையாக இருக்கும். தகுந்த சித்த மருத்துவம் மூலம் பிறவிக்குறை தவிர மற்றவற்றை சரி செய்ய வாய்ப்பு உண்டு. ஒரு கட்டத்தில் மருந்தை நிறுத்தி விட முடியும். பாட்டி வைத்திய முறைப்படி இதற்குக் கடுகு லேகியம் தருவது உண்டு. கைவைத்தியமாக பிரண்டை கிழங்கை நெல்லிக்காயளவு அரைத்து மோரில் கலந்து 5 - 7 நாள் கணக்கில் தருவதுண்டு. இது போல் மாதுளை இலைகூட பயன்படும். புளி நடலை கிழங்கும் பலன் தரும். இவைகளில் பலன் இல்லாவிடில் உடனே விஷயம் தெரிந்த சித்த மருத்துவரை அணுகலாம். புத்தி அறியாத பெண்களுக்கு என்றே தனியாக பல மூலிகை மருந்துகள் பழமையான மருத்துவ சுவடிகளில் உள்ளன.

ஒரு பெண் பருவமடைவது அவளுக்கு ஒரு புதிய அனுபவம். மனதில் பயம், கவலை ஏதோ விபரீதம் நடந்து விட்டது போன்ற திகில் கூட தோன்றும். பலவீனமானவர்களுக்கு மட்டுமல்ல, எல்லா பெண்களுக்குமே இடுப்பு வலி, சோர்வு, தளர்ச்சி, கால்கள் உளைவு, இதயபட படப்பு - சுருக்கமாக சொன்னால் மாதவிடாய் கால அயர்ச்சியை விட சற்று அதிகமாக இருக்கும்.

இந்த நேரம் தொட்டு பெண்ணுக்கு ஊட்டமான உணவு தேவை. தினமும் சத்துள்ள உணவு, பழங்கள் கொடுப்பதுடன் உளுந்தங்களியின் முழுப் பெருமையை, சக்தியையும் இந்த சந்தர்ப்பத்தில்தான் காணலாம். தொடர்ந்து இம்மாதிரி உணவின் மூலம் 6 மாதத்தில் உடல் நிலை சமனம் ஆகிவிடும். பால், மோர், நெய், தயிர், மற்றும் இரும்புச் சத்து நிறைந்த காய்கறிகள் பெண்மை உறுப்புக்கள் முழுமையாக வளர மிகவும் உதவுபவை!" என்று கூறும் டாக்டர் எஸ். ஜெயராம் பெண்களின் இத்தகைய நோய்களுக்காகவே நவோதயா சித்த ஆராய்ச்சி மையத்தை, 20, ஆற்காடு ரோடு, சென்னை - 24 ல் (தொ.பே. 4810752) நடத்தி வருகிறார்.



• எழுத்துப் பயிற்சி

# உங்கள் குழந்தை எழுத்து திணறுகிறதா?

தப்புத் தப்பாய் எழுதுவது என்பது சின்னக் குழந்தைகளிடம் மட்டுமில்லை. நன்கு வளர்ந்து பெரிய மனிதர்களாகப் புகழ் பெற்றவர்களிடமும் உண்டு!

Dear Mother, - started store several weeks - I have growed considerably. I don't look much like a boy now. How all the fold did you receive a Box of Books Memphis that the promised to send them languages.

Yours Son
Al.



• சையது அகமது

இந்த 'ஆங்கில' வாக்கியத்தை எழுதியிருப்பவர் உலகப் புகழ் பெற்ற அறிவியல் மேதை தாமஸ் ஆல்வா எடிஸன்தான். அவருக்கு அப்போது வயது பத்தொன்பது! அதனாலேயே தப்புத் தப்பாய் எழுதுகிற எல்லோருமே எடிஸன் ஆகிவிட முடியாதுதான். அதற்காக தப்பாக எழுதுபவர்கள் அனைவரும் முட்டாள்களும் இல்லை.

எடிசன் மாதிரி இன்னும் பலர் உண்டு. சர்ச்சில், லியார்னோ டாவின்ஸி, மேதை ஐன்ஸ்டீன் என்று பட்டியல் நீளும். கணக்குப் பாடத்தில் மட்டுமே சுடர் விட்ட நம்முடைய ராமானுஜம் கூட இந்தப் பட்டியலில் இடம் பெறலாமோ?

இது ஒரு 'கண்டிஷன்'. இந்த வார்த்தையையே வெகு முன்னெச்சரிக்கையோடு பயன்படுத்துகிறார்கள் 'எம்.டி.ஏ.' அமைப்பைச் சேர்ந்தவர்கள்.

குறைபாடு என்பது கூடச் சரியாக இராது என்பதால் 'கண்டிஷன்' — அதாவது 'நிலைமை' என்று சொல்லலாம்.

இந்தக் 'கண்டிஷ'னுக்கு ஒரு பெயரும் சூட்டியிருக்கி



• உச்சரிப்புப் பயிற்சி



நார்கள். 'டிஸ்லெக்ஸியா' (Dyslexia).

இந்த நிலைமைக்கு ஆட்படும் குழந்தைகள் பாரதத்தில் பத்து சதவிகிதம் பேர் இருக்கிறார்கள் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இதில் பையன்கள் நாலுபேர் என்றால் பெண் ஒருத்திதான் என்பது கவனம் பெற வேண்டியது.

'டிஸ்லெக்ஸியா' என்பது கிரேக்க மொழிச் சொற்களின் கூட்டுத் தொடர். 'Dys' என்றால் கடினம், சிரமம் எனலாம். 'Lexia' என்றால் சொற்கள் தொடர்பான மொழி. குழப்பமில்லாமல் புரிந்து கொள்ள வேண்டுமானால் மந்தமான நிலையில் உள்ளவர்கள் என்று சொல்லலாம். திக்கு வாய் என்கிற மாதிரி எழுதும் போது திக்கும் மொழி என்பது கூடப் பொருத்தம்தான்.

'டிஸ்லெக்ஸியா' நிலைமையை ஆராய்வதற்காக அமெரிக்காவில் பதினேழு ஆண்டுகளுக்கு முன்பே செலவிட்ட தொகை முப்பத்து மூன்று மில்லியன் டாலர்கள். (மூன்று கோடியே முப்பது லட்சம்)! நம் நாட்டில் இந்த 'டிஸ்லெக்ஸியா'வைப் பற்றிய விழிப்புணர்வே நான்கைந்து ஆண்டுகளாகத்தான் ஏற்பட்டிருக்கிறது.



• லக்ஷ்மி

இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே உலக அளவில் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் இந்தத் தன்மையைப் பற்றிக் கவனித்து வந்திருக்கிறார்கள். அமெரிக்காவில் ஒரு கண் மருத்துவர் தம்மிடம் வந்த ஒரு குழந்தையைச் சோதித்து அவனுக்குக் கண்பார்வைக் கோளாறு இல்லை என்று முடிவு செய்ததுடன், இதற்கான காரணத்தையும் ஓரளவு ஊகித்திருக்கிறார். 'Word Blindness' என்பதாக ஒரு பெயரையும் சூட்டியிருக்கிறார்.

சென்னையில் 'எம்.டி.ஏ' (Madras Dyslexia Association) என்கிற அமைப்பு தி. நகர் எல்.கே.எஸ் கோல்ட் ஹவுஸின் உரிமையாளர்களின் ஒருவரான சையது அகமது அவர்களைத் தலைவராகக் கொண்டு இயங்கி வருகிறது.

'டிஸ்லெக்ஸியா' தன்மைக்கு ஆளான குழந்தைகளுக்குத் தேவை சிறப்புப் பயிற்சி மட்டுமே. இதற்காக அமெரிக்க மேரிலாண்டில் சிறப்புப் பயிற்சி பெற்று வந்துள்ள நிர்மலா பண்டிட் தலைமையில் கல்விக் கூடம் ஒன்று இயங்கி வருகிறது. லக்ஷ்மி ராதாகிருஷ்ணன், சுபா வைத்தியநாதன் போன்ற திறமையான ஆசிரியர்களின் கவனிப்பில் பதினான்கு ஆசிரியர்கள் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

தியாகராய நகர் சிவாஜி தெருவில் இயங்கும் இந்தப் பள்ளிக்கு, 'அனன்யா' என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

இங்கு பயிற்சி பெறுகிற ஒரு குழந்தையின் தாய் சொன்னது --

"என் பையன் இரண்டாம் வகுப்பு வரை மிகவும் நன்றாகப் படித்தான். நல்ல தேர்ச்சி, தரம் இருந்தது. அப்புறம் பாடங்களைச் சரிவர எழுத முடியவில்லை. பாதியில் அப்படியே தொடராமல் விட்டுவிடுவான். ஆனால் கேட்டால் எல்லாவற்றுக்கும் சரியாக பதில் சொல்லிவிடுவான். எழுதும் போதுதான் இடைஞ்சல் ஏற்பட்டது. ஒரு நாள் அவன் படித்த பள்ளிக்கூட ஆசிரியை என்னை அழைத்து 'உங்கள் பையனிடம் ஏதோ பிரச்னை இருக்குன்னு நெனைக்கிறேன். டெஸ்ட் பண்ணிப் பாருங்க' என்று சொன்னார். அவன் படிக்கும் பள்ளியிலேயே 'டிஸ்லெக்ஸியா' அறிகுறி உள்ள பிள்ளைகளுக்கான கல்வி மையம் இருக்கிறது. அவர்களிடம் போய் இரண்டு ஸிட்டிங் பார்த்துச் சோதித்ததில், இவனுக்கு தனிப்பட்ட உதவி தேவை என்று கண்டு பிடித்தார்கள். அப்புறம் வாரம் மூணு நாள் ஒரு மணி நேரம் அங்கே சிறப்புப் பயிற்சி தந்ததில் சரியாகி விட்டான்."



• நிர்மலா

"அப்புறமும் ஏன் இங்கே வருகிறீர்கள்?" என்று கேட்டோம். "இன்னும் தீவிரமான பயிற்சி அளித்தால் படிப்புக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்றுதான் வருகிறேன்" என்றார் அவர்.

ஆக, இப்படி எழுதுவதற்குத் திக்குகிற குழந்தைகளுக்குத் தேவை சிறப்புக் கவனிப்பு, பயிற்சி

என்பதை விடக் கைகொடுத்துத் தூக்கி விடுகிற உதவி என்பது புரிகிறது.

கோயம்பத்தூரில் அண்மையில் ஜி.டி. நாயுடு அறக்கட்டளையின் சார்பில் ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. இந்தியா முழுவதிலும் இருந்து 200 பேர் கலந்து கொண்ட இந்தக் கருத்தரங்குக்குப் பார்வையாளர்களாகப் பெற்றோர், தாத்தா, பாட்டி என்று ஏழுநூறு பேர் வந்திருக்கிறார்கள் என்பது மிகவும் வியப்புக்குரிய செய்தி. சென்னை அமைப்பிலிருந்து கல்வியாளர்கள் என்கிற முறையில் திருமதி நிர்மலா பண்டிட்டும் திருமதி சுபா வைத்திய நாதனும் போய்ப் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

" 'டிஸ்லெக்ஸியா' நிலை உள்ள குழந்தை என்று எதை வைத்துக் கண்டறிவது? காது கேளாமை, கண்பார்வைக் குறைவு, மனநிலை பாதிப்பு இவை கூட ஒரு குழந்தையின் படிப்புத்திறன் எழுத்துத் திறன் கோளாறுகளுக்குக் காரணமாகலாம் இல்லையா?"

நிர்மலா பண்டிட் பளிச்சென்று பதில் சொன்னார். "இதில் முக்கியமானது அஸெஸ்மெண்ட் என்கிற மதிப்பீடுதான். இதை வைத்துத்தான் குழந்தை எந்த அளவு திணறுகிறான் என்பதைக் கண்டறிந்து பயிற்சி தருகிறோம். இந்த மதிப்பீடு செய்வதற்கு முன்னால் நாங்கள் கவனிப்பது குழந்தையின் மருத்துவ சம்பந்தமான கேஸ் ஹிஸ்டரியைத்தான். அவனுக்குக் கண்பார்வையிலோ, கேட்கும் திறனிலோ குறை ஏதும் இல்லை என்பதை நன்றாக உறுதி செய்து கொண்ட பிறகே பயிற்சிக்கு ஆலோசிப்போம்.

எடுத்த எடுப்பில் யாரையும் "டிஸ்லெக்ட்' என்று முடிவு செய்து விடுவதில்லை. இது தொடர்பாகக் குழந்தை மருத்துவர்கள், நரம்பியல் நிபுணர்கள், மனநல மருத்துவர்கள், பொது மருத்துவர்கள் என்று பலரோடும் இந்த 'எம்.டி.ஏ' அமைப்பு இணக்கமான ஆலோ



'பார்க்டவுன் பெனிபிட் ஃபண்ட்'டுடன் இணைந்து சேமிப்புப் பற்றிய மாடலுக்காக மங்கையர் மலரில் ஒரு போட்டி அறிவித்திருந்தோம் இல்லையா? அதில் பரிசு பெற்ற திருநெல்வேலியைச் சேர்ந்த டி.எஸ். துர்கா மீனாட்சிக்கு அவருடைய ஊருக்கே சென்று ஒரு சவரன் தங்கக் காசினைப் பரிசாக அளித்தோம்.

பெற்றவர்களுக்கு ஏக மகிழ்ச்சி. இருக்காதா பின்னே? +2 மாணவியான துர்கா மீனாட்சி பள்ளியிலும் சூட்டிகையான மாணவியாம். 'அவளுடைய எஸ்.டி.சி. ஹையர் செகண்ட்ரி ஸ்கூலிலும் நிறைய பரிசுகள் வாங்கி இருக்கிறாள்' என்றார் அவருடைய தந்தை ஸ்ரீநிவாச மூர்த்தி.

(படத்தில் துர்கா மீனாட்சியுடன் வலது பக்கம் — பெற்றோர். இடது பக்கம் மங்கையர் மலர் திருநெல்வேலி ஏஜெண்ட் ஜி. சுப்ரமண்யத்தின் தாயாரும், மனைவியும். பரிசு தருபவர் - ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ்.)



# SAMPRAAS BEAUTY CENTRE
## & School of Cosmetology



நாங்கள் கீழ்க்கண்ட அழகுக்கலை பயிற்சியினை தேர்ச்சி பெற்ற மற்றும் அனுபவமிக்கவர்களால் கற்று தருகிறோம்.

| | |
|---|---|
| **Bleach** | **Bridal Make-up** |
| **Latest Facials** | **Mehandi** |
| **Pedicure &** | **Hair Styles** |
| **Manicure** | **Hair Treatment** |
| **Waxing** | **Perming** |
| **Hair Cuts** | **Hair Colouring** |
| **Galvanic** | **2 Months complete Beautician Course** |

ஒவ்வொரு மாணவியிடமும் தனி கவனம் செலுத்தி கற்று தரப்படும். மாணவிகளில் மிகச் சிறந்த மூன்று பேர்களை தேர்ந்தெடுத்து பரிசு வழங்கப்படும். வெளியூர் மாணவிகளுக்கு ஹாஸ்டல் வசதி செய்து தரப்படும்.

**So hurry up! Join immediately and get 25% discount on course fees. Offer open till June '97**

**SAMPRAAS BEAUTY CENTRE,**
**Gokul Arcade No. 19B, I Floor, No. 2, Sardar Patel Road, Adyar, Chennai - 600 020.**
**Ph : 4917862, 414434 & 415712**

---

உ

வெங்கடாஜலபதி துணை — ஜெய்பத்திரி விஷால் — குருராகவேந்திராய நம:

# பிருந்தாவன் டிராவல்ஸ்

(ஸ்ரீனிவாசாபிரியா ஆஸ்பத்திரி எதிர்ரோட்டில் உள்ளது)

40/6, பிரசாந்தி அப்பார்மெண்ட்ஸ் முதல்மாடி, (குட்டி இல்லம்) பட்டேல் ரோடு, பெரம்பூர், சென்னை - 600 011. ✆ : 5570624

| | |
|---|---|
| **6.5.97** முதல் **11** நாட்கள் பூரி - கோனார்க் - புவனேஷ்வர் - கயா - வாரனாசி - அலகாபாத் - அயோத்தியா - சென்னை கட்டணம் நபர் ஒன்றுக்கு | ரூ.2,850/- |
| **6.5.97** முதல் **18** நாட்கள் பூரி - கோனார்க் - புவனேஷ்வர் - கயா - வாரனாசி - அலகாபாத் - அயோத்தியா - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - புது டெல்லி - பிருந்தாவன் - மதுரா - ஆக்ரா சென்னை கட்டணம் நபர் ஒன்றுக்கு | ரூ.3,650/- |
| **6.5.97** முதல் **24** நாட்கள் பூரி - கோனார்க் - புவனேஷ்வர் - கயா - வாரனாசி - அலகாபாத் - அயோத்தியா - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - கேதார்நாத் - பத்திரிநாத் - பிருந்தாவனம் - மதுரா - ஆக்ரா டெல்லி கட்டணம் நபர் ஒன்றுக்கு | ரூ.4,375/- |
| **6.5.97** முதல் **28** நாட்கள் பூரி - கோனார்க் - புவனேஷ்வர் - கயா - வாரனாசி - அலகாபாத் - அயோத்தியா - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - கேதார்நாத் - பத்திரிநாத் - பிருந்தாவனம் - மதுரா - ஆக்ரா - டெல்லி - பம்பாய் - பண்டரிபுரம் நபர் ஒன்றுக்கு கட்டணம். | ரூ. 4,850/- |

மேற்குறிப்பிட்ட எல்லா யாத்திரைக்கும் ஆங்காங்கே தங்கும் பொது ஹால் வாடகை- ஊர் சுற்றிபார்க்கும் கட்டணம் ரயில் பஸ் கட்டணம் தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம் கைதேர்ந்த தென் இந்திய பிராமணர்களை கொண்டு காலை டிபன்-காப்பி இரண்டு வேளை ஆகாரணம் தயார் செய்து வழங்கப்படுவதுடன் குறிப்பிட்ட அனைத்து கட்டணங்களும் கம்பெனி யாரை சார்ந்தது.

எங்கள் யாத்திரை குறிப்பிட்ட தேதியில் புறப்படுவோம் என்பதையும் இந்த ரயில் பட்ஜெட்டில் ரயில் கட்டணம் உயர்வு தவிர வழியில் அதற்கு, இதற்கு என்று எந்த பணமும் வாங்குவதில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

**S.P. வெங்கட்ராமராவ், நிர்வாகி**

சில சமயம் கொத்தமல்லி கட்டு நீண்டு பெரிய தண்டுடனும் நுனியில் மட்டும் இலைகளுடனும் இருக்கும். நுனி பாகத்தை மட்டும் வைத்துக் கொண்டு தண்டை எறிந்து விடாமல் நன்றாக அலம்பி காயவைத்து ரசப்பொடி செய்யும் போது மிக்ஸியில் சேர்த்து அரைத்துவிடுங்கள். ரசம் கொத்த மல்லி போடாமலேயே வாசனை!

— லதா வெங்கடேஷ்



சனை தொடர்பு கொண்டிருக்கிறது.

பெரும்பாலும் குழந்தைகள் திணறுவது ஸ்பெல்லிங்கில்தான். COW என்று எழுதி யிருப்பதைப் பார்த்து எழுதும் போது CWO என்று எழுதிவிடக்கூடும். கழித்தல் போட வேண்டிய இடத்தில் தடுமாறிக் கூட்டல் குறி எழுதக் கூடும்.

இன்ன எழுத்துக்கு இந்த மாதிரி ஒலி. இந்தக் குறிக்கு இப்படிச் செய்ய வேண்டும் என்பதெல்லாம் புரியாது. மனக்கணக்காக எல்லாம் போட்டு விடும். எல்லாக் கேள்வி களுக்கும் அழகாகப் பதில் வரும். ஆனால் எழுதுகிற போதுதான் தகராறு.

போன நவம்பர் மாதம் இந்த 'அனன்யா' வில் பயிற்சி பெற வந்த ஒரு குழந்தையின் நோட்டுப் புத்தகத்தைக் காட்டினார் சுபா வைத்தியநாதன்.

RAT, CAT என்பது போன்ற சாதாரணமான மூன்று எழுத்துச் சொற்களைக் கூடப் பார்த்து எழுத முடியவில்லை. என்னமோ வேற்று கிரகத்து மொழியில் எழுதுகிற மாதிரி இஷ்டத் துக்குக் கோடுகளும் வளைவுகளும் என்று போட்டிருந்தது.

நான்கே மாதப் பயிற்சிக்குப் பிறகு இப் போது அதே குழந்தை சொற்களையும் எழுத் தையும் புரிந்து கொண்டு சீராக எழுதுகிறது. முழுமையான ஈடுபாட்டோடு குழந்தைக்கு உதவி செய்தாலன்றி இது சாத்தியமே இல்லை.

இரண்டாம் வகுப்புக்குத் தேவையான கற்கும் திறனைக் கொண்ட ஒரு சிறுவன் ஐந் தாம் வகுப்பில் படிக்கலாம். அவன் மந்தமாகத் தான் இருப்பான். மதிப்பெண் பெற முடியாமல் மக்கு, அசமந்தம் என்றெல்லாம் அவனை ஆசிரியர்களோ பெற்றோரோ திண்ட வேண்டியதில்லை. சிறப்புப் பயிற்சி மூலம் அவனைச் சீக்கிரத்திலேயே ஐந்தாம் வகுப்புத் திறனுக்கு உயர்த்தி விட முடிகிறது என்பதே சிறப்புப் பயிற்சியின் சாதனை.

"பள்ளிப் பாடங்களில் சில குழந்தை களுக்குப் பின்னடைவு இருந்தால் அவர்கள் முதலில் உணர்வு பூர்வமாகப் பாதிக்கப்படு கிறார்கள். பள்ளியை, பாடங்களை, ஆசிரியர் களைக் கண்டால் மிரண்டு ஒதுங்குகிறார்கள். தம்மை விட நன்றாக மதிப்பெண் பெறும் மற்ற பிள்ளைகளையும் வெறுக்கிறார்கள். கோபம் ஆத்திரம் எல்லாம் வருகிறது. பிள்ளை நல்ல மதிப்பெண் பெறவில்லை என்றால் பெற்றோர், தாத்தா பாட்டி எல்லோருமே கவலைப்படு கிறார்கள். ஆசிரியர் சரியாய்க் கற்பிக்கவில்லை என்று குறை கூறுகிறார்கள். அப்பாவை அம்மா வும், அம்மாவை அப்பாவும் மாற்றி மாற்றித் திட்டுகிறார்கள். குடும்பமே அமைதியிழக்கிறது. 'டியூஷன்' ஆசிரியர்களிடம் கொண்டு போய்ப் பிள்ளையைத் தள்ளுகிறார்கள். அங்கேயும் அதே பாடப் பயிற்சிதானே இருக்க முடியும்? 'டிஸ்லெக்ஸியா' நிலையிலுள்ள ஒரு குழந் தைக்குத் தேவை பள்ளியிலும் வீட்டிலும் நல்ல ஆதரவும் அரவணைப்பும்தான். அதுதான் அவனுடைய ஆரோக்கியமான மனவளர்ச் சிக்கு உதவும்...."

இந்த மாதிரி ஒரு ஆலோசனையும் விளக்க மும் தருபவர் லக்ஷ்மி ராதா கிருஷ்ணன். இது போல் மிகவும் பயனுள்ள பல குறிப்புக்களை 'எம்.டி.ஏ' அமைப்பின் கையேடு ஒன்றில் மிக அழகாக விளக்கியிருக்கிறார்கள்.

'அனன்யா' பள்ளியில் கிட்டத்தட்ட ஒரு மாணவனுக்கு ஒரு ஆசிரியர் என்ற முறை யிலேயே சிறப்புப் பயிற்சி தரப்படுகிறது. அதிகபட்சம் ஓர் ஆசிரியரிடம் மூன்று பிள்ளைகள் மட்டும்தான் பயிற்சி பெற முடியும். 'பார்வைச் சொற்கள்' (Sight Words) என்று 220 பொருள்களைத் தனித்தனி அட்டை களில் எழுதி வைத்திருக்கிறார்கள். இவை ஆங்கில மொழியில் மிகவும் அடிக்கடி பயன் படும் சொற்கள். இந்த அட்டைகளைப் பெற் றோரே தயாரித்து வைத்துக் கொள்ளலாம். ஒவ் வொரு அட்டையையும் பார்த்த மாத்திரத்தில் முழு எழுத்துக்களையும் படிக்காமலே மளமள

# இப்போது



## மடங்கு அதிக கான்ஸன்ட்ரேட்டட்

# சக்தி

விம் அளிக்கிறது மூன்றிலும் புதிய ஃபார்முலா உள்ள விம் அல்ட்ரா பேஸ்ட். சிறியது. அளவில் குறைவானது. ஆனால், நீங்கள் பயன்படுத்திய மற்ற எந்த சாதாரண பவுடரையும் விட **பத்து மடங்கு அதிக சக்தி** கொண்டது.

ஆம். உங்கள் வீட்டுப் பாத்திரங்களில் ஏற்பட்ட பிசுபிசுப்பை இருந்த இடம் தெரியாத அளவுக்கு மினுமினுக்க வைக்கும் ஆற்றல் கொண்டது. அதுவும், பாத்திரங்கள் உலர்ந்த பிறகும் கூட மினுமினுப்பு நீடிக்கும். ஏனெனில், விம் அல்ட்ரா பேஸ்ட் கசடுகள் படிய விடாது. எல்லாவற்றிற்கும் மேலாக, புதிய விம் பேஸ்ட் சிறிதளவு மட்டும் போதும்.

அதிகமாக செலவழியும் என்பதெல்லாம் பழைய கதையாகி விட்டது. எனவே, இதுவரை நீங்கள் பயன்படுத்திக் கொண்டிருந்த எந்த பவுடரையும் விட நீடித்து நிற்கும். இனி உங்களுக்கு, புத்துணர்வான, எலுமிச்சை மணம் கொண்ட மினுமினுப்பு நீடித்துக் கொண்டிருக்கும்.

எனவே, உங்கள் சமையலறைக்கு ஆற்றல்மிக்க விம் அல்ட்ரா பேஸ்ட் மிக அவசியம்.

(விம் அல்ட்ரா பேஸ்ட் சில தேர்ந்தெடுக்கப்பட்ட நகரங்களில் மட்டுமே கிடைக்கும்)




**துளி கூட கறையில்லை. இதுவே சுத்தத்தின் எல்லை.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

*Lintas VU 69 2517 Tm*

வென்று குழந்தைகளைச் சொல்லவைத்துப் பயிற்சியளிக்கிறார்கள்.

நிர்மலா பண்டிட் தருகிற மற்றொரு மிக முக்கியமான ஆலோசனையையும் பெற்றோர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். "கற்கும் திறனில் திணறுகிற குழந்தைகளோடு பெற்றோர்கள் மிக அதிகமான நேரம் பேசிப் பேசி வார்த்தை வளத்தை அதிகப்படுத்த வேண்டும். குழந்தை இரவில் ஓய்வாகப் படுக்கப் போகும் போது பெரிது பெரிதாகப் படங்கள் போட்ட கதைப் புத்தகங்களை எடுத்துக் குழந்தைக்குப் படித்துச் சொல்ல வேண்டும். இதனால் குழந்தை மற்றவர்களோடு நல்ல பேச்சுத் தொடர்பு கொள்ள வசதியாக இருக்கும்."

பழைய நாட்களில் தாத்தாவோ பாட்டியோ வளர்க்கும் பேறு பெற்ற காலங்களில் சின்னக் குழந்தைகளுக்கு இந்த வசதிகள் கிடைத்தன. எத்தனை பாடல்கள்...? எத்தனை கதைகள்? குருவிக்கதை, காக்கா கதை, நிலா நிலா ஓடிவா.

இந்த அணுகுமுறையை இப்போது கிராமங்களில் கூடக் காண முடியவில்லை. நேரக் கொல்லிகளாய்த் தொலைக்காட்சியும் மற்ற கவர்ச்சிகளும் என்று மொய்த்துக் கொண்டிருக்கின்றன.

ஆங்கிலத்தில் குழந்தைகளுக்காக என்று 'Bed Time Stories' புத்தகங்களே உண்டு. பெற்றவர்களின் அணுக்கமான பாசமும் பரிவும் இல்லாமையே இது போன்ற குறைபாடுகளுக்குக் காரணமாகி விடுமோ என்றும் அச்சமாக உள்ளது. 'டிஸ்லெக்ஸியா' என்பது ஒருவிதமான நியூரோலாஜிகல் கண்டிஷன்தான். ஐ.க்யூ. நிலையில் மிகவும் உயர்வான குழந்தைகள் கூட இந்தத் திணறலுக்கு ஆட்படுகின்றன.

பிளஸ் - 2 வகுப்பு வரை குழந்தைகளுக்கு ஏராளமான பாடங்கள் இருப்பதால் சுமை அதிகம். கல்லூரிக்கு வருகிற போது குறிப்பிட்ட ஒரு பாடத்தில் மட்டுமே கவனம் செலுத்துவதால் அங்கே இந்தச் சுமை குறைகிறது. எனவே 'டிஸ்லெக்ஸியா' நிலை உள்ள பிள்ளைகளுக்கு பிளஸ் - 2 வரை உதவி நிறைய தேவைப்படுகிறது என்கிறார்கள்.

டிஸ்லெக்ஸியா நிலை என்பது பரம்பரையாகவும் ஏற்படலாம். இடையிலும் வரலாம். தலையில் அடிபடுதல், பிறக்கும் போது ஏற்படக் கூடிய காயங்கள் (Birth Trauma), கால்கை வலிப்பு போன்ற காரணங்களாலும் இந்த நிலை ஏற்படக் கூடும்.

அமெரிக்கா, கனடா, பிரிட்டன் போன்ற நாடுகளில் டிஸ்லெக்ஸியா குழந்தைகளைக் 'கற்கும் திறனில் குறைபாடுடையவர்கள்' (Learning Disabled) என்று வகைப்படுத்தி, அவர்களுக்குத் தகுந்த முறையில் அடிப்படைக் கல்வி முதல் பல்கலைக் கழகப் படிப்பு வரையில் தேவைப்படும் வசதிகளை ஏற்படுத்தித் தருகின்றன.

சென்னை நகரில் தியாகராயநகர் தவிரக் கோட்டூர்புரத்திலும் சாலிக்கிராமத்திலும் 'எம்.டி.ஏ' கல்வி மையங்கள் இயங்குகின்றன. தவிர பத்மா சேஷாத்ரி, வித்யா மந்திர், ராஜாஜி வித்யாஸ்ரம், செயின்ட் மைக்கேல்ஸ், அபாகஸ் பள்ளிகளிலும் கோபிசெட்டிப்பாளையம் ஸ்ரீ வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி, ஈரோடு பாரதி வித்யாபவன், திருப்பூர் கப்பையா மெட்ரிக் பள்ளி, சேலம் கோல்டன் கேட் மெட்ரிக் பள்ளி போன்ற இடங்களிலும் பள்ளிகளிலேயே தனியாகப் பயிற்சி நிலையங்கள் இயங்குகின்றன.

இந்தத் துறையில் தொண்டாற்ற விரும்பும் பள்ளிகள் சென்னை எம்.டி.ஏ அமைப்பை அணுகினால் உதவத் தயாராக இருக்கிறார்கள். பள்ளிகள் அனுப்பும் ஆசிரியர்களுக்கு இத் துறையில் குறுகிய காலப் பயிற்சி தருகிறார்கள்.

விரும்புகிறவர்கள் தொடர்பு கொள்ள முகவரி :

Madras Dyslexia Association,
10/1, Sambasivam Street,
T. Nagar, Chennai - 600 017.

— சுப்ர பாலன்

படங்கள் : யோகா

---

**பணியாரக் குழல் செட் வீட்டிலிருந்தால் அதை பரண்மேல் போட்டு வைத்துவிட வேண்டாம். அதன் மேல் கலர் பேப்பர், ஜிகினா இவற்றைக் கொண்டு ஒட்டி அலங்காரம் செய்து விட்டால் ஷோ கேஸிலோ, டி.வி மேலோ வைத்து விடலாம். கொலு நேரத்தில் இதைப் படிகளின் இரண்டு புறமும் வைத்தால் பார்க்க வெகு அழகாக இருக்கும்.**

**— லக்ஷ்மி சிவகுமார்**





• [illegible]

## பொருள் : காலை நேர உணவு

### முதல் பரிசு ரூ. 300/-

### ஸ்பூர்த்தி

*தேவையான பொருட்கள் :*

ஓட்ஸ் - 2 கப்
கெட்டியான புளிக்காத தயிர் - 1 கப்
உப்பு - 1 ஸ்பூன்
கேரட் துருவியது - 2 டீஸ்பூன்
தக்காளி சன்னமான ஸ்லைஸ்கள் - 20
முந்திரிப் பருப்பு - 10 (வறுத்தது)
கொத்தமல்லி நறுக்கியது - 2 டீஸ்பூன்
கடுகு - 1 டீஸ்பூன்
சீரகம் - 1 டீஸ்பூன்
தேங்காய்ப்பூ - 2 டீஸ்பூன்
பச்சரிசி - 50 கிராம்



• திராவிட மணி மோஹநாதன்



• பி.எஸ். கமலா



• பானுமதி

# இம்மாத இல்லத்தரசி

பச்சை மிளகாய் - 2 (துருவியது)
எண்ணெய் - 1 கரண்டி

### கிச்சடிக்குத் தேவையான பொருட்கள் :

பாசிப் பருப்பு - 100 கிராம்
இஞ்சி - 1 துண்டு
வெங்காயம் - 1
தக்காளி - 1
பச்சை மிளகாய் - 2
கொத்தமல்லி - 1 டீஸ்பூன்
தேங்காய்ப்பூ - 2 டீஸ்பூன்
கடுகு - 1 டீஸ்பூன்
உப்பு - தேவைக்கேற்ப



• கிரிஜா

*செய்முறை :*

முதலில் ஓட்ஸ் 2 கப் எடுத்துக் கொண்டு, வெறும் வாணலியில் இலேசாக அதாவது 2 நிமிடம் மட்டும் வறுத்து எடுத்துக் கொண்டு விடவும். பச்சரிசியை ½ மணி நேரம் ஊறவிட்டு மிக்ஸியில் நைஸாக அரைத்துத் தேவையான உப்பைச் சேர்த்து விடவும். இதில் சிறிது எண்ணெயில் தாளித்த பின்பு கடுகு, சீரகம் இரண்டையும்

**இட்லியை உப்புமா செய்வது தெரிந்த விஷயம். ஆனால் உப்புமா இட்லி ஆவது எப்படி? காலையில் செய்த ரவை உப்புமா அப்படியே மீந்து விட்டது. எண்ணெய் போறாததால் நல்லாயில்லை என்று கணவரும்.... வெங்காயம் போட்டதால் பையனும், இஞ்சி ஏன் போட்டே என்று பெண்ணும் சாப்பிடாததால் அப்படியே இருந்தது. குழந்தைகள் பள்ளியிலிருந்து வருவதற்குள் அதை உருமாற்ற வேண்டும் என்று முயற்சித்ததில் உருவானதுதான் இந்த இட்லி ஐடியா. உப்புமாவுடன் ஒரு டம்ளர் கெட்டியான தயிர் கலந்தேன். கொஞ்சம் எண்ணெயில் க. பருப்பும், மிளகு மட்டும் தாளித்து அதனுடன் சேர்த்துக் கலக்கினேன். நெய்யில் முந்திரிப் பருப்பு வறுத்து குட்டி குட்டிக் கிண்ணத்தில் இரண்டிரண்டு மு. பருப்பு நெய்யுடன் விட்டு அதன் மீது உப்புமாவை ஸ்பூனால் நிரப்பி இட்லி குக்கரில் வைத்து 5 நிமிடம் கழித்து எடுத்து தட்டில் நெய் வழியும் ரவா இட்லி சூடாக சாப்பிட அதுவும் சட்னியுடன் சாப்பிட சூப்பரோ சூப்பர். இப்பல்லாம் அடிக்கடி ரவா இட்லிதான்!**

**— ரமா சேகர்**



கொட்டிக் கலந்து கொள்ள வேண்டும். அடுப்பில் இட்லிப் பாத்திரத்தை ஏற்றுவதற்குப் பத்து நிமிடம் முன்னால் கெட்டித் தயிரையும் கலந்து கொண்டு விடவும். அதிகம் ஊறக் கூடாது.

மாவு ரெடியானதும் வறுத்த ஓட்ஸையும் சேர்த்த பின்பு (8 முதல் 10 நிமிடங்களுக்குள்) இட்லித் தட்டுக்களில் ஒட்டாமல் இருக்க சிறிது எண்ணெய் தடவிக் கொண்ட பின்பு ஒவ்வொரு கரண்டி மாவை நிதானமாக ஊற்றிக் கொள்ளவும். கையோடு மேலாகப் பரவலாகப் பரப்ப ஏற்றபடிக்கு, ஒரு பேசினில் கேரட், கொத்தமல்லி, தேங்காய்ப்பூ, பச்சை மிளகாய் எல்லாவற்றையும் ரெடியாகக் கலந்து வைத்துக் கொண்டிருப்பதை அழகாக ஒரே சீராக அனைத்துக் குழிகளிலும் அழகாகத் தூவவும். கடைசியாக ஒவ்வொன்றிலும் சென்டரில் 1 டொமேடோ ஸ்லைஸ், அதன் மேலாகப் பாதியாக உடைத்த ஒரு வறுத்த முந்திரி இரண்டையும் பதித்த பின்பு ஆவியில் 10 நிமிடம் வேக விட்டு இறக்கிய பின்பு 5 நிமிடம் பொறுத்து ஒரு ஸ்பூனால் நெம்பி எடுத்தால் அழகான அருமையான, சுவையான "ஓட்ஸ் ஸ்பூர்த்தி" ரெடி.

சத்தான, வயிறுக்கு இதமான இந்த "ஸ்பூர்த்தி" சிறியோர் முதல் பெரியோர் வரை டயாபிடீஸ் பேஷண்ட்களுக்கும் பசிதாங்கும் காலை நேர உணவாகும்.

இதற்குத் தொட்டுக் கொள்ள மேலே குறிப்பிட்டுள்ளபடி முதலில் பாசிப் பருப்பை இலேசாக வறுத்துக் குழையாமல் வேகவிட்டு இதில் கடுகு தாளித்த பின்பு, மிகமிகப் பொடியாக நறுக்கிய வெங்காயம், இஞ்சி, மிளகாய், தக்காளியையும் சேர்த்து (வதக்கும் போது, எண்ணெயில் இவைகள் உருத் தெரியாத அளவுக்குக் க்ரேவி போல் வதக்கிச் சேர்த்தபின்பு) இறுதியாக மேலாகக் கொத்தமல்லியையும் கலந்து தேவையான உப்புச் சேர்த்து அழகாக ஒரு பேசினில் எடுத்து வைத்து கடக் கட ஸ்பூர்த்தி + கிச்சிடி சேர்த்துப் பரிமாறலாம். மிகவும் புதிய விதமாகவும், ருசியாகவும், அதே சமயத்தில் நல்ல "பூர்த்தியான காலை நேர உணவாகவும்" விளங்குவதோடு நன்கு பசி தாங்கவும் செய்யும். அவரவர் சுவைக்கேற்ப வேறு வேறு கறிகாய்கள் வதக்கிச் சேர்த்தும் நாம் இதைச் செய்து ருசிக்கலாம் என்பதே இதன் ஸ்பெஷாலிடி!

— கமலம், பெங்களூர் - 54.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

# காய்கறி நீர் உருண்டை

புழுங்கலரிசியை மிஷினில் கொடுத்து மாவாக அரைத்து வைத்துக் கொண்டால் —

வாரத்தில் மீதமாகும் காய்கறிகளைக் கொண்டு நிமிஷமாக கலர்ஃபுல் டிபன் செய்து விடலாம்.

*தேவையான பொருட்கள் :*

புழுங்கலரிசி மாவு - 1 கோப்பை

பொடியாக நறுக்கிய பீன்ஸ் காரட் போன்ற காய்கறிக் கலவை - ½ கோப்பை

தேங்காய்த் துருவல் - ½ கோப்பை

எண்ணெய் - 2 டீஸ்பூன்

உப்பு, மஞ்சள் - தேவைக்கேற்ப

*செய்முறை :*

வாணலியில் எண்ணெய் விட்டு காய்கறிகளை சிவக்காமல் வதக்கி உப்பு, மஞ்சள் சேர்த்து 1½ கோப்பை தண்ணீர் விட்டு கொதிக்க விடவும். கொதிக்கும் போது தேங்காய்த் துருவலைச் சேர்த்து இறக்கி, புழுங்கலரிசி மாவை கொட்டிக் கிளறி ஈரத்துணியால்

## சென்னையில் தயாரிக்கப்படும் பொருள்களும் தயாரிப்போர் விலாசங்களும் ரூ. 40.00




சென்னையிலும், அதன் சுற்றுப் பகுதிகளிலும் உள்ள ஆயிரக்கணக்கான தொழிற்சாலைகளில் தயாரிக்கப்படும் ஊதுபத்தி, பேட்டரி, சைக்கிள், செங்கல், பிரஷ், பர்னிச்சர், பரிசுப்பொருள், வாழ்த்துக் கார்டு, கைவினைப் பொருள், நகை, தோல் பொருள், மீட்டர், மொசைக் கல், பாக்கு, பெயிண்ட், ரோபோ இயந்திரம், டெலிபோன், கூடாரம், ஜிப்... எனப் பலவகையான பொருட்களின் பட்டியல்கள் அகர வரிசைப்படி தரப்பட்டுள்ளன. மொத்தம் 1315 விலாசங்கள். பெரும்பாலும் போன் நம்பர்களுடன். ஆக அருமையான ஷாப்பிங் கெய்டு இது. **இதர நூல்கள்** : பிரபல மாணவர்களின் விலாசங்கள் (5700 அட்ரஸ்கள்) 80.00; சென்னை மொத்த வியாபாரிகளின் முகவரிகளும் விவரங்களும் (1,400 விலாசங்கள்) 25.00; தோல் தொழில் முறைகளும் இறக்குமதி யாளர் முகவரிகளும் 18.00; சுங்க வரிச் சட்டம் 9.75; சுயமாகத் தொழில் தொடங்க வழிகள் 20.00; சுய வேலை வாய்ப்பும், சுலபத் தொழில்களும் 20.00; சுலபத் தவணைத் தொழில்களும், சுய சம்பாத்தியமும் 14.00.

## மேலைநாட்டு ஜோதிடர்கள் சொல்லும் ஜோதிடம் ரூ. 37.00

ஜோதிட வரிசையில் அண்மையில் வெளியாகியிருக்கும் அற்புதமான புத்தகம் இது. இத்துறையில் ஏராளமான ஆராய்ச்சிகள் செய்துள்ள திரு. எஸ்.பி. சுப்ரமணியன் அனைவரும் புரிந்து கொள்ளத் தக்க வகையில் எளிமையாக எழுதியிருக்கிறார். **இதர நூல்கள்** : சனிப் பெயர்ச்சிப் பலன்கள் (15.2.1996 முதல் 16.4.1998 வரை) 15.00; பல்வகை ஆருடங்களும் உங்களுக்கான பலன்களும் 10.00; கோட்சாரப் பலன்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் முறைகள் 60.00; தசவர்க்க ஜாதக விளக்கம் 32.00; வராகமிகிரரின் பிருகத் ஜாதகச் சாரம் 18.00; ஜாதக அலங்காரச் சாரம் 27.00; ஜாதக தோஷ சாந்திப் பரிகார முறைகள் 17.00; புகழ் பெற்ற வர்களின் ஜாதகங்கள் 39.00; புத்திர தோஷமும் பரிகாரமும் 10.00; அஷ்டவர்க்க ஜாதகப் பலன்கள் 17.00; கௌசிக ஜோதிட சிந்தாமணி 17.00; பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம் - 1 ரூ. 72.00; பாகம் - 2 ரூ. 51.00; மணி மேகலைத் தூய திருக்கணிதப் பஞ்சாங்கம் 1926 முதல் 1945 வரை ரூ. 110.00; 1946 முதல் 1965 வரை ரூ. 110.00; 1966 முதல் 1985 வரை ரூ. 110.00; 1986 முதல் 1990 வரை 45.00; 1991 முதல் 1995 வரை ரூ. 45.00; 1996 முதல் 2000 வரை 45.00; வாக்கியப் பஞ்சாங்கம் 1926 முதல் 1945 வரை ரூ. 110.00; 1946 முதல் 1965 வரை ரூ. 110.00; 1966 முதல் 1985 வரை 110.00; 1986 முதல் 1990 வரை 45.00; 1991 முதல் 1995 வரை 45.00; 1996 முதல் 2000 வரை 45.00.

## ஸ்ரீ சத்திய சாயிபாபா வரலாறும் மகிமைகளும் ரூ. 26.00




ஆன்மிகவாதியான பன்மொழிப் புலவர் திரு சி.நா. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ. எழுதியிருக்கும் சுவையான விஷயங்களின் தொகுப்பு நூல் இது. 23.11.1926 புட்டபர்த்தியில் அவதரித்ததிலிருந்து அண்மைக்கால அற்புத நிகழ்ச்சிகள் வரை காலக்கிரமமாகத் தரப்பட்டிருப்பது சிறப்பு. **இதர நூல்கள்** : பக்த விஜயம் 11.50; விநாயகரும் விநோதச் செய்திகளும் 17.00; கீதை காட்டும் பாதை 42.00; காஞ்சிப் பெரியவர்களின் வரலாறு 11.00; சந்தியாவந்தனம் செய்வது எப்படி? 13.00; ராகவேந்திரரின் வரலாறும் மகத்துவமும் 15.50; அறுபத்து மூவரும் பன்னிரு ஆழ்வாரும் 39.00; அஷ்டலட்சுமிகளின் வரலாறும் வழிபாடும் 17.00; தெய்வ நம்பிக்கையும் தெளிவுமிக்க வாழ்க்கையும் 18.00; இந்தப் பண்டிகைகளின் வரலாறும் வழிபாட்டு முறைகளும் 9.50; ஆன்மிகச் செல்வர்கள் வாழ்வில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகள் 11.75; சர்வ தோஷ நிவர்த்தி தரும் சர்வேஸ்வரன், சிவன், சங்கரன் வழிபாடு 11.00; எந்தக் காரியம் வெற்றி பெற எந்தக் கடவுளை எப்படி வணங்க வேண்டும்? 31.00; கோயில்களும் தெய்வீக முயற்சிகளும் 13.50; ஆதிசங்கரரின் வாக்கிய விருத்தியும் மனீஷா பஞ்சகமும் 22.00; காசிப் பயணத்தின் போது காண வேண்டிய திருத்தலங்கள் 11.00; திருமுருகன் திருத்தலங்கள் 30.00; வைணவத் திருப்பதிகள் 15.00; தமிழக இந்துக் கோயில்கள் பாகம் - 1 ரூ. 27.00; பாகம் - 2 ரூ. 13.00; திருத்தலங்களைத் தரிசிக்க வாரீர்! 22.00; திருப்பதி செல்கிறவர்களுக்கான தெளிவான வழிகாட்டி 15.00; சுவாமி சின்மயானந்தரின் சிறப்புச் சிந்தனைகள் 39.00.

## ஒல்லியாக இருக்கும் நீங்கள் குண்டாக விரும்புகிறீர்களா? ரூ. 9.00

வத்தலும், தொத்தலுமாக இருந்தால் பார்ப்பதற்கு தோற்றப் பொலிவு நன்றாக இருக்காது என்பது போக நோய் எதிர்ப்புச் சக்தியும் குறைவாக இருக்கும். எனவே ஓரளவு நல்ல தோற்றத்துடன் இருப்பது அவசியம். இதற்கு இப்புத்தகம் பெரிதும் உதவும். **இதர நூல்கள்** : உடல் பருமனைக் குறைக்கச் சுலபமான வழிகள் 15.00; சிவப்பாக ஆக வேண்டுமா? 12.00; தியான நெறிகளும் நன்மைகளும் 21.00; மகாசக்திகளைத் தியானம் செய்யும் முறைகளும் பயன்களும் 16.00; மூச்சுப் பயிற்சியும் ஒரு முகச் சிந் தனையும் 17.00; முகப்பருவைப் போக்க முப்பது வழிகள் 9.00; உடம்பு உறுதியாக இருக்க வேண்டுமா? 13.00; உடல் உறுதி பெற உடற்பயிற்சி முறைகள் பாகம் - 1 15.00; பாகம் - 2 32.00; பெண்களுக்கான எளிய உடற்பயிற்சிகள் 18.00; ஆரோக்கியத் திற்கான உணவு முறைகள் 15.50.

---

***மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பி.யில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக் கொள்வது சிக்கனம். ஷோரூம் விற்பனை நேரம் : காலை 9.00 முதல் மாலை 6.00 மணி வரை. ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுத வேண்டிய முகவரி :***



# மணிமேகலைப் பிரசுரம்



தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 4342926 தொலைநகல் : 044-4346082

மூடி வைக்கவும் (நீர் போதாவிட்டால், மேலும் கொதி நீர் விட்டுக் கிளறிக் கொள்க).

சற்று ஆறியபின் கையில் எண்ணெய் தடவிக் கொண்டு, மாவை நன்றாகப் பிசைந்து, சிறிய எலுமிச்சை அளவு உருண்டைகளாக உருட்டி, நடுவில் விரலால் குழித்து வைக்கவும். ஒரு வாயகன்ற பாத்திரத்தில் 2 லிட்டர் நீர் வைத்து, தளதளவென கொதிக்க விடவும். (அடுப்பு மிக நன்றாக எரிய வேண்டும்). கொதிக்கும் நீரில் செய்து வைத்துள்ள உருண் டைகளை ஒவ்வொன்றாக தாராளமாக இடை வெளி விட்டு போடவும்.

வெந்ததும் மேலே மிதக்க ஆரம்பிக்கும். எடுத்துவிட்டு மேலும் சில உருண்டைகளை போடவும். எல்லாம் வெந்ததும், உருண்டை களை தட்டில் அடுக்கி அதன் நடுவில் இருக் கும் குழிகளில் புதினா (அ) கொத்தமல்லி அல்லது விருப்பமான சட்னியை வைத்து நிரப்பி பரிமாறவும்.

கண்ணுக்கு அழகாக இருப்பதுடன் அதிக எண்ணையோ நேரமோ செலவில்லாத சத்துள்ள காலை உணவு. (வேகும் போது நீர் போதாவிட்டால் கொதி நீர் சேர்த்துக் கொள்க) உருண்டைகள் வெந்த நீர் லேசாகக் கஞ்சி போல் இருக்கும் சத்துள்ள இந்தக் கஞ்சியில் பால், அல்லது தேங்காய்ப்பால் வெல்லம் ஏலக் காய் சேர்த்துப் பருகக் கொடுக்கலாம்.

இதே மாவை அடையாகவும் தட்டலாம். கொழுக்கட்டையாக பிடித்து ஆவியிலும் வேக வைக்கலாம். சின்னச் சின்ன அரிநெல்லி அளவு உருண்டைகளாக வேகவைத்துத் தாளித் தும் கொடுக்கலாம்.

— எஸ். பட்டம்மா, ஸ்ரீரங்கம்.

---

**பிரஷர் குக்கரை தினமும் சுத்தம் செய்யா விட்டால் கூட பரவாயில்லை. ஆனால் வெயிட்டை தினமும் சுத்தம் செய்யுங்கள். அதனுள் சேரும் பசை அழுக்கின் காரணமாக, குறிப்பிட்ட அழுத்தத்திற்கு சற்று அதிகமான அழுத்தத்தில்தான் விசில் சவுண்ட் வரும். இந்த அதிக அழுத்தம் சில சமயம் வெயிட்டை தூக்கி எறிந்து விடும். அதனால் பாதுகாப் புக்காக வெயிட்டை தவறாமல் தினமும் சுத்தம் செய்யுங்கள்.**

**— ஏ. கஸ்தூரி**



## மூன்றாம் பரிசு ரூ. 100/-

## வெந்திய இட்லி

*தேவையான பொருட்கள் :*

வெந்தியம் - 1 கப்
பச்சைப் பயறு - 1 கப்
கோதுமை ரவை (அ) அரிசி - 2 கப்
பச்சைமிளகாய் - 6
உப்பு - தேவைக்கேற்ப

*செய்முறை :*

வெந்தியம், பச்சைப் பயறு இரண்டையும் தனித் தனியே நீரில் ஊறப் போடவும் (காலை யில்) இரவு நீரை வடிக்கட்டி விட்டு முளை கட்ட விடவும். மறுநாள் இரவு ஊறவைத்த வெந்தியம், பச்சைப்பயறு, கோதுமை ரவை அல்லது 1 மணி நேரம் முன்பு ஊறவைத்த அரிசி, பச்சைமிளகாய் உப்பு சேர்த்து அரைக் கவும். அரைத்த மாவு காலையில் புளித்துப் பொங்கியிருக்கும். நன்றாகக் கலக்கிவிட்டு இட்லி தட்டில் ஊற்றி ஆவியில் வேக விடவும். தொட்டுக் கொள்ள சாம்பார், சட்னி, சில்லி சாஸ் ஏற்றவை. இதுவே வெந்திய இட்லி. காலை வேளையில் வெந்தியம் உண்பதால் மூளை நரம்புகள் வலுவடைந்து உடல் குளிர்ச்சியாகிறது. புரதம் நிறைந்த பச்சைப் பயறு உடலுக்கு ஏற்றது. நார் சத்து நிறைந்த கோதுமை ரவை உடல் எடையை ஏற்றாது.

— கிரிஜா வைத்தியநாதன், பெங்களூர் - 1.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## வெஜிடபிள் புட்டு

*தேவையான பொருட்கள் :*

சம்பா கோதுமை ரவை - 200 கிராம்
பாசிப் பருப்பு - 200 கிராம்
துருவிய காரட் - 200 கிராம்
துருவிய பீட்ரூட் - 200 கிராம்
துருவிய கோஸ் - 200 கிராம்
உதிர்த்த காலிஃப்ளவர் - 200 கிராம்
உருளைக் கிழங்கு - 2
பெரிய வெங்காயம் - 3
பச்சை மிளகாய் - 10
இஞ்சி - 1 துண்டு



பத்து வருடங்களுக்கு முன்பு வாங்கிய எங்கள் வெட்கிரைண்டரில் மாவு அரைபட கடந்த சில மாதங்களாக நீண்ட நேரம் ஆகி வந்தது. உரல் மழமழவென்றிருந்ததால் கல் தச்சனைக் கொண்டு உரலையும் குழவியையும் கொத்தச் செய்தும் பலனில்லை. எலக்ட்ரீஷியன் பெல்ட்டை மாற்ற வேண்டும் என்றார். இதற்கிடையில் ஊரிலிருந்து வந்த என் மாமி இணைக்கும் சங்கிலியில் முதல் வளையத்துக்குப் பதில் இரண்டாவதை மாட்டச் சொன்னார்கள். என்ன ஆச்சர்யம்! புதிது போல் மாவு விரைவில் அரைபட்டு விட்டது. சங்கிலி நாளாவட்டத்தில் தளர்வதால் சாய்ந்திருக்கும் குழவி சற்று நிமிர்ந்து விடுகிறது. இடைவெளி அதிகரிப்பே மசியும் திறன் குறைய காரணம் என்று விளக்கினார் அவர்.

எஸ். சரோஜினி

---

கறிவேப்பிலை, கொத்தமல்லி - சிறிதளவு
துருவிய தேங்காய் - 1 கோப்பை
முளை கட்டிய பட்டாணி - 200 கிராம்
எலுமிச்சம் பழம் - 1
உப்பு - தேவைக்கேற்ப

*செய்முறை :*

கோதுமை ரவையை வெறும் வாணலியில் போட்டு சிவக்க வறுத்து, ஆறியபின் 5 நிமிடம் தண்ணீரில் ஊறவைக்கவும். பாசிப் பருப்பையும் ஊற வைத்து அதிக தண்ணீர் சேர்க்காமல் நன்றாக அரைத்துக் கொள்ளவும். அத்துடன் கோதுமை ரவை, உப்பு, காரட், பீட்ரூட், கோஸ் கலந்து இட்லி மாவு பதத்தில் கரைத்துக் கொண்டு, அடுப்பில் இட்லி பானையை வைத்து இட்லி தட்டுகளில் ஊற்றி வேக விடவும். வெந்ததும் தட்டில் கொட்டி ஆறவிட்டு நன்றாக உதிர்த்துக் கொள்ளவும்.

வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, கறி வேப்பிலை, கொத்தமல்லியை பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். உருளைக் கிழங்கை கழுவி சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். காலிஃபிளவரை உப்பு கலந்த கொதி நீரில் போட்டு எடுக்கவும். பட்டாணியை உப்பு சேர்த்து வேக விடவும். காலிஃபிளவர், உருளைக்கிழங்கையும் சேர்த்து வேக வைத்துக் கொள்ளவும்.

அடிகனமான அகலமான பாத்திரத்தில் எண்ணெய் ஊற்றி அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் கடுகு உளுத்தம் பருப்பு போட்டு தாளித்து, வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, கறிவேப்பிலை, கொத்தமல்லி சேர்த்து வதக்கி, பட்டாணி, உருளைக் கிழங்கு, காலிஃபிளவர், தேங்காய்த் துருவல் சேர்த்து நன்றாகக் கிளறவும். அதில் உதிர்த்து வைத்துள்ள புட்டு, சேர்த்து எலுமிச்சம் பழம் பிழிந்து நன்றாகக் கிளறி இறக்கவும். இதுவே சத்தான சுவையான வெஜிடபிள் புட்டு.

**— திராவிட மணிமேகநாதன், திருபுவனம்.**

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

# அவல் பொங்கல்

*தேவையான பொருட்கள் :*

அவல் - 1 கப்
பாசிப்பருப்பு - 4 மேஜை கரண்டி
முந்திரிப் பருப்பு - 10
பச்சை மிளகாய் - 1
சீரகம் - 1 டீஸ்பூன்
மிளகு - 15
கருவேப்பிலை - சிறிதளவு
பெருங்காயம் - சிறிதளவு
நெய் - 4 மேஜை கரண்டி
உப்பு - தேவைக்கேற்ப

*செய்முறை :*

அவலை சுத்தப்படுத்தி, தண்ணீரில் போட்டு களைந்து கல் நீக்கி தண்ணீரை வடித்த பின் இரண்டு கப் தண்ணீரில் நனைத்து வைக்கவும். சுமார் பத்து நிமிடம் ஊறினால் போதும். கருவேப்பிலை, பச்சைமிளகாய் இரண்டையும் அலம்பவும். முந்திரிப் பருப்பை சிறிய துண்டுகளாக செய்யவும். மிளகு, சீரகம், பெருங்காயம் ஆகியவற்றைப் பொடி செய்து வைத்துக் கொள்ளவும். பச்சை மிளகாயை ஒன்றிரண்டாய் தட்டி அவலில் சேர்த்து உப்பைப் போடவும்.

திட்டமாய் தண்ணீர் வைத்து பாசிப் பருப்பை வேக வைத்து அத்துடன் அவலை சேர்த்துக் கிளறி அடுப்பிலிருந்து இறக்கி விடவும். வாணலியில் கொஞ்சம் நெய் விட்டு முந்திரிப் பருப்பு வறுத்து கறுவேப்பிலையை கிள்ளி போட்டு மீதமுள்ள நெய் முந்திரிப்பருப்பு இரண்டையும் சேர்த்து உபயோகிக்கவும்.

**— ஆர். பானுமாதி, சென்னை - 61.**

# வெந்நீர் குடித்தால் கொழுப்பு குறையும்!

மனிதர்கள் அனைவருமே அழகானவர்கள்தான். ஆனால் இவர்கள் இயற்கையின் கோட்பாட்டிற்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்டால் என்றும் மங்கா அழகுடன் விளங்கலாம்.

மனிதப் பிறவியில் "அழகு", என்றால் குறிப்பாகப் பெண்களையே குறிக்கும். பெண்களே தங்களை விதவிதமாக அலங்கரித்துக் கொண்டு அழகுடன் திகழ விரும்புகின்றனர். இவர்களின் இந்த எண்ணம் - இயற்கையாகவே, இறைவன் கொடுத்த வரம். அழகு என்பது ஒருவருக்கு ஓர் குறிப்பிட்ட உடல் பாகத்தில் தான் அமைந்துள்ளது என்று கருதுவது ஏற்புடையது அல்ல. அழகானது உள்ளங்கால் முதல் உச்சிவரை வியாபித்து இருக்க வேண்டும்.

பெண்கள் தங்கள் அழகினைப் பேணிக் காக்கவும், அழகான தோற்றத்தைப் பாதிக்கும் - பல விதமான உடல் கூறு கோளாறுகளுக்கு மருத்துவ ஆலோசனை கூறவும் குறிப்பாக மூலிகை சிகிச்சை மூலம் சிகிச்சை செய்யவும் எஸ்.கே. மூலிகை மருத்துவமனையை சென்னை இராயப்பேட்டையில் உள்ள ஜானி ஜஹான் கான் சாலையில் ஜாம்பஜார் காவல் நிலையம் எதிரில் அமைத்துள்ளனர்.

இதன் இயக்குனர் டாக்டர் சையது எம்.எம். அமீன், யுனானி மருத்துவத்தில் மூன்று தலைமுறையாகச் சேவை செய்து வரும் பரம்பரையில் பிறந்து யுனானி மருத்துவப் பட்டப்படிப்பு தவிர மூலிகை மருத்துவத்தில் உலகப் பல்கலைக் கழகம் (இலங்கைப் பிரிவில்) பி.எச்டி. பட்டமும் பெற்றவர்.

டாக்டர் அமீன் அவர்கள், பெண்கள் தம் உடல் நலம் காத்து, உடல் கூறு கோளாறுகளை நிவர்த்தி செய்து, நல்ல அழகுடன் விளங்க ஆலோசனைகள் கூறுகிறார் —

"பெண்களில் பலருக்கும் இடுப்பு, வயிறு போன்ற இடங்களில்தான் அதிகமான சதை போடும். சிலருக்குக் கால்களிலும் கூட சதை அதிகம் போடும். உணவு வகைகளை அறிந்து தேர்ந்தெடுத்து உண்ண இந்தப் பிரச்னை தானாகத் தீரும். இப்படி உடல் எடையைக் குறைக்கவென வருவோரின் எடை, மார்பு, வயிறு, இடுப்பு, இவைகளின் சுற்றளவுகளை எடுத்துக் குறித்துக் கொண்ட பின்பே இங்கே சிகிச்சையைத் தொடங்குகிறார்கள். முதலில் சைக்கிள் பயிற்சி. இது உடல் உறுப்புகளை ஒருமித்த நிலைக்குக் கொண்டு வரும். அடுத்த சிகிச்சை 'திரெட்மில்' கால் பாதங்களுக்குத் தரப்படும். உடல் நரம்புகள் எல்லாமே பாதங்களில் முடிவதால் இந்த சிகிச்சை நம் உடலிலுள்ள எல்லா நரம்புகளையும் ஊக்குவிக்கும். பின்பு "பெல்லி ரோலர்" எனப்படும் கருவியை சதை அதிகப்படியாக இருக்கும் பகுதியில் சுழலவிடுகிறார்கள். அங்குள்ள கெட்டியான கொழுப்பு நீர்த்து விடும். இப்படி நீர்த்துப் போகும் கொழுப்பை "டர்கிஸ்பாத்" எனப்படும் மூலிகைக் குளியல் மூலம் வியர்வையாக வெளியேற்றப்படும். இப்படித் தொடர்ந்து இரண்டு அல்லது மூன்று மாதங்கள் வாரம் ஒருமுறை செய்து வர உடல் அழகான வடிவம் பெறும்.



• டாக்டர் அமீன்

**வீடு, வாசல், கூட்டும் துடப்பம் கைகளை குத்தாமல் இருக்க பழைய 'சாக்ஸ்களை அதில் மாட்டி ஒரு ரப்பர் பேண்டை போட்டு வைத்து விடவும்.**
**— வி.கே.வி. வனிதா சுப்ரமணியம்**



பயிற்சிகள் முடிந்த பின்பு ஒவ்வொரு முறையும் எடை, இடுப்பு, வயிறு, மார்பு போன்றவைகளின் சுற்றளவு போன்றவை மீண்டும் குறித்துக் கொள்ளப்படும். உடல் எடை குறைந்த பின்பு மீண்டும் மீண்டும் இங்கே தொடர்ந்து வர வேண்டிய தேவை யில்லை. உடல் ஏற்றுக் கொள்ளாத இனிப்பு, கொழுப்பு வகைகள், எண்ணெய்ப் பண்டங் கள், ஐஸ்கிரீம், தேங்காய், குளிர்பானம் இவை களைத் தவிர்த்தாலே போதும் எடை யென்றுமே கூடாது. ஒரேடியாக விட முடியா விட்டால் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துப் பின்பு நிறுத்தலாம். அப்படியே என்றாவது ஒரு நாள் உண்ண வேண்டிய அவசியம் நேரிட் டால் பொறுக்கக் கூடிய சூடுள்ள வெந்நீரை ஒரு டம்ளர் குடித்தாலே போதும். உணவில் இருக்கும் கொழுப்பு சத்து உடலில் சேராமல் நீர்த்து விடும். வடிவம் இல்லாமல் தலை முதல் கால் வரை ஒரே மாதிரி பருமன் உள்ளவர் களும், பரம்பரையான உடல் பருமன் உள்ளவர் களும் கூட இது போன்ற சிகிச்சை முறைகளில் உடல் மெலிந்து நல்ல வடிவம் பெற முடியும்" என்கிறார் அமீன்.

"உடல் மிகவும் ஒல்லியாக இருந்தாலும் அழகாக இருக்காது. அவர்கள் சற்று பருமனாகவும் சில வழிகள் உண்டு. காலையும், மாலையும் 200 மி.லி. பால் சர்க்கரை சேர்க் காமல், இளஞ் சூடாக 7 நாட்கள் தொடர்ந்து அருந்த வேண் டும். பின்பு தினமும் மூன்று வேளை இதே போன்ற பாலுடன் அத்திப் பழம் சேர்த்து அருந்தி வர உடல் எடை கூட ஆரம் பிக்கும். தினமும் உணவில் பால், தயிர், முள்ளங்கி, பீட்ரூட், மீன் எண்ணெய், சோயா பீன்ஸ் போன்றவைகளை சேர்த்துக் கொண்டு வர உடல் நன்கு கொழு கொழுவென அழகாக மாறிவிடும்.

முடி நீண்டு அடர்த்தியாக வளரவில் லையே என்ற குறை பலருக்கும் உண்டு. 15 நாட்களுக்கு ஒரு முறை சுத்தமான வெண் ணெயைத் தலையில் தடவி அரை மணி நேரம் ஊற வைத்துத் தலைகுளிக்க வேண்டும். தலை குளிக்கும் போது சீயக்காய் மட்டுமே பயன் படுத்த வேண்டும். முடி உதிர தலைப்பகுதி வறட்சியாவதும், ஈரமாவதுமே மிக முக்கிய காரணங்களாகும். ஒவ்வாமை, தலைப் பொடுகு போன்றவைகளினாலும் கூட உதிர்வு ஏற்படும். தலைமுடியின் பிரச்னைக்கு ஏற்ற வகையில் சிகிச்சை தரப்படும். இங்கு தரப்படும் மூலிகைத் தைலத்தை தேங்காய் எண்ணெயுடன் கலந்து மயிர்க்கால்களில் மசாஜ் செய்ய முடி கொட் டாமல் தோலுடன் பற்றி உறுதியுடன் இருப்ப துடன் நீண்டு வளர்கிறது. சுரப்பிகள் உசுப்பி விடப்பட்டு நன்கு செயலாற்றம் செய்யப் படுவதால் முடி நன்கு அடர்ந்து வளர்கிறது.

பிளாஸ்டிக் சீப்பு, ஷாம்பு போன்றவைகள் சிலருக்கு அலர்ஜி ஆவதாலும் முடி உதிரும். இது போன்றவர்கள் மருத்துவரின் ஆலோ சனை பெறுவது நலம். கட்டை மற்றும் கொம்புச் சீப்புகளை பயன்படுத்தலாம். வீட்டி லேயே சீகைக் காயையும், வெந்தியத்தையும் ஊறவைத்து அரைத்துத் தலைக்குத் தேய்த்துக் குளிக்க வேண்டும். சாம்பிராணி புகை போடு வதனால் தலைப் பொடுகையும், உதிர்வதையும் தடுக்கலாம்.

கண்களில் வரும் கீழ் கருவளையம் மற்றும் முகத்தில் கறும் புள்ளி தோன்ற முக்கிய கார ணம் ஜீரண உறுப்புகளின் ஒன்றான கல்லீரல் பாதிக்கப்படுவதுதான். இதனால் குடல் பகுதி உஷ்ணமடைகிறது. கண்களின் அடியில் கரு வளையம் ஏற்படுகிறது. யுனானி முறையில் குடல் உஷ்ணம் சமம் செய்யப்படுவதால் கல் லீரல் பாதிப்பு சரி செய்யப்பட்டு கருவளையம் தானாக மறைந்து விடும். கருவளையம் முதிர்ந்த நிலையில் இருந்தால் யுனானி முறையில் தயாரிக்கப்பட்ட தைலத்தை 40 முதல் 60 நாட் கள் வரை தொடர்ந்து தடவி வர கருவளையம் நீங்கி முகம் பொலிவு பெறும்.

டீன் ஏஜில் உள்ளவர்களுக்கு தலையில் பிரச்னை, முகப்பரு, எண்ணெய்ப் பசையுள்ள முகம் மட்டுமல்லாமல் வறண்ட முகத்திலும் கூட முகப்பரு தோன்றும். இதனால் பாதிக்கப் பட்டவர்களின் தோலின் தன்மை அறிந்து மூலிகை நீர் தடவி, "எலக்ட்ரோ மேக்னட் வைப்ரேட்டர்" மூலம் பருக்களின் ஆணி வேர் அதிரச் செய்யப்படும். பின்பு "நியூட்ரிஸ்கின்" மூலிகைப் பொடியைப் பாலில் கலந்து முகத் தில் பூசி சிகிச்சை அளிக்கப்படும். இந்த சிகிச் சையுடன் இரத்தத்தைச் சுத்தம் செய்ய யுனானி

மூலிகை லேகியமும், சர்பத்தும் கொடுக்கப் படும்.

பிள்ளைப் பேறுக்கு பின் அடிவயிற்றில் ஏற்படும் சுருக்கங்கள், பொதுவாக கவனக் குறைவினால் ஏற்படும் குறையே. இச் சுருக் கத்தை அவர்களே விரும்புவதில்லை. அதற்காக வருந்துபவர்களும் உண்டு. இக் குறை ஏற் படாமல் இருக்க இரண்டு முறைகளைக் கை யாள வேண்டும். ஒன்று குழந்தை கருத்தரித்த 7 வது மாதத்தில் ஆலோசனை பெறுவது மற் றொன்று, குழந்தை பிறந்த பின் 3 வது மாதத் தில் இருந்தும், ஆலிவ் ஆயிலில் மூலிகை மருந்து கலந்த தைலத்தைத் தடவி வருவது. 7 வது மாதத்தில் ஆலோசனை செய்து கொண்டு, குழந்தை பிறந்தபின், சிகிச்சை பெறுவது நல்லது. மூன்று மாத காலத்தில், சுருக்கம் மறைந்து பழைய நிலை அடையும்.

பெண்களின் மார்பகங்கள் தங்களின், விருப்பத்திற்கு ஏற்ப வளர்ச்சியடையாமல், இருந்தால் அதற்கு அவர்களின் உடம்பில் சுரக் கும் ஹார்மோன் சுரப்பியின் குறைபாடாகும். மூலிகை மருந்துகளால் அக்கு பிரஷர் சிகிச்சை, தேவையான உடல் பயிற்சிகள், மற்றும் மருத் துவ ஆலோசனைகள் மூலமும் - மார்பக வளர்ச்சியை சீர் செய்து கொள்ளலாம்.

அடோலசன்ட் - வயதில், இளைஞர்களுக்கு மார்பகங்கள் வளர்ச்சியடைந்து, பால் போன்ற திரவமும், வெளிவரும். இவர்கள் வீட்டில், தன் தாய் தந்தையர், உறவினர் முன், பனியனோ, சட்டையோ, மேல் துண்டோ இல்லாமல், நிற்கக் கூட வெட்கப்படுவர். இக்குறை தற் காலிகமானதே. ஆனால் சிலருக்கு வளர்ச்சி யடைந்து கரையாமல் இருந்து விடுவதும்



**பல் தேய்க்கும் பிரஷ்ஷை உப்பு கலந்த வெந்நீரில் வாரம் ஒருமுறை போட்டு எடுத்தால், பிரஷ்ஷில் உள்ள பேக்டீரியாகள் அழியும். பிரஷ்ஷும் ஃப்ரஷ்ஷாக இருக்கும்!**

**— ஆர். சீதா**

உண்டு. இக்குறையை மூலிகை மருந்தாலும் தேகப் பயிற்சியாலும் மூன்று மாதத்தில் சரி செய்து தலை நிமிர வைத்து விடலாம்.

தேவையில்லாமல் முகத்தில் வளரும் ரோமங்களும் பெண்களின் இன்னொரு பிரச்னை. நல்ல அழகை இது பாதிக்கவல்லது. வேண்டாத ரோமங்களை மூலிகை மருந்துவ மனையில் தயாரிக்கப்பட்டுள்ள பசையைத் தடவி ஊற வைத்து நீக்கிய பின்பு மெல்லிய மின்காந்த அதிர்வுகளை உண்டாக்கி மீண்டும் ரோமம் முளைக்காமல் செய்து விடவும் சிகிச்சை உண்டு.

1. உண்ணும் உணவிற்கு ஏற்றபடி செய்யும் வேலை அமைய வேண்டும். கூடுமானவரை வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும்.

2. பகல் தூக்கம் தவிர்க்கப்பட வேண்டும்.

3. தினமும் நடைப் பயிற்சி அவசியமான ஒன்று. ஆனால் நடக்கும் நேரத்தில் மனதில் எந்த வித சிந்தனையும் கூடாது.

4. பரு நீங்க தினமும் இரண்டு முறை சோப்பு போடாமல் இளம் சூடான நீரில் முகம் கழுவ வேண்டும்.

5. நல்ல புதிய காய்கறிகள், பழங்களை உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

6. தலை முடிக்கு அதிக எண்ணெயும் போடக் கூடாது. அதே நேரம் எண்ணெ ı போடாமலும் இருக்கக் கூடாது. நல்ல சுத்த மான தேங்காய் எண்ணெய் நல்லது.

7. தண்ணீரைக் காய்ச்சி வடிகட்டி இளஞ்சூடாக ஆக்கி அதனுடன் சிறிதளவு (ஒரு சிட்டிகை) கல்லுப்பு உப்பைப் போட்டு கலக்கி நன்றாக ஆற விட வேண்டும். ஆறிய தண்ணீரைக் கொண்டு வாரம் இரண்டு முறை முகத்தைக் கழுவ கண்கள் ஒளி பெறும் முகப் பொலிவும் ஏற்படும்.

8. அயோடின் சத்து குறைவு, சில பெண்களுக்கு முகத்தில் கருக்கத்தை ஏற்படுத்தி அழகைக் கெடுக்கும். பழங்களிலும், பச்சைக் காய் கறிகளிலும், கடல் மீன்களிலும் இச் சத்து அதிகமாக உள்ளது. இவற்றை அதிகமாக உணவில் சேர்த்துக் கொண்டால் முகக் கருக்கம் நீங்கி அழகுடன் விளங்கலாம்.

9. குங்குமப் பூவையும், தேங்காய்ப் பாலையும் தேவையான அளவு எடுத்துப் பசை போல் அரைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். இப்பசையை பருக்கள் இருக்கும் இடத்தில் தொடர்ந்து 15 நாட்கள் பூசி வர முகப் பருக்கள் மறைந்து முகம் பொலிவு பெறும்.

10. ஒரு கரண்டி தயிருடன், பாதி தக்காளிப் பழத்தை நன்றாகக் கலந்து முகத்தில் தடவி அரைமணி நேரம் கழித்த பின்பு குளிர்ந்த தண்ணீரில் கழுவி விட வேண்டும். இப்படித் தொடர்ந்து 15 நாட்கள் செய்து வர கரும்புள்ளிகள் மறைந்து முகம் பொலிவு பெறும்.

# துணை

இன்னும் நாலே நாட்களில் சங்கரன் வெளிநாடு செல்ல வேண்டும். அலுவலக விஷயமாக கொரியாவுக்கு மூன்று வாரப் பயணம். அங்கே ஒரு ஸெமினாரில் அவர் பங்கேற்கிறார். இதற்கான குறிப்புக்களை அவர் பத்து நாட்களாகவே சேகரித்து வைத்திருந்தார். இப்போது எல்லாமே தயார்.

வீட்டில் மனைவி பார்வதியும் மகள் கவிதாவும் தான். மகன் மணி அதே ஊரில் தனிக்குடித்தனம் வைத்திருந்தான். சண்டை சச்சரவு எதுவுமில்லை. அவன் மனைவி காயத்ரியும் வேலைக்குப் போவதால் அலுவலகத்துக்குப் பக்கத்தில் குடியிருப்பது யதார்த்த ரீதியாகச் சௌகரியம்... இருவரும் சம்பாதிப்பதால் வீட்டு வாடகை கொடுப்பது கஷ்டமில்லை. தவிர, அருகில் இருந்தால் பிரச்னைகள் தோன்றும், தூர இருந்தால் அன்பு வளரும் என்று சங்கரன் பார்வதி இருவருமே நினைத்ததால், மகனின் திருமணம் நடந்த கையோடு தனிக் குடித்தனம் வைத்துவிடச் சொன்னார்கள். மணியும் காயத்ரியும் ஆச்சரியப்பட்டனர். பின் சம்மதித்தனர்... பெற்றோரையும் தங்கையையும் பார்க்க மணி தன் மனைவியோடு சனிக்கிழமை காலை வந்து, ஞாயிறு மாலை திரும்புவதை வழக்கமாக்கிக் கொண்டான்.

காயத்ரி ஓர் அழகான ஆண் குழந்தைக்குத் தாயான போது கூட இந்த வழக்கம் மாறவில்லை. அவளுடைய தாய்வீடு அருகிலேயே இருந்ததால், காலையில் அலுவலகம் செல்லுமுன் குழந்தையைத் தாயிடம் விட்டு விடுவாள். மாலையில் குழந்தையை அழைத்துக் கொண்டு வந்துவிடுவாள். சனி, ஞாயிறன்றுதான் சங்கரன் பார்வதிக்குத் தங்கள் பேரனின் தரிசனம் கிடைக்கும். ஆசை தீரக் கொஞ்சுவார்கள். பின், பரம ஞானிகள் போல், குழந்தைக்கு டாடா சொல்லி விட்டு, மகனும் மருமகளும் பேரனும் ஸ்கூட்டரில் விரைந்து செல்வதைச் சலனமே இல்லாமல் பார்த்துக் கொண்டிருப்பார்கள்.



*— ருக்மிணி பார்த்தசாரதி..*

பேரன் கார்த்திக் இப்போது கிருஷ்ணவிக்ரகம் போல் அழகான, மூன்று வயதுக் குழந்தை.

மகள் கவிதா கல்லூரி மாணவி. இப்போது பரீட்சை சமயமாதலால் படிப்பில் முழு கவனமும் செலுத்திக் கொண்டிருந்தாள்.

இந்த நிலையில்தான் பார்வதி குளியலறையில் வழுக்கி விழுந்தாள்... வலது காலை ஊ.. முடியாமல் வலி தெறித்தது. ஆஸ்பத்திரிக்கு தூக்கிச் சென்று எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் வலது கால் இடுப்போடு சேருமிடத்தில் எலும்பில் சிறு விரிசல் தெரிந்தது.

ஆபரேஷன் வேண்டாம், காலை அசைக்காமலிருந்தால் ஆறு வாரங்களில் விரிசல் தானே ஒட்டிக் கொள்ளும் என்று எலும்பு வைத்திய நிபுணர் அபிப்பிராயப்பட்டார். அதன் படி, காலை அசைக்க முடியாதபடி தாமஸ் ஸ்ப்ளின்ட் (Thomas Splint) என்ற கனமான இரும்பு வளையத்தைக் காலில் பொருத்திவிட்டு பார்வதியை வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள்.

ஆறு வாரங்கள் படுத்த படுக்கையாக இருக்க வேண்டும். ஒருக்களித்துப் படுக்க முடியாது. இடது காலை நீட்டி மடக்கலாமே தவிர வலது காலை அசைக்கக் கூட முடியாது. கால் விரல்களை மட்டும் அசைத்துக் கொண்டே இருக்க வேண்டும்!

தம் வெளிநாட்டுப் பயணத்தை ரத்து செய்து விடுவதாகச் சங்கரன் கூறினபோது .கன் மணி அதை ஏற்கவில்லை. "நீங்கள் வரும் வரை நாங்கள் இங்கேயே இருக்கிறோம் அப்பா... காயத்ரி ஒரு மாத லீவு எடுத்துக் கொண்டு சமையலை





**வெயில் காலமாயிற்றே... வேர்வையைப் போக்கி ஃப்ரஷ்ஷாக இருக்க, நான்கு சொட்டு, எலுமிச்சம்பழ ரசத்தை குளிக்கும் தண்ணீரில் சேர்த்து, அதில் குளித்துப் பாருங்கள்! சுகமோ சுகம்!**

**— ஆர். சீதா**



யும் அம்மாவையும் கவனித்துக் கொள்வாள். நான் இங்கிருந்தே ஆபீஸ் போய் வருகிறேன். நாங்கள் இருந்தால் அம்மாவைப் பற்றிக் கவலைப்படாமல் கவிதா பரீட்சைக்குப் படிக்க முடியும். இரவு பகலாக காயத்ரி அம்மாவைப் பார்த்துக் கொள்வாள். கார்த்திக் அருகில் இருந் தால் அம்மாவுக்குச் சந்தோஷமாக இருக்கும். நீங்கள் நிம்மதியாக கொரியா போய்விட்டு வரலாம்!"

"என்ன பார்வதி, உனக்கு இதில் சம்மதமா?" என்றார் சங்கரன்.

"என் எல்லாத் தேவைகளையும் பார்த்துக் கொள்ள காயத்ரி அசிங்கப்பட மாட்டாளா?"

"மாட்டேன்!" என்றாள் காயத்ரி. "என் தாயாருக்குச் செய்ய மாட்டேனா? நீங்கள் ஏன் கூச்சப்படணும்?"

"அவள் சொல்லித்தான் எனக்கே இந்த ஐடியா வந்தது. அம்மா... அவள் சந்தோஷமாக உதவ முன் வரும் போது நீ சங்கோஜப்படறது சரியில்லை!" என்றான் மணி.

பார்வதி யோசித்தாள். மாமியாருக்குப் பணி விடை செய்ய இன்முகத்தோடு முன்வரும் அபூர்வமான, அருமையான மருமகள் தனக்குக் கிடைத்ததை நினைத்த போது பெருமையாக இருந்தது. கூடவே, இப்படி எல்லா தேவைகளுக் கும் பிறர் கையை எதிர்பார்க்க வேண்டிய நிலை தனக்கு வந்துவிட்டதே என்று துக்கம் துக்கமாக வந்தது... சங்கரன் தம் வெளிநாட்டுப் பயணத்தை ரத்து செய்வதால் ஒரு லாபமு மில்லை. இந்த நிலையில் அவரால் அவளுக்கு உதவ முடியாது. கவிதா கவனத்தோடு பரீட் சைக்குப் படிக்க வேண்டுமானால், வீட்டுப் பொறுப்பையும் தாயின் பொறுப்பையும் யாரா வது ஏற்கத்தான் வேண்டும்... வீட்டில் ஆண் துணையாக மணி இருப்பதும் நல்லதுதான்.

பார்வதி சம்மதித்தாள். காலையில் ஒரு மணி நேரம் வந்து அவளுடைய தேவைகளைக் கவனித்துவிட்டு, தலைவாரி, உடம்பு துடைத்து விட்டுப் போக ஒரு நர்ஸை ஏற்பாடு செய்தார் கள். மணி தன் மனைவி, மகனோடு வந்து விட்டான். சங்கரன் கவலையில்லாமல் வெளி நாடு புறப்பட்டார்.

சட்டென்று தன் உலகம் குழந்தை கார்த்திக் கையே சுற்றி இயங்க ஆரம்பித்திருந்ததை உணர்ந்தாள் பார்வதி. வீடு முழுவதும் வளை யவந்து, அவளைத் தூக்கி மடிமேல் வைத்துக் கொண்டு, நெற்றியில் முத்தமிட்டு அணைத்துக் கொள்ளும் பாட்டி காலில் பூதாகார இரும்பு வளையத்தோடு ஆடாமல் அசையாமல் ஒரே இடத்தில் படுத்திருந்ததைக் கண்டு முதலில் பயந்து போனான் கார்த்திக். "பாட்டி! எழுந்து வா, பாட்டி! எனக்குக் கல்கண்டு தா!" என் றான். அதற்கு காயத்ரி, "பாட்டிக்கு உடம்பு சரியில்லை தொந்தரவு பண்ணாதே!" என்றாள். அதன் பிறகு அவன் பெரிய மனித தோரணை யில் பாட்டியைக் கவனிக்கலானான். தன் தாய் காப்பி கலந்து பாட்டியிடம் எடுத்துச் செல்வ தையும், உணவை எடுத்துச் சென்று பரிமாறு வதையும், கை அலம்பி விடுவதையும் பார்த் தான். ஒரு நாள் காயத்ரி சமையலறையில் இருந்தபோது பாட்டியினருகே வந்து அவள் காலில் பொருத்தப்பட்டிருந்த வளையத்தை வெறித்துப் பார்த்தான்.

"இது என்ன பாட்டி?"

"இரும்பு வளையம்டா, கண்ணா!"

"தொட்டுப் பார்க்கட்டுமா?"

"பாரேன்!"

குழந்தை அதைத் தொட்டுப் பார்த்தான். பின், அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

"எழுந்து வா, பாட்டி! நான் உன் கையைப் பிடிச்சு தூக்கிவிடறேன்!"

"முடியாது, கார்த்திக். இந்த இரும்பு வளையம் ரொம்ப கனம்!"

"நான் அதை எடுத்துடறேன்!" அவன் அதை அசைக்கப் பார்த்தபோது பார்வதி அவ சரமாக, "எடுக்கக் கூடாது, கார்த்திக் உன் அப்பாவுக்குக் கோபம் வரும்!" என்றாள்.

அவன் குழப்பத்தோடு அவளைப் பார்த் தான். பின், அறையை விட்டு ஓடிவிட்டான். அவன் பயந்து கொண்டு தன்னை விட்டு விலகிப் போவதாகத் தவித்துப் போனாள் பார் வதி. ஆனால், நாலே நாட்களில், அவளுடைய படுத்த படுக்கை நிலையும், அந்த இரும்பு வளை யமும் சர்வசாதாரண விஷயங்கள் என்பது போல் கார்த்திக் நாள் முழுவதும் அவளோடு பேசுவதும், பெற்றோரோ, அத்தையோ

அழைத்தால் ஓடிப் போவதுமாக சகஜ நிலைக்கு வந்து விட்டான். பார்வதியின் அறையில் அவள் கட்டிலுக்குச் சற்றுத் தொலைவில் தனக்காக ஒரு கட்டில் போட்டிருந்தாள் காயத்ரி. இரவில், மாமியாருக்குத் துணையாக, அவள் கூப்பிட்டால் உடனே உதவ முடிகிற வகையில், அந்தக் கட்டிலில் படுத்துக் கொள்வாள். காலையில் மணி அலுவலகத்துக்கும் கவிதா கல்லூரிக்கும் சென்ற பிறகு குழந்தையைக் குளிப்பாட்டி சாதம் ஊட்டிவிட்டு அந்தக் கட்டில் மேல் உட்கார வைப்பாள் காயத்ரி. "சமர்த்தாய்ப் பாட்டியோடு பேசிக் கொண்டிரு, என்ன?" என்று விட்டு மற்ற வீட்டு வேலைகளைக் கவனிக்கப் போய்விடுவாள். எல்லாவற்றையும் முடித்துவிட்டு அவள் வர ஒரு மணி நேரமாகும்.

அந்த ஒரு மணி நேரம் பாட்டியைப் பொறுத்தவரை பொற்காலம். கிடைத்தற்கரிய பொக்கிஷம். திரும்பக் கிடைக்காத சுகானுபவம்.

"கதை சொல்லு பாட்டி!"

"என்ன கதை?"

"சிங்கம், சுண்டெலி கதை!"

பார்வதி சொல்லச் சொல்ல கார்த்திக் "உம்... உம்..." என்று கவனமாகக் கேட்பான். தன்னைத் தின்னாமல் விட்ட சிங்கத்துக்கு நன்றிக் கடனாக, சிங்கம் வலையில் சிக்கிய போது சுண்டெலி வலையைக் கடித்து அறுத்து அதற்கு விடுதலையளித்ததைப் பார்வதி வர்ணிக்கும் போது கார்த்திக் கைகொட்டி ஆரவாரிப்பான். முகமெல்லாம் பூரிப்போடு கலகல வென்று சிரிப்பான்.

மறுநாள், மற்றொரு பிரதி உபகாரக் கதை... குருவியும், எறும்பும்... பார்வதி வேறு ஏதாவது கதை சொல்ல ஆரம்பித்தால் குழந்தை, "இது வேண்டாம் பாட்டி... சிங்கம், சுண்டெலி கதை சொல்லு!" என்பான். பிரதி உபகாரம் என்ற தத்துவம் எத்தனை சுலபமாகக் குழந்தை மனத்தில் பதிகிறது என்று வியந்து போவாள் பார்வதி.

நாட்கள் நகர்ந்தன. கொரியாவிலிருந்து சங்கரன் பார்வதிக்குக் கடிதமெழுதியிருந்தார். தான் நலமாக இருப்பதாகவும் அவளுக்கு எந்த விதமான பிரச்னையும் இருக்காது என்று தான் நம்புவதாகவும் எழுதியிருந்தார். பேரனுக்கு ஒரு அழகு கொஞ்சும் குழந்தையின் படம் கொண்ட கார்டையும் அனுப்பியிருந்தார். அதை அவன் எல்லோரிடமும் காட்டிக் காட்டி மகிழ்ந்தான். பாட்டியிடம், "இது யார் பாட்டி?" என்றான்.

"கார்த்திக் மாதிரி ஒரு அழகான பையன்!"

சற்று நேரம் அதையே பார்த்துக் கொண்டிருந்தவன், "இது உனக்கு, பாட்டி!" என்று அதை அவள் தலையணைக்கடியில் நுழைத்து விட்டு ஓடினான்!

நாள் மேல் நாளாக விரைந்து சென்றன. மகனின் அனுசரணையான விசாரிப்பு.. காயத்ரியின் இன்முகமான பணிவிடை, இதமான வார்த்தைகள்... கவிதாவின் கல்லூரி நியமத்தில் எந்தவிதமான தடங்கலும் இல்லாத நிலை.. எல்லாவற்றுக்கும் மேலாக கார்த்திக்கின் பேச்சு, விளையாட்டு, கொஞ்சல், ஸ்பரிசம்.....

இப்போதெல்லாம் பாட்டியிடம் கதை கேட்கும் நேரம் தவிர மற்ற நேரங்களிலும் அவள் அறைக்கு ஓடி வருவதும், விளையாடுவதுமாக இருந்தான் கார்த்திக். வண்ணப் படங்கள் அச்சிட்ட தன் புத்தகங்களைக் காட்டி, "இது என்ன?" என்று அலுக்காமல் கேட்டான். அவளும் பொறுமையாகப் பதில் சொன்னாள். தன் பொம்மைகளை எடுத்து வந்து தரையில் பரப்பி, அவைகளை இயக்கிக் காட்டினான். ஸ்டார்ட் செய்தால் மத்தளம் வாசிக்கும் குரங்கு (பாட்டரி பொருத்திய பொம்மை), சாவி கொடுத்தால் ஓடும் பஸ், மெத்து மெத்தென்ற பெரிய கரடி பொம்மை, தண்டவாளத்தில் ஓடும் ரயில் வண்டி, இப்படிப் பலப்பல...

சங்கரன் பயணம் முடிந்து தாய்நாடு திரும்ப இன்னும் மூன்று நாட்கள்தான் இருந்தன. கவிதாவுக்குக் கடைசி பரீட்சை முடிந்துவிட்டது. சமையலிலும் மற்ற வீட்டு வேலைகளிலும் அவளும் உதவினதால் காயத்ரியின் மீதிருந்த வேலைச் சுமை இப்போது குறைந்திருந்தது. அவ்விரு பெண்களின் பேச்சும் சிரிப்புமாக வீடு கலகலப்பாக இருந்தது. இரவில் தாய்க்குத் துணையாகத் தான் அவளுடைய அறையில் இருக்க கவிதா முன்வந்த போது காயத்ரி அன்புடன் மறுத்தாள். "எனக்கு



**சூடான எண்ணெய் அல்லது நெருப்புச் சுட்டுக் காயம் ஆகிவிட்டால் அதன் மேல் சிறிது தேனைத் தடவி விட்டால் புண் குணமாகும்.**

**— பி. சுசீலா**



இது வடக சீஸன். ஒரு கைப்பிடி அளவு உளுத்தம் பருப்பு, வெந்தயம், உப்பு இவற்றை ஊறவைத்து அத்துடன் கொஞ்சம் அளவில் கூடுதலாகவே பச்சை மிளகாய் சேர்த்து கரகரப்பாக அரைத்து வடை மாதிரி தட்டி வெயிலில் காய வைத்து எடுத்து வைத்துக் கொள்ளவும். எண்ணெயில் பொரித்து மோர் சாதத்துக்குத் தொட்டுக் கொள்ளலாம். மோர் மிளகாய் மாதிரி மிக்க ருசியாக இருக்கும்.

— உஷா நாராயண்



மனசு கேட்காது கவிதா. இத்தனை நாள் அம்மாவுக்குச் சந்தோஷமாகப் பணிவிடை பண்ணினேன். அந்தச் சந்தோஷத்தைத் தொடர விடு!" என்றாள். பார்வதியின் கண்கள் நிறைந்து விட்டன. இப்படியொரு குணவதியான பெண் தன் மகனுக்குச் சகதர்மிணியாக வாய்த்தது எத்தகைய பாக்கியம்!

இரவில், பார்வதிக்கு உணவளித்த பிறகு அவளருகேயிருந்த சிறு மேஜை மீது ஒரு டம்ளரில் தண்ணீர் வைத்து மூடிவிட்டு, "ஏதாவது வேண்டுமா, அம்மா?" என்பாள் காயத்ரி. "வேண்டாம், காயத்ரி, விளக்கை அணைச்சுடு!" என்பாள் பார்வதி. அவள் படுத்திருந்த அறைக்குப் பக்கத்தில் ஒரு வராந்தா... அறை விளக்கை காயத்ரி அணைப்பாளே தவிர, வராந்தா விளக்கு எரிந்து கொண்டுதான் இருக்கும்.... அதன் வெளிச்சம் அறைக்குள் மங்கலாகப் பிரவேசிக்கும். வராந்தாவுக்கு அந்தப் பக்கம் ஹால். அங்கு டி.வி. மணி, காயத்ரி, கவிதா மூவரும் பேசிக் கொண்டும் டி.வி. நிகழ்ச்சியை விமர்சித்துக் கொண்டும் இருப்பது அவளுக்குக் கேட்கும். நடுநடுவே கார்த்திக்கின் மழலைப் பேச்சு தேனாகக் கலந்து இன்னிசையாகச் செவிகளில் பாயும். சற்று நேரத்தில் கார்த்திக்கின் குரல் அடங்கிப் போகும். "குழந்தை தூங்கிவிட்டான்!" என்று நினைத்துக் கொள்வாள் பார்வதி. பேச்சுக் குரல்கள் தாலாட்டுப்பாட, தானும் தூங்கி விடுவாள். நடுநிசியில் விழித்துக் கொண்டால் பக்கத்துக் கட்டிலில் காயத்ரி படுத்திருப்பது தெரியும்.

இன்றும் பார்வதிக்கு உணவு பரிமாறி விட்டு, அவளுடைய தலையணையைத் தட்டிப் போட்டு விட்டு, அவள் சௌகரியமாகப் படுத்துக் கொண்டதும் அருகேயிருந்த மேஜை மீது தண்ணீர் தம்ளரை வைத்து மூடிவிட்டு, வழக்கப்படி அறை விளக்கை அணைத்து வராந்தா விளக்கை ஏற்றிவிட்டு காயத்ரி ஹாலுக்குச் சென்றாள். பார்வதி கண்களை மூடிக் கொண்டாள். டி.வியிருந்து பாட்டும் பேச்சுமாக ஒலிகள்... நடுநடுவே மணி, காயத்ரி, கவிதாவின் சம்பாஷணை... கார்த்திக்கின் மழலைப் பேச்சு...

ஏனோ இன்று தூக்கம் வரமறுத்தது. இன்று நாள் முழுவதும் கார்த்திக் வழக்கத்துக்கு அதிகமாகவே அவளோடு விளையாடியிருந்தான். இரும்பு வளையம் பொருத்தியிருந்த அவள் காலைத் தொட்டு, "வலிக்கிறதா, பாட்டி?" என்று கவலையோடு கேட்டான். அவள் கதை சொன்னதும் பதிலுக்கு நர்ஸரி ரைம்ஸ் சொன்னான். அவளுடைய கண் இமைகளுக்குள் இவையெல்லாம் காட்சிகளாக ஓடின. குழந்தையைத் தூக்கிக் கொஞ்சி எத்தனை நாளாகி விட்டது!

சட்டென்று மென்மையான காலடியோசை கேட்க, கண் திறந்தாள் பார்வதி. ஹாலில் தந்தையும் தாயும் அத்தையும் பேசிக் கொண்டிருக்க, கார்த்திக் மட்டும் வராந்தாவைக் கடந்து, அவளுடைய அறைக்கு வந்து, அவளருகே நின்று கொண்டான். வராந்தாவின் மங்கிய ஒளியில் அவனுடைய சிறு உருவம் ஒப்பற்ற அழகோடு பொலிந்தது. குழந்தை முகத்தில் எல்லையில்லா அன்பு... மெள்ள, தன் சிறு கையை நீட்டி அவள் கன்னத்தை வருடி விட்டான். பின், "தூங்கு பாட்டி!" என்றவன் அவளுக்குத் துணையாக அவளுக்குப் பக்கத்தில் கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண்டான்.

சற்று நேரத்தில் குழந்தையைத் தேடிக் கொண்டு காயத்ரி வந்தபோது கார்த்திக் ஆழ்ந்த உறக்கத்திலிருந்தான். மூடிய இமைகளையும் மீறி வெளியே கசிந்த இரண்டு சொட்டுக் கண்ணீரும், உதட்டில் புன்முறுவலுமாக பார்வதியும் தூங்கிக் கொண்டிருந்தாள்.

# இணையும் சங்கமம்

பலராமன் மனைவி அவன் தோள் மேல் சாய்ந்து அழுதிருக்கிறாள்.

வெளியே வந்ததும் தாயார் "ஏன் அப்படி நடந்து கிட்டாளாம்... கேட்டியா?" என,

"அவ பெரியம்மா கிட்டே நீ ஏதோ சொல்லி இருக்கே... அந்த வருத்தம். சரி விடு."

"உள்ளதைத்தானே சொன்னேன். அவங்க மனுஷாகிட்டே நல்ல விதமாச் சொல்லணும்னா நல்லவிதமா நடக்கணும். அந்த பயம் அவ உடம்பிலே இருக்கா?"

இந்த மாதிரிப் பேச்சுக்களுக்கு அர்த்தமே கிடையாது. அந்த மாதிரி சமயங்களில் பலராமன் மௌனமாகி விடுவானாம்.

வசுமதி (பலராமன் மனைவி) கொஞ்சம் நித்திரைப் பிரியை. பலராமன்தான் எழுந்து குழந்தைக்குப் பால் கரைத்துக் கொடுத்துத் தூளி ஆட்டி குழந்தையைத் தூங்க வைப்பான்.

"ஏண்டா, நாளைக்கு ஆபீஸ் லீவா?" தந்தை எதற்குக் குத்துகிறார் என்று பலராமனுக்குப் புரியும். ஆனாலும் எதையும் வெளிக் காட்டிக் கொள்ளாமல் "இல்லேப்பா" என்பான்.

"கொடுத்து வைச்சவள்ங்க உங்க மாட்டுப்பெண். ஒரு நாள்... வேண்டாம்.. ஒருவேளை நீங்க தூளி ஆட்டி இருப்பீங்களா? அவ

## அனுபவ தோரணங்கள்....

தூங்கறா... நான் அசடு.. பார்த்துகிட்டிருக்கேன்" பலராமன் எதையும் சட்டை செய்வதில்லை.

ஒரு மாதம் வட இந்திய யாத்திரை பெற்றோரை அனுப்பி வைத்தான். ஆனால் வீட்டில் மனைவிக்கு அனுசரணையாய் ஒரு வேலை கூட செய்ய மாட்டானாம். குழந்தையைப் பார்த்துக் கொள்வதைத் தவிர!

'ஏன்' நான் ஆச்சரியத்தோடு கேட்டேன். அந்த நேரம் மனைவிக்கு ஆதரவாய் இருந்து அவன் அன்பை அதிகப்படுத்தி இருக்கலாமே!

நானும் அப்படித்தான் கேட்டேன். ஆனால் பலராமனின் நோக்கு முற்றிலும் வேறுபட்டதாய் இருந்தது.

"அந்த நேரம் நான் ரொம்ப



அனுகூலமாய் இருந்தால் இவளின் தனிக்குடித்தின ருசியை அதிகப்படுத்தியதாய் ஆகாதா? பெரியவர்கள் இல்லாத சங்கடங்களை இவளின் உள் மனதாவது புரிந்து கொள்ள வேண்டாமா?" என்கிறான்.

என்ன ஆழமான சிந்தனை!

நடேசன் என்று ஒரு நண்பர். நான், பலராமன், நடேசன் மூவரும் கலந்து பேசுவதுண்டு. தன் இளமைக்கால அனுபவங்களையும், பலராமனுக்கு நல்லபல யோசனைகளையும் அவர் சொல்வதுண்டு.

கூட்டுக் குடும்பத்திலுள்ளவர்தான் நடேசனும். சில நாள் அம்மா, சில நாள் சகோதரி, சில நாள் மனைவி என்று சமையல் இருக்குமாம். உப்பில்லாவிட்டாலும், காரமாயிருந்தாலும், வேகவில்லை என்றாலும் வாயே திறக்க மாட்டாராம்!

"செம காரம்! ஏன் சொல்லவே இல்லே?" மனைவி தனிமையில் கேட்க", 'காரம்' என்று நான் சொல்லப் போக அம்மா ஒண்ணு, அக்கா

ஒண்ணுன்னு பேச காரம் எனக்கு, கண்ணீர் உனக்குன்னு ஆயிடுமே" இந்த நடேசனின் குணத்தினால் மனைவியின் அன்பு அதிகமா யிற்றாம்!

"குழம்பு ஒரே புளி... உனக்குத் தெரியலே?" தங்கையின் கேள்விக்கு நடேசன், "நானே உன் சமையலைக் குத்தம் சொன்னா மத்தவங்க முன் னாலே உன்னை மட்டம் தட்டினா மாதிரி ஆகாதா? அனுபவப்பட்டா தெரிஞ்சுக்கறே! மெஷினா... ஒரே மாதிரி சமைக்கிறதுக்கு..." என்று அன்போடு சொல்ல, தங்கையின் கண் களில் கண்ணீரே வந்து விட்டதாம்!

"நடேசன் சாப்டானே! பொரியலுக்கு உப் பில்லேன்னு சொல்லவே இல்லியே!" அம்மா அங்கலாய்ப்பாள்.

"ஏம்மா, உன் வயசுலே நீ திடமா நட மாடறதே பெரிசு... அதிலேயும் சமைக்கிறே...



உப்புதானே... ஒரு நாள் இல்லாம சாப்பிட்டா உடம்புக்கும் நல்லதுதான்" கேட்டுக் கொண்டே வந்த நடேசன் விளம்ப, "நடேசனுக்கு எப் பவுமே என் மேலே கொள்ளைப் பிரியம்... கண் ணிலே தண்ணி வந்துட்டா தாங்க மாட்டான்" அம்மாவின் மானசிகத் திருப்தி.

உலகத்துக்கு நாம் என்ன கொடுக் கிறோமோ... அதுதான் திரும்பக் கிடைக்கும். சுவற்றிலெறியும் பந்தைப் போல்... உப்பில் லாமல் சாப்பிட்ட நடேசனுக்கு நெஞ்சு நிறைய நிம்மதி கிடைத்தது.

புடைவைக் கடைக்குக் கூட்டிப் போவார். ஒரே மாதிரி விலையில் எல்லோருக்கும் எடுத் துக் கொடுப்பார். ஒரே மாதிரி நிறம் கோடுகள், பூக்கள் நிறைந்த புடைவைகள் எடுக்க சம் மதிக்க மாட்டார். ஏன்?

"உன் புடைவைதான் இது... என் புடைவை நான் அதிகம் உடுத்தவேயில்லை" என்ற குழப்ப மும், "உம் பொண்டாட்டிக்கு புடைவையை அழகா வைச்சுக்கவே தெரியலே... இரண்டு பேருக்கும் ஒண்ணாதானே எடுத்தோம்! உன் தங்கை புடைவையைப் பாரு... எப்படி இருக்கு... இவ புடைவை சாயம் போயி, கிழிஞ்சு... துளி கூட கரிசனம் கிடையாது" அம்மா குத்த.

"உங்க தங்கை ஆபீஸுக்கா போறா... ஆடிக் கொரு தரம், ஐப்பசிக்கொருதரம் கட்டிக்கறா... நனைக்கவே இல்லே, 'பளிச்'னு இருக்கு. ஒன்னரை வருடம் ஆபீஸுக்குக் கட்டிண்டு துவைக்கிற புடைவை எப்படி இருக்குமாம்? இனிமே என் சம்பளத்துலே நான் எடுத்துக் கறேன்..." இது மனைவியின் விசும்பல்.

அன்றைக்கு விட்டார் ஒரே நிறம், ஒரே பூ என்று புடைவை எடுப்பதை.

**கா**லையில் எழுந்ததும் பேப்பர் படிக் காத ஆண்களை விரல் விட்டு எண்ணி விடலாம். நடேசன் அதையும் தியாகம் செய்தவர். அவருக்கு மட்டும் பேப்பர் படிக்க ஆர்வமில்லையா என்ன? அதை விட அவர் குழந்தைகளின் எதிர் காலத் தில் அதிக ஆர்வம்.

குழந்தைகளோடு வியர்க்க, விறு விறுக்க டென்னிஸ் விளையாடுவார். அதிகாலை பெற்றோருக்குக் கொஞ்ச நேரம் கீதை, பாகவதம் வாசித்துக் காண் பிப்பார். வீட்டுப் பாடங்களை ஒழுங் காக செய்தார்களா, பாடங்களில் உள்ள சந்தேகங்கள், அவர்களது நண்பர்கள், பொழுது போக்குகள் என்று கொஞ்ச நேரம் அரட்டை, பிறகு குளியல், சாப் பாடு, ஆபீஸ். மாலை வந்தவுடன் காப்பி, டிபன் முடித்து... சில நாள் விருந்தினர், நண்பர் வருகை இருக்கும். இல்லை யானால் கலியாணம், கச்சேரி (தகப் பனாருக்கு கர்நாடக இசையில் ஈர்ப்பு அதிகம்) என்று போக வேண்டி இருக்கும். பெரிய சபா ஒன்றில் அங்கத்தினர். (நாடகம் என்றால் அம்மா) நடனம் என்றால் மனைவி, சினிமா நிகழ்ச்சி என்றால் தங்கை.

மனிதர் பட்டியலிட்டே வைத்திருக்கிறார். யாருக்கும் வஞ்சகம் வைப்பதில்லை. வியாதி களும் அப்படித்தான்! அம்மாவுக்கு ஆஸ்துமா... அப்பாவுக்கு நீரிழிவு, ரத்தக் கொதிப்பு. தங்கைக்கு தலைவலி, பல் வலி, வயிற்று வலி ஏதாவதொன்று. மனைவிக்குத் தொண்டைப் புண், அலர்ஜி, மூட்டுவலி, மாற்றி மாற்றி டாக்டர் வீடு செல்லவும் சளைக்கமாட்டார்.

விடுமுறை தினங்களானால் வீடே ரகளைப் படும். டி.வி.யில் கிரிக்கெட் காமெண்ட்ரி பிள்ளைகளோடு... கரண்ட் கட் என்றால் கேரம், சீட்டு, செஸ் ஏதாவதொன்று.

புதிய தலைமுறையினர் நடித்த படங்களை குழந்தைகளோடு சர்ச்சை பண்ணுவார்.

"என்னங்க, உங்க வயசென்ன, அவங்க வயசென்ன... அப்பாஸையும், அஜித்தையும், மீனா, ரோஜாவையும் போட்டு அலசிண்டிருக்கிங்களே!" மனைவி ஊடே புக,

"மனசுக்கு வயசேது? தர்க்கம் பண்ண, அறிவுப்பசி தீர்க்க அவங்க வெளியிலே ஆள் தேடி அலையக்கூடாது பாரு... ஆழமான நட்பு பிரச்சனையாயிடக் கூடாதில்லையா... அதான்... சொர்க்கம் வீட்டிலேயே இருந்தா எவன் வெளியிலே அலைவான்... தூங்கற நேரம் தவிர மூளைக்கு ஓய்வு கொடுக்கக் கூடாது..."

இரவுதான் எல்லோரும் படித்து முடித்த பேப்பரை நடேசன் படித்துக் கொண்டிருப்பார்.

"நல்லாருக்கு... தூங்கற நேரத்துலே பேப்பர் படிக்கிற லட்சணம்.... பகலெல்லாம் லூட்டி அடிக்க வேண்டியது. ராத்திரிக்கு டேபிள் லைட்டைப் போட்டுகிட்டு, உத்து உத்துப் பார்த்துண்டு... போதுமே! என் தூக்கம் கெடாது... பெரியலைட்டைப் போட்டுகிட்டுப் படிங்க" அன்பான மனைவியின் கண்டிப்பு இது.



மார்க்கெட் போவார். மனைவி, தாயார் எவ்வளவு குற்றம் சொன்னாலும் பொறுமையோடு எப்படி வாங்க வேண்டும் என்று கேட்டுத் திருத்திக் கொள்வார்.

காய்கறிகளின், மளிகை சாமான்களின் நேர்த்தியை அப்பழுக்கின்றி கற்றுக் கொண்டார்.

'தீட்டத் தீட்டத்தானே கத்தி கூராகும். புத்தியும் அப்படித்தான்' என்பது அவர் வாதம்.

வேலையில் புதிதாகச் சேரும் போது வேலையில் நிலைத்திருக்க மேலதிகாரி, அனுபவஸ்தர்கள் என்ன சொன்னாலும் கேட்டுக் கொள்வதில்லையா?

சமையலில், சாமான் வாங்குவதில் வீட்டுப் பெண்கள் கை தேர்ந்தவர்கள். கேட்டுக் கொள்வதில் என்ன தப்பு?

'குற்றம் சொன்னால் வாங்க மாட்டேன்' என்று சொல்வது பயமுறுத்துவதாகாதா?

'என்னை அதிகாரம் செய்தால் வேலையை விட்டு நின்று விடுவேன்' என்று மேலதிகாரியை பயமுறுத்துகிறோமா? செல்லும் இடத்தில் கோபத்தைக் காட்டுவது அறியாமை என்று குறள் சொல்லவில்லையா?

இப்படி தனக்குள் வினா எழுப்பி, பொறுமை காத்து இன்று "நடேசன் வாங்கிட்டு வந்தா காய்கறி ஒண்ணொண்ணும் பேசும். பச்பச்சுனு பீன்ஸ், எப்படீடா உடைக்காம வெண்டைக்காயை இத்தனை எளசா பொறுக்கறே?" அம்மா தினமும் சிலாகிப்பாள்.

மனைவியோ "நீங்க ஊர்லே இல்லே... ஒரு வாரமும் பெரிய அவஸ்தை... உளுத்தம் பருப்பு தீர்ந்து போச்சு. பாய்கடைலே தான் வாங்கினேன். விழுதே காணலே... இட்லி கல்லு கல்லா, உங்கம்மாகிட்ட பேச்சு... பசங்க ஒரு பக்கம் அப்பா இல்லாம போரடிக்குதுங்கறாங்க. அப்பா காலேலேர்ந்து குட்டி போட்ட பூனையாட்டமா ஆட்டோ சத்தம் கேக்கறப்பல்லாம் வாசலுக்கு நூறு தடவை நடந்துட்டார். எல்லாரையும் என்னதான் சொக்குப் பொடி போட்டு வைச்சிருக்கிங்களோ?" படபடவென்று பொரிகிறாள்.

மனசுக்குள் 'சபாஷ்' போட்டுக் கொண்டாலும் நடேசன் வெளியே எதையும் காட்டிக் கொள்ளாமல், "நீ மீதி இருக்கிற உளுத்தம் பருப்பை எடுத்து வை. ஆபீஸ் போகும்போது பாய் கடையிலே மாத்திடறேன்" என்பார்.

உழுத நிலத்தில் விதைகள் முளைப்பது சுலபம். பொறுமையுடன், விடாமுயற்சியாய் நற்குணம் என்ற ஏர்கொண்டு பண்பு, அன்பு என்ற மாடுகளைப் பூட்டி மனங்களை உழ வேண்டும்.

இருபதிலிருந்து இறக்கும் வரை குடும்ப வாழ்க்கை நிம்மதியை மகிழ்ச்சியைத் தர வேண்டும் என்றுதான் எல்லோரும் ஆசைப்படுகிறோம். பணக்காரனாக வேண்டும் என்று ஆசைப்பட்டால் மட்டும் போதுமா? அதற்கான முயற்சிகளில் இறங்க வேண்டாமா?

தனியாய்ப் போனால் நிறையப் பணம் சேர்க்கலாம் என்று கணக்குப் போட்டு பிரிந்து வந்தவர்கள் படும்பாடு சொல்லத் தரமல்ல. மறுபடி போய் ஒட்டிக் கொள்ளவும் முடிவதில்லை.

வீட்டு வேலை உதவி செய்பவருக்கு சம்பளம், காப்பி, டிபன், சாப்பாடு.

"எங்க அஞ்சலைக்கு சூடா காப்பி கொடுக்கலேன்னா பிடிக்காது. மறுநாள் வேலை நிறுத்தம். அத்தனை துணியையும் துவைச்சு, பாத்திரம் தேய்த்து, வீடு மெழுகி... காலெல்லாம் சேற்றுப் புண்'' இப்படி விமர்சனங்களை கோவிலில் குடும்பத் தலைவிகள் கூடும் போது கூட கேட்கலாம்.

"என்னம்மா மதுரம்... சாப்பாட்டு நேரமாச்சு... அஞ்சலை டீ.வி. பார்த்துகிட்டிருக்காளே... அனுப்பு."

"ஐயோ, மாமா, ஏதாவது சொல்லிடாதீங்க..." மதுரம் ஓடி வருகிறாள். "என்ன மாமா... எப்பவும் டீ.வி.யா... கொஞ்சம் ரெஸ்ட் கொடுங்க. ஹீட் ஆயிடும்'' என்றவள், "அஞ்சலை அணைச்சுடட்டுமா?'' அவளைப் பார்த்து அசட்டுச் சிரிப்போடு கேட்கிறாள்.

"நீ அணைச்சுடும்மா... ஐயா போட்டுருக்காங்களேன்னு நானும் உக்காந்தேன். வரேன்; பாத்திரம் கிடக்கு..." எழுந்து போகிறாள் அஞ்சலை.

இவளிடம் காட்டும் நளினத்தை உங்கள் கணவரைப் பெற்றவளிடம் காட்டியிருக்கக் கூடாதா?

உதிர்ந்த இலைச் சருகுகள்தான் நல்ல உரமாகிறது.

"ஏம்மா, பாட்டியை விட்டுட்டு வரணும்னு அப்பாவுக்குத் தூபம் போட்டு வேலையை மாத்தி கூட்டிட்டுப் போனயே! நீ எனக்கு உபதேசம் பண்றியா?" என்று தாயைத் தாக்கும் தலைமுறைகளும் வளர்ந்து விட்டன! போதுமே இந்த கண்ணாமூச்சி விளையாட்டு! நீங்கள் உங்கள் மாமியாரிடமிருந்து டில்லி, பம்பாய் என்று பிரிந்து போனால் உங்கள் பிள்ளை வரப் போகும் மனைவிக்காக லண்டன், அமெரிக்கா என்று பறக்கிறான்!

நிகிலின் தாத்தா, பாட்டியின் வருகையை ஒருநாள் கண்டேன். குசலம் விசாரித்தேன்.

'பிள்ளை வருவதேயில்லை. பேரனைப் பார்க்க ஆசை' என்பது பேச்சில் தெரிந்தது.

ஒரு மாதம் சுமுகமாக சென்றது.

ஸ்வாமிகள் வந்திருக்கிறார் என்று பெரிய தம்பதிகள் சென்றிருந்தனர்.

நிகிலின் தாயார் குரல் உரத்து ஒலித்தது.

"அவங்கல்லாம் பிச்சிகிட்டு போயிட்டாங்க. நாமதான் மாட்டிக்கிட்டோம். அன்னைக்குப் பெண்ணுக்குப் பரிஞ்சுக்கிட்டு வந்தாங்களே உங்கம்மா... எந்த மூஞ்சியை வெச்சிண்டு வந்திருக்கா... வெக்கமில்லே? இவங்க சங்காத்தமே வேண்டாம்னுதானே ஒதுங்கி இருக்கோம். க்ரீச்சை நிறுத்துங்கறாங்க. மண்குதிரை உங்கம்மா... ஆத்திலே இறங்க முடியுமா? சும்மா இருக்கியா, சொரூபத்தைக் காட்டட்டுமாம்பாங்க. சமைக்கறேன்னு... ஏகப்பட்ட எண்ணெய்... இந்த மாசம் மளிகைச் செலவைப் பாருங்க. இன்னும் நாக்கைக் கட்டலை... நேத்திக்கு பக்கவடா... முந்தா நாள் போண்டா இப்படியே சும்முனு இருந்தீங்க... நான் நிகிலைக் கூட்டிக்கிட்டு எங்க வீட்டுக்குப் போயிடுவேன். சம்பளமில்லாத நீண்ட விடுப்பு."

"சத்தம் போடாதே. ஜன்னல் தெறந்திருக்கு" நிகிலின் தந்தைக்கு வேறொன்றும் சொல்லத் தெரியவில்லை.

அடுத்த நாள் அந்த வயோதிகத் தம்பதிகள் புறப்பட்டு விட்டனர். என்னிடம் சொல்லிக் கொண்ட அந்த அம்மாள், ''வெளியே சொன்னா வெட்கக்கேடு... மாசம் 500 தரேன், நீ கிராமத்துக்குப் போய் சௌகரியமா இருங்கறான். இவன் பிள்ளை இவனை எந்த கிராமத்துக்குத் துரத்தப் போறானோ? தொப்புள் கொடியைப் பெரிசா நினைச்சு வந்தேன். அவன் உயிர் அவ தாலிக் கொடியிலே தொங்கறது." கேட்டுக் கொண்டே வந்துவிட்டாள் நிகிலின் தாய்! பாவம் மாமி!

''உங்களை மாதிரி 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்'னு நாங்க வாழலே... ஊர் புகழ விருந்து வைக்கலே... குடி இருக்க ஒரு ப்ளாட். ரிடையரானா கிடைச்ச பணத்தை வட்டிக்கு விடுவோம். பிள்ளை கையை எதிர் பார்த்து முட்டங் கையை சொரிஞ்சுண்டு நிக்க மாட்டோம்'' படபடவென்று பொரிந்து விட்டாள்.

**நி**க்கிர மாமியார்களுக்கு --

உங்க காலத்தை நினைக்காதீர்கள்! நேத்தைக்கு அல்வா சாப்பிட்டோமே என்று இன்று அல்வாவைப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொள்கிறீர்களா? நேற்றைக்கு இறந்த காலம். உங்கள் மாமியார் நாத்தனார்களிடம் நீங்கள் அவஸ்தைப் பட்டிருக்கலாம்! இன்று நிகழ் காலம். உங்கள் மருமகள் சம்பாதிக்கிறாள். பொருளாதார நிறைவு ப்ளஸ். அலுத்து வீட்டிற்கு வருகிறாள். வந்தவுடன் குற்றம் பார்க்கும் மனத்தை 'சும்மா இரு' என்று அடக்குங்கள்.

மனத்தை நீங்கள் ஆள்வதா? மனம் உங்களை ஆள்வதா? அன்போடு "ஆபீஸில் என்ன விசேஷம்?'' என்று நயமாக ஆரம்பிக்கலாம்! (தாஜா பண்ணுகிற மாதிரி அமைந்தால் அலட்சியப்படுத்தப்படுவீர்கள்! இது கம்பி மேல் நடப்பது போல).

குழந்தைகள் இருந்தால் "உன் பிள்ளை கீழே விழுந்து இரத்த காயம் பார்... உன் பெண் 'ரிங்'கைத் தொலைத்து விட்டாள்" என்பதற்குப் பதிலாக,

"நம்ப வருண் ரொம்ப சமர்த்து, ஒருத்தர் வழிக்குப் போக மாட்டான். எவனோ வந்து மோதி, பாவம் குழந்தை! அப்பா திட்டுவாளேன்னு பயந்து கிடக்கிறது! நீதான் பக்குவமா



## தஞ்சை பெரிய கோயில்.

## இங்குதான், **உங்கள்** வருங்கால **ரகசியம்** ஒளிந்திருக்கிறது.

**ம**லைகளற்ற தஞ்சை மண்ணில் மலைபோல் உயர்ந்து நிற்கும் 11ம் நூற்றாண்டு பிரகதீஸ்வரர் ஆலயம். இதன் விமானம் விண்ணை முட்டி நிற்கும். அதன் நிழலோ தரையைத் தொட மறுக்கும் - உலகில் எவருக்கும் அடிபணியாத ராஜ ராஜ சோழனைப்போல். இதைப் போல், இந்தியப் பாரம்பரியத்தின் சான்றாய் விளங்கும் சின்னங்கள் எத்தனையோ! இந்த வரலாற்றுச் சின்னங்கள் தான் உங்கள் வெற்றிச் சின்னங்கள்.

சித்திரைத் திருவிழா

ஏப்ரல் 5-14, 1997

* அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரருக்கு மட்டுமே.



**மனைவிக்கு கணவனைப் பிடிக்காமல் இருந்தால் சண்டை வருகிறது. பிடித்திருந்தால் சந்தேகம் வருகிறது!**

**— யாரோ**

**தகவல் : பி. ராஜசேகரன்**

அவனுக்கு எடுத்துச் சொல்லணும்! அவன் ஒரு முகடு...."

"தேவியோட 'ரிங்' எங்கியோ விழுந்திருக்கு... குழந்தை மறுபடியும் போய் தேடி பார்க்க றேன்னா... நான்தான் வேண்டான்னுட்டேன்.... தொலைஞ்சதைத் தேடப்போன உன் சிநேகிதி ரமா பொண்ணு... அதை நினைச்சாலே வயத்தக் கலக்கறது" இப்படி நேரம் பார்த்துச் சொன்னீர்களானால் பாட்டி மடி பேரன், பேத்திகளுக்கு சொர்க்கம்.

சின்னக்குழந்தை படுத்துகிற ரகம் என்றால்... "நம்ப ஆகாஷ்"க்கு அம்மா இருந்தா ஒண்ணுமே வேணாம்... பாரேன் துஷ்டத்தனத்தை! நீ வந்துட்டியாம். எங்கிட்ட இருக்க மாட்டானாமே... போக்கிரி படவா.. பாட்டி பகலெல்லம்தான்! இல்லியா" மாட்டுப் பெண்ணிடம் அன்போடு தள்ளி விடுங்கள்.

அதை விட்டு "மகாதுஷ்டை....." என்று விஷம அட்டவணை படித்தால் அது உங்கள் மீது வெறுப்பைத்தான் வளர்க்கும்.

குழந்தையை மகனோ, மருமகளோ அடித்தால், "போடு ரெண்டு..." அப்பத்தான் புத்தி வரும்... 'அடியாத மாடு படியாது', 'ஆனை அடித்து வள' என்றெல்லாம் பழமொழி பேசி போட்டுக் கொடுக்காதீர்கள்!

"நீயும் சின்னக்குழந்தையிலே இப்படித்தான் இருந்தே..." என்று பஞ்சாங்கம் பாடி மருமகளின் குழந்தைகளின் முன் மகனின் மதிப்புக் குன்றிய காரணமாயிருக்காதீர்கள்!

பின் எப்படித் தடுப்பது?

தனியாக மகனிடம், "நரசிம்மன் பிள்ளையை அடித்து காது செவிடாகி விட்டது". "படி, படி" என்று பிராணனை வாங்கினாள் மல்லிகா. அவ பொண்ணு "மெண்டல் சரியில்லாம..." சைக்கிரிட்ரிஸ்டிடம் அலைஞ்சிக்கிட்டிருக்கா... சுபா பிள்ளை வீட்டை விட்டு ஓடிட்டான்" என்று எச்சரித்துக் கொண்டிருங்கள்.

பேரக் குழந்தைகளிடமும் கல்வியினால் ஏற்படும் வாழ்க்கை சௌகரியங்களை கதைகளால் விளக்கி, (எத்தனை தேசத் தலைவர்கள் சரித்திரம் இருக்கிறது!) (போரடிக்காதீர்கள்; மருந்து அறிவுரை; கதை - தேன்) மனதைப் பதப்படுத்தும் பொறுப்பு உங்களுக்கில்லையா?

உபன்யாசம் கேட்பதையும் விட இதற்கு அதிகப் புண்ணியம் உண்டு.

போதை மருந்தைத் தேடிப் போகும் பேரன்களும், பாய் ப்ரண்டை நாடி ஓடும் பேத்திகளும் பெருகிப் போனதற்கு பாட்டி, தாத்தாக்களும் கூடக் காரணம்தான்!

தினம் ஒரு சரித்திரம் படியுங்கள். மனதை இளமையோடு வைத்திருங்கள்.

எத்தனை கற்புக்கரசிகளின் சரித்திரங்கள். சிவாஜியை உருவாக்கிய ஜீஜாபாய் வேலைக்குப் போகவில்லை. உங்கள் பேரன் பேத்திகளைப் பெற்றவள் பொருளாதார மேம்பாட்டிற்காக உத்யோகம் பார்க்கிறாள். மழை பெய்து உழுத நிலம் போன்றது பிஞ்சு மனங்கள். அங்கே அன்பை, அறிவை, பக்தியை, பண்பை, நற்குணங்களை விதைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு.

'ராகிங்குகளை' சமாளிக்கும் தைரியத்தை வளருங்கள். விடாமுயற்சி, தன்னம்பிக்கையுள்ள சந்ததிகள் உங்கள் குலத்துக்குப் பெருமை.

சிறுமையும், பெருமையும் உங்கள் கையில்! அவர்களைத் தோழமையோடு பாருங்கள். அனாவசிய மரியாதை, வீண் கௌரவ மதில்களை உடைத்தெறியுங்கள்!

முக்கால் வாசி வீடுகளில் சச்சரவுகளுக்குக் காரணமே திருமணமாகிச் சென்ற பெண்களும், மாமியாரின் நஙாத்திகளும், அண்டை அயலாரும்தான்!

"கொடுத்து வைச்சவ... உட்கார்த்தி வைத்துச் செய்யிறியே!"

"என் மாமியாரும் இருக்காளே... குழந்தையை 'க்ரீச்'சிலே விடுங்கறா... துளி பாசமில்லே..."

"மாட்டுப் பொண் எதை சாதிச்சுட்டு வந்துருக்கான்னுட்டு பரக்கப் பரக்க காப்பியோட நிக்கறே?"

இவைகளை நச்சுப் புகை என்று நம்பப் பழகுங்கள். விட்டால் குடும்ப மகிழ்ச்சியைக் கொன்று விடும்! ஊசியளவு சலனப்பட்டீர்களானால் 'நச்'சென்று அட்டையாய் மனசில் ஒட்டிக் கொண்டு நல்ல எண்ணங்களை உறிஞ்சி விடும்.

ஒரு காது வழியாக உள்ளே நுழையும் இந்த மாதிரி போதனைகளை மூளை வரை போக விடாமல் மறு காது வழியாக வெளியேற்றுங்கள்! வாசலிலேயே பேசி அனுப்பும் விருந்தாளி போன்றவை இவை!

**— பொன்னம்மாள்**

# பால்வினை நோய்களும் எய்ட்ஸும்

நமது உடம்பைத் தாக்கும் நோய்கள் எத்தனையோ இருக்கின்றன. நாமாக வரவழைத்துக் கொள்ளும் நோய்களில் பால்வினை நோய்களும் எய்ட்ஸும் பிரபலமானவை.

தெரிந்தோ தெரியாமலோ செய்த தவறுக்கு தனது குடும்பம், சந்ததி வழியாக குழந்தைகளை தாக்கிவிடுமோ? என்ற பயம் பலருக்கு இருக்கிறது. பல்வேறு உடல்நல, மனநல பிரச்னைகளை உருவாக்கும் பால்வினை நோய்களை பற்றிய அறிவு அனைவருக்கும், ஆண், பெண் இருபாலாருக்கும் இருக்க வேண்டும். தொற்று



வியாதிகள் காற்றில், உணவில் பரவலாம். உதாரணமாக டி.பி. காற்றில் பரவி நுரையீரலைத் தாக்கலாம்; டைபாய்டு, காமாலை போன்ற நோய்கள் உணவில் பரவலாம்; ஆனால் பால்வினை நோய்கள் தகாத உறவில் பரவும் வியாதி. "எய்ட்ஸ்" தகாத உறவு மட்டுமின்றி ஊசி மூலமோ, இரத்தம் கொடுப்பதாலோ உண்டாகலாம். பால்வினை நோய்களில் மூன்று வகைகள் உள்ளன. கொனோரியா, சிபிலிஸ், மற்றும் லிம்போ கிரானுலோமா வெனீரியம் போன்றவை அதிகமான பாதிப்பை உண்டாக்கும்.

கொனோரியா எனப்படும் (மேகவெட்டை) இந்தத் தொற்று வியாதி ஒரு பாக்டீரியாவால் ஏற்படுகிறது. தொடர்பு கொண்ட ஒரு சில நாட்களில், தொடர்பு கொண்ட ஆண் பெண் இருபாலரில் யாராவது பாதிக்கப் பட்டிருந்தால் எளிதாக தொற்றிக் கொள்ளும். ஆண்களுக்கு முதலில் கடுமையான எரிச்சல் சிறுநீர் கழிக்கும் போது தோன்றும். நான்கைந்து நாட்களில் நீர் துர்நாற்றத்துடன் கரந்து உள்ளாடைகளை நனைத்து இருக்கும். காலையில் எழுந்து சிறுநீர் கழிக்கும் போது கட்டி போல சீழ் விழுந்து சிறுநீருடன் வெளியேறும். முதலில் சிறுநீர்ப் பாதையை பாதித்த நோய் நுண்கிருமி படிப்படியாக முன்னேறி உள் உறுப்புகளாக விதைப் பைகள், அதன் குழாய்களை பாதித்து விடும். நோய் முற்றிய நிலையில் மூட்டுவலி, காய்ச்சல் என ஏற்படுத்தும்.

பெண்களுக்கு சிறுநீர் கழிக்கும் போது எரிச்சல், வெள்ளைப்பாடு மிகவும் துர்நாற்றத்துடன் இருக்கும். நோய்க் கிருமிகள் மிக வேகமாகப் பரவி, கருப்பை, சினை குழாய் போன்ற இடங்களில் புண்ணை உண்டாக்கும். கருமுட்டைப் பையைத் தாக்குவதும் உண்டு.

சிகிச்சையால் மிக எளிமையாக குணப்படுத்தப்படும் வகை கொனோரியா. பயப்பட வேண்டியதில்லை. நோய் முற்றிய நிலையில் ஆண்களுக்கு விந்துக்குழாய் அடைப்பு, விந்தணுக்கள் உருவாவதில் தடை ஏற்படலாம். பெண்களுக்கும் சினைக்குழாய் அடைப்பால் குழந்தைப் பேறு தடை பெறுகிறது. இந்த நோய்க் கிருமியை இரத்தப் பரிசோதனையில் அறிய முடியாது. சீழ் திரவத்தை கொண்டு நுண்ணோக்கியால் நோய்க் கிருமியை எளிமையாகக் கண்டு பிடிக்கலாம்.

அடுத்து பால்வினை நோய்களில் மிகவும் கொடூரமான நோய் சிபிலிஸ்தான். இந்த நோய் பீடிக்கப்பட்ட அனைவரும்

பயப்படுவது தமது எதிர்கால சந்ததியை இது தாக்குமா என்பதுதான். அது நியாயம்தான். ஜீன்களின் வழியாக பல தொந்தரவுகள் சந்ததிக்குத் தரும் நோய் இது. ஆனால் முற்றிய நிலையில்தான் இந்தத் தொந்தரவுகளை கொடுக்கிறது. இந்த நோய்க்கு மூன்று நிலைகள் உள்ளன.

முதல் நிலையில் ஆண், பெண் பிறப்புறுப்புகளில் சிறிது புண் தோன்றும். வலி இருக்காது என்பதால் அலட்சியமாகக் கவனிக்காமல் விட்டு விடுவார்கள். பிறகு ஒரு சில நாட்களில் புண் மறைந்து விடும். இரண்டாம் நிலையில் நோய்க் கிருமிகள் இரத்தத்தில் கலந்து பல தொந்தரவுகளை கொடுக்க ஆரம்பித்து விடும். முதலில் பிறப்புறுப்புகளில் மீண்டும் புண் வலியுடன் தோன்ற ஆரம்பிக்கும். பெரும்பாலும் இந்த நிலையில்தான் சிகிச்சை பெறவே செல்வார்கள்; இந்த நிலையில் உடலில் இரு மருங்கிலும் சருமத்தில் சிறுசிறு தழும்புகள், சிவப்பு நிறத்தில் தோன்ற ஆரம்பிக்கும். முதுகில் கைகளின் மேல்புறம் தொடைகளில் தோன்ற ஆரம்பிக்கும். முடி கொட்டி "புழு வெட்டு போல" தோன்ற ஆரம்பிக்கும். சில சமயங்களில் முகப்பருக்கள் முதுகு, கழுத்து, கையின் மேல் புறம் தோன்றுவதால், "பால்வினை நோயோ" என சிலரை பயப்பட வைத்துவிடும்.

பொதுவாக முதல் நிலையில் தொடர்பு கொண்ட அடுத்தநாளே கண்டு பிடித்து

**பெட்ஷீட், படுக்கை விரிப்புகள், திரைச்சீலைகள், தலையணை உறைகள் இவைகளை துவைக்க ஊற வைக்கும் போது சோப் நீரில் 1 ஸ்பூன் அளவு ஷாம்பூவை கலந்து ஊற வைத்து பிறகு துவைத்து காய வைத்துப் பாருங்கள். வாசனையாக இருக்கும். கைக்குட்டை களை அலசும் போதும் துளி ஷாம்பூ நீரில் நனைத்துப் பின் அலசினால் மணக்கும்.**

— ஹேமலதா



விடலாம் என்று "இரத்தப் பரிசோதனை" செய்து முன் ஜாக்கிரதையாக மருந்து சாப்பிடலாம் என பலர் ஏமாந்து விடுவார்கள். நோய் நுண்கிருமி இரத்தத்தில் கலந்து நச்சுப் பொருள்களை வெளியேற்ற ஓரிரு வாரங்கள் ஆகும். அதன் பிறகு பார்த்தால் "VDRL" Test Positive ஆக இருக்கும்.

மூன்றாம் நிலையில் பல்வேறு கோளாறுகளை கொடுக்க ஆரம்பிக்கிறது. உடலில் உள்ள உள்உறுப்புகள் கல்லீரல், இருதயம், மூளை, விதைப் பைகள் என எல்லா உறுப்புக்களையும் பாதிக்க ஆரம்பிக்கிறது. பெரும்பாலும் இந்த நிலைக்குப் பலரும் செல்வதில்லை. ஓரளவு பயம் இந்த நிலைகளுக்குச் செல்லாமல் பாதுகாக்கிறது.

சிபிலிஸ் நோயால் பாதிக்கப்பட்ட நோயாளி மிகவும் கவனமாக சிகிச்சை பெறாவிட்டால் விந்துக்கள் உருவாவதில் கோளாறுகள் ஏற்பட்டு குழந்தைப் பேறு பாதிக்கப்படும். பெண்களுக்கும் உள் உறுப்புகள் பாதிக்கப்பட்டு, "முட்டை உருவாவதில்" கோளாறுகள் நேரிடும்.

பிரசவக் கோளாறுகள், குறைபாடுள்ள குழந்தைகள் பிறக்க சிபிலிஸ் ஒரு முக்கிய காரணம். சிலருக்கு பிறப்பு உறுப்புகளில் காலிபிளவர் போல மருக்கள் தோன்றுவதும் இந்த நிலையில்தான்.

எல்.ஜி.வி. (Lympho Granuloma Veneruim) எனும் நோய் நுண் கிருமியால் ஏற்படும் பால்வினை நோய்தான். இதன் விசேஷ குணம் நெறி கட்டுவது. பொதுவாக சிபிலிஸ், கொனோரியா நோய்களுக்குத் தொடை இடுக்குகளில் நெறிகட்டும். சிறிய அளவில் இருக்கும். ஆனால் இந்த நோயில் "வாழைப் பழத்தை போல" ஏராளமான நீளநீளக் கட்டிகள் ஒன்று சேர்ந்து சீழ்க் கட்டிகளை உண்டாக்கிவிடும். சீழ் பச்சை நிறத்தில் கெட்டியாக இருக்கும். எளிதில் தொற்றக் கூடியது. புண்ணும் விரைவில் ஆறாது.

## எய்ட்ஸ் (AIDS)

எய்ட்ஸ் பற்றிய விளக்கம் அனைவருக்கும் தெரிந்திருக்கும். ஆட்கொல்லி நோயான எய்ட்ஸ் நோய் எதிர்ப்புத் திறனை படிப்படியாகக் குறைத்து உயிரை பலி வாங்கி விடுகிறது. நோய் எதிர்ப்புத் திறனை குறைப்பதால்தான் AIDS (Aquired Immuno Deficiency Syndrome) என்று பெயர் பெற்றது. இந்த நோய்க்குச்

எலக்ட்ரிக் ரைஸ் குக்கரை சாதம், புலாவ் மட்டுமல்லாமல் பொங்கல், அரிசி உப்புமா, பிஸிபேளாபாத் செய்யவும் பயன்படுத்தலாம் என்பது பலருக்குத் தெரிந்திருக்கும். அதன் வேறு சில பயன்களும் உண்டு. பாதி சமயலில் காஸ் தீர்ந்து விட்டதா? குழம்பு, ரசம், கறி உள்பட முழு சமையலும் ரைஸ் குக்கரில் செய்து விடலாம். (தாளிப்பது தான் கஷ்டம்) ஜனவரி மாதக்குளிரில் எங்கள் கெய்சர் ரிப்பேராகி விட்டது. எல்லோரும் குளிப்ப தற்கு வெந்நீர் எலக்ட்ரிக் குக்கரில்தான் போட்டேன். ஐந்தே நிமிடங்களில் ஆவி பறக்கும் வெந்நீர் ரெடி!

— பானு மூர்த்தி



காரணமாக இருக்கும் HIV வைரஸ் பால்வினை நோயாளிகளுக்கு மிக அன்யோன்யமாக தொற்றி விடுகிறது.

பொதுவாக பிறப்பு உறுப்புகளில் உள்ள சீதோஷ்ண நிலை பால்வினை நோய் கிருமிகளுக்கும் 'எய்ட்ஸ்' வைரஸ்களுக்கும் எளிதாக இடம் கொடுக்கிறது. விலங்குகள் பால்வினை நோய்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டதற்குக் காரணம் வெப்ப நிலையில் கிருமிகள் கொல்லப்படுகின்றன. எய்ட்ஸ் நோய் ஊசி மூலம், இரத்த தானம் மூலம் பரவும் வாய்ப்புகள் உண்டு.

சிகிச்சை

பாலுணர்வு அனைவருக்கும் இருக்க வேண்டும். ஆனால் அதைத் தக்க முறையில் பயன்படுத்தி, 'ஒருவனுக்கு ஒருத்தி' என கடை பிடிக்க வேண்டும்.

பொதுவாக நாம் பிறப்பு உறுப்புகளை மிகவும் சுத்தமாக வைத்துக் கொள்வது மிகவும் நல்லது. உள்ளாடைகளை நன்கு சுத்தம் செய்து வெயிலில் உலர்த்திப் போடுவதால் காளான் படை, வெள்ளைப் பாடு போன்ற நோய்கள் வராமல் தடுக்கும்.

பருவ வயதினருக்கு பாலியல் பற்றிய தவறான கருத்துகளால் இடறி வாழ்க்கையை வீணாக்காதபடி பக்குவமாக எடுத்துக் கூறுதல் நலம்.

ஏதோ, தவறு செய்து நோயை வாங்கிக் கொண்டோம் என்று அச்சப்பட்டால் காலதாமதம் செய்யாமல் மருத்துவ ஆலோசனை பெறவும்.

பால்வினை நோய்களை முழுமையாகக் குணப்படுத்துவதில் ஹோமியோபதி மருந்துகள் வலிமை பெற்றவை. கொனோரியா, எல்.ஜி.வி. நோய்களிலிருந்து விடுதலை பெறலாம். பொதுவாக சிபிலிஸ் நோயாளிகளின் இரத்தப் பரிசோதனைக்குப் பின்னால் இருக்கும் VDRL பாஸிடிவ் படிப்படியாக நெகடிவ் நிலைக்குக் கொண்டு வரலாம். இதனால் தேவையற்ற பயத்தைப் போக்கலாம். பிறப்பு உறுப்புகளில் தோன்றும் மருக்களை (Condyloma) அறுவை சிகிச்சை இல்லாமல் எளிமையாக உதிரச் செய்யலாம்.

எய்ட்ஸ் நோய்க்கு மருந்தில்லை என்பதை ஒத்துக் கொள்ள முடியாது. நோயின் தன்மையே நோய் எதிர்ப்புத் திறன் குறைவுதான்.

ஹோமியோபதி மருத்துவத்தின் அடிப்படை தத்துவமே நோய் எதிர்ப்புத் திறன், உடலியக்கம் எனலாம். சிபிலிஸ் போல படிப்படியாகக் குணப்படுத்த முடியும், உடலில் நோய் எதிர்ப்புத் தன்மை ஏற்படுத்த முடியும். இதைப் பற்றி உலகம் முழுவதும் ஆராய்ச்சி நடைபெறுவது போலவே, ஹோமியோபதியிலும் நாங்கள் ஆய்வு செய்து வருகிறோம்.

Thuja, Merc Sol, Sulphur போன்ற மருந்துகள் சில மாற்றத்தைக் கொண்டு வந்துள்ளன. Calotropis என்ற சொட்டு மருந்து பயன்படுத்தப்படுகிறது.

இவற்றைப் பற்றி ஆலோசிக்க சென்னை. இராயப்பேட்டை லாயிட்ஸ் ரோடு சிவா மருத்துவமனையில் மருத்துவ ஆலோசகராக உள்ள என்னிடம் (தொ. 8223388) அணுகலாம். திங்கள், செவ்வாயில் ஈரோடு அரசு மருத்துவமனை எதிரில் உள்ள மருத்துவமனையில் (தொ. 219344) காணலாம்.

— டாக்டர் ஆர். ஞானசம்பந்தம்



# கோடை வந்தாச்சு, குடிநீர் சுத்தத்தில் கவனம் தேவை

ஆரோக்கியமான வாழ்க்கை என்றாலே உடற் பயிற்சிகளும், சத்துள்ள உணவும், தேவையான ஓய்வும்தான் என்பது பலரது கருத்து. ஆனால் சுத்தமான வீடும், கிருமி நாசினி முறைகளும் கூட நோயற்ற வாழ்விற்கு அதி முக்கியம் என்பதை பெரும்பாலோர் இன்னும் அறிந்திருக்கவில்லை. இதனை உலக நல சங்கத்தின் சமீபத்திய ஆய்வு அறிக்கையே சான்றுடன் நிரூபிக்கிறது.

உலகளவில் நோக்குகையில் இந்தியாவில்தான் அசுத்தக் குடி நீரால் வரும் தொற்று நோய்களான டைபாய்ட்டு, வயிற்றுப் போக்கு, கல்லீரல் நோய் (மஞ்சள் காமாலை) போன்றவற்றால் அதிகம் பேர் அவதிப்படுகிறார்கள். உலக ஆய்வு ஸ்தாபனம் 'ஜஸ்ட் லைக் தட்' இந்த அறிக்கையை சமர்ப்பித்துவிடவில்லை. இந்தியாவில் அதுவும் படித்தவர்கள் வாழும் பெரும் நகரங்களில் கிட்டத்தட்ட 3000 வீடுகளில் குடிநீர் சுத்தத்தை ஆராய்ந்த பின்பே 'குடிநீரில் சுத்தம் அதிகம் இங்கே தேவை' என்று இறுதியான எச்சரிக்கையை விடுத்துள்ளது. 1996-ல் எடுக்கப்பட்ட இந்த ஆய்வு கூறும் மற்றொரு தகவல் நம்மை அதிரவைக்கவும் கூடும். இந்தியாவில் 73% அதுவும் படித்த மேல்மட்ட வகுப்பினர் குழாய்த் தண்ணீரை கொதிக்க வைக்காமலேயே நேரிடையாகக் குடிக்க பயன்படுத்துகின்றனர். இதில் 55% போனால் போகிறதென்று நீரை வடிகட்டி பயன்படுத்துகிறார்களாம்.

'அட இதென்ன இப்படி கதைவிடறாங்க. அவங்கவங்க பொருளாதார நிலைக்கேற்ப ஜீரோ பி, தண்ணீர் வடிகட்டிகள், மற்றும் அக்குவா கார்டு உபயோகித்து சுத்தமான நீரைத்தானே பயன்படுத்துகிறோம்' என்று வரிந்துகட்டிக் கொண்டு நிராகரிக்கும் மங்கையர்களுக்கு கொசுறாக இன்னும் சில தகவல்கள் --

மஞ்சள்காமாலை நோயினால் பாதிக்கப்பட்ட 350 மில்லியன் மக்களில் 20% இந்தியர்கள். அதில் 16 மில்லியன் மக்கள் டைபாய்ட்டு ஜுரத்தால் மிகவும் பாதிப்பிற்குள்ளானவர்கள். மேலும் இறந்தவர்களின் எண்ணிக்கையில் 20% தண்ணீர் தொற்று நோயினால் பாதிக்கப்பட்டவர்கள். இவை அனைத்திற்கும் அடிமட்ட காரணம் அசுத்தக் குடிநீர் என்று அடித்துக் கூறுகிறார் பம்பாய் ஜஸ்லோக் மருத்துவமனையின் பிரதான மருத்துவரான திரு தான்ஜிபாய்.

இப்படி பெறப்பட்ட அறிக்கைகளும், சுகாதார அதிகாரிகளும் உண்மைகளை அப்பட்டமாக, ஆதாரத்துடன் நிரூபிக்கும் போது குடும்ப நலத்தில் பெரும்பங்கு வகிக்கும் தாய்மார்கள்



• குடிநீர் சுத்திகரிப்பு நிலையம்



# வீட்டுக் குறிப்புகள்

விசேஷங்களுக்காக வாங்கி, மீந்து போன வாழைப் பழங்கள், சுருங்கி, கருத்தும், கனிந்தும் அழுகியும் இறைபடுவது காணச் சகிக்காது. இப்படி வீணாக்காமல் மீந்த வாழைப்பழங்களை துண்டுகளாக்கி சிறிது நெய் விட்டு வதக்கி மசித்து, அத்துடன் பொடி செய்த வெல்லம் ஏலப்பொடி சேர்த்து, வாணலியில் ஒட்டாமல் வரும் வரை கிளறி, ஆறியதும் சுத்தமான பாட்டில்களில் வைத்துக் கொள்க. நீண்ட நாளைக்குக் கெடாது. இதை வேண்டும் போது —

1. அப்படியே ஜாம் மாதிரியும் சாப்பிடலாம்.

2. ரொட்டி ஸ்லைஸ்களுக்கு நடுவே தடவி, ஸாண்ட்விச்களாக பள்ளிக்குக் குழந்தைகளுக்குக் கொடுத்தனுப்பலாம்.

3. இதை உருண்டைகளாக்கிக் கொண்டு மைதா, உப்பு, சோடா உப்பு சேர்ந்த கரைசலில் தோய்த்து, இனிப்பு போண்டாவாக பொரித்தெடுத்துக் கொடுக்கலாம்.

4. பூரணமாக வைத்து போளி தட்டலாம். எல்லாவற்றுக்கும் மேலாக

5. திடீரென வரும் விருந்தாளிகளுக்கு, இதை வெந்நீரில் கரைத்து ஒரு கொதி வந்ததும், பால் சேர்த்து, துளி நெய்விட்டு பாயாசமாக இலையில் பரிமாறலாம் அல்லது

6. தேங்காய்ப் பாலில் கரைத்து, ஃபிரிஜ்ஜில் வைத்தோ ஐஸ் கட்டிகள் சேர்த்தோ வெயிலுக்கு அமிர்தமாக குளிர் பானமாகத் தரலாம். வாய்ப்புண் ஆறும்.

— எஸ். பட்டம்மா

---

குடிக்கும் நீர் சுத்தத்தில் கவனம் செலுத்துவது அவர்களது கடமையாகி விடுகிறதே! தண்ணீர் - மாசு விஷயத்தில் அதிர்ச்சியுற வைக்கும் மற்றொரு விஷயம் - இத்தகைய நீரை பயன்படுத்த பயன்படுத்த மாசு நீர் தொற்று நோய்களால் அவதியுறும் மக்களின் எண்ணிக்கை அதிகமாவதோடு அந்நோய்களுக்கு ஆதாரமான பாக்ட்ரியாக்களை கொல்ல உட்கொள்ளும் ஆன்டிபயாடிக் மருந்துகளும் அவைகளை எதிர்க்க முடியாமல் பயனற்றுப் போவதுதான். மருத்துவத் தொழிலைச் சார்ந்தவர்கள் கூறுவது 'குடிக்க உபயோகிக்கும் நீர்' சுத்தமானதுதானா என்பதை உறுதிப் படுத்திக் கொள்ளுங்கள். குடிக்கும் நீர் நன்றாகக் கொதி நிலை அடையும் போதுதான் (தளதளவென்று உருளும் போது) வீரிய பாக்டீரியாக்கள் கொல்லப்படுகின்றன.

இல்லத்தரசிகள் குடிநீரை கொதிக்க வைப்பது ஒரு புறமிருக்கட்டும். குடிநீரை சுத்திகரிக்கும் பணியை மேற்கொள்ளும் குடிநீர் வாரியம், மற்றும் சென்னை மாநகராட்சியின் சுகாதாரத்துறை போன்றவைகள் இதற்காக என்ன முயற்சிகளை மேற்கொள்கின்றன? சென்னை மாநகராட்சியைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் கூறியது. "மழை காலத்தில் தேங்கி நிற்கும் தண்ணீரால் பிரச்னை என்றால் அதுவே வெயிற்காலங்களில் அதிக தண்ணீர் வேண்டி விசைப் பம்புகளை வேகமாக உபயோகிக்கும் போது வேண்டப்படாத நீரும் நல்ல நீருடன் கலந்து பல நோய்கள் பரவ காரணமாகி விடுகிறது.

இது மட்டுமல்லாமல் குடிநீர் மேல் நோக்கி எவ்வளவு தூரம் உறிஞ்சப்படும் என்கிற அளவு தெரியாமல், அதில் அக்கறையில்லாமல் நெடுக்குவாட்டாக உயரே எழும்பியிருக்கும் பல மாடி குடியிருப்புகள். அதனால் நீரைச் சுத்தப்படுத்த க்ளோரினை மாநகராட்சி குடி தண்ணீரில் கலந்தாலும் மேலே குறிப்பிட்ட பல காரணங்களில் அது குடியிருப்புகளை போய்ச் சேர்க்கையில் மாசுபட வாய்ப்புண்டு.

உபயோகிக்கும் போது தண்ணீர் குளோரின் அளவு .1 லிருந்து .2 வரை இருந்தால் போதுமானது. இதை இல்லத்தரசிகளே கண்டு பிடித்து விடலாம். தேவை 10 ரூபாயில் விற்கும் பரிசோதனைக் குழாய், மற்றும் ஆர்தோ துலாடின் (நைனியப்ப நாயக்கன் தெருவில் உள்ள இராசயனக் கடைகளில் கிடைக்கும்) 100 மி.லி. குப்பி 25 ரூ. இது (இரண்டு மாதங்களுக்கு வரும்) குழாயில் முக்கால் பாகம் (குடி) தண்ணீர் நிரப்பி அதில் மூன்று அல்லது நான்கு சொட்டு ஆர்தோ துலாடின் மருந்து சொட்டுக்களை விட்டால் தண்ணீர்



**ஜவ்வரிசி வடாம் இடும்போது ஜவ்வரிசி வேகும்போது ஓமம் சேர்த்து விடவும். காய்ந்த பிறகு பொரித்தால் ஓம வாசனையுடன் நன்றாக இருக்கும். உடம்பிற்கும் நல்லது.**

**— ப. மஞ்சுளா**

அதில் கலந்திருக்கும் குளோரின் அளவிற்கேற்ப மஞ்சள் நிறமாக மாறும். குளோரின் கலக்கவில்லை என்கிற சந்தேகம் வரும் போது 100 சென்டிக்ரேட் அளவில் நீரை கொதிக்க வைத்து உபயோகித்தல் அவசியம்.

சென்னை பிரதான குடிநீர் சுத்திகரிப்பு அலுவலகத்தின் தற்போதைய தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர் திருமதி சாந்தா ஷீலா நாயர் கூறியது :

"குறித்த கால நடவடிக்கையாக மூன்று மாதங்களுக் கொருமுறை குடிநீரின் தரத்தைப் பொது நலம் மற்றும் நோய்த் தடுப்புத் துறை பரிசோதனை செய்கிறது. நகரமெங்கும், 25 இடங்களில் மாதிரிகளை சேகரித்து பௌதீக, இரசாயன, தொற்றுக் கிருமிகள் உள்ளனவா என்று பரிசோதனைகள் நடத்தப்படுகின்றன. தண்ணீரின் தரம் குறிப்பிட்ட அளவிற்கு இல்லையென தெரிய வந்தவுடன் பரிகார நடவடிக்கை உடனே மேற்கொள்ளப்படுகிறது. ரெட்ஹில்ஸிலிருந்தும், கீழ்பாக்கத்திலிருந்தும் தண்ணீர் திறந்து விடப்படும் இரண்டு மணி நேரத்திற்கு முன்பு நீரின் தரம் சோதிக்கப்படுகிறது. தானியங்கி மூலமாக 9 இடங்களிலும், 38 இடங்களில் மனிதர்கள் மூலமாகவும் தண்ணீரில் குளோரின் கலக்கப்படுகிறது. எதிர்காலத்தில் கம்ப்யூட்டர் மூலமாகவே தண்ணீரில் கலந்திருக்கும் குளோரின் அளவை நிர்ணயித்துக் கொள்ள ஆயத்தம் மேற் கொள்ளப்படுகிறது. குடி தண்ணீரில் தரம் குறித்து பொதுமக்களின் கருத்துக்கள் வரவேற்கப்படுகின்றன. இதற்கென ஒரு 'கம்ப்ளையிண்ட் - செல்' அமைக்கப்பட்டிருக்கிறது. குடிநீரின் தரம் குறித்துப் பொது மக்களுக்குச் சந்தேகமிருந்தால் கீழ்காணும் தொலைபேசி எண்கள் மூலம் எங்களுக்குத் தெரியப்படுத்தலாம் --

834436, 835312.

பொது நலம் மற்றும் சுகாதாரத்துறை இயக்குநர் மற்றும் பிரதான மருத்துவர் திரு குகாநந்தன் --

"அசுத்தக் குடிநீரினால் ஏற்படும் நோய்கள் வெறும் கீழ்மட்ட அளவில்தான் என்கிற கருத்து மிகவும் தவறானது. நடுத்தர மற்றும் மேல் தட்டு வகுப்பினர் குடிநீருக்கு வேண்டுமானால் கொதிக்கவைத்த நீரைப் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் குளிக்க, வாயைக் கொப்பளிக்க கையைக் கழுவ மிகச் சுத்தமான நீரையா பயன்படுத்துகிறீர்கள்? யோசியுங்கள் இதனால்தான் மஞ்சள் காமாலை, டைபாய்ட்டு போன்ற நோய்களினால் பெரும் மக்கள் அவதியுறுகிறார்கள். இன்றைக்கும் சென்னை மாநகரத்தின் மையப்பகுதியில் உள்ள பழைய கட்டிடங்களைச் சேர்ந்த சுமார் 2,00,000 அதிகமான நீர்த் தொட்டிகள் திறந்த நிலையில்தானிருக்கின்றன. இதனால் இன்றளவும் மலேரியா நோயினை அழிப்பது என்பது எங்களுக்கு எட்டாக்கனியாகவே இருந்து வருகிறது.

தற்போதிருக்கும் தண்ணீர்க் குழாய்கள் 1914-ல் மேட்லி என்னும் வெள்ளைக்காரர் காலத்தில் போடப்பட்டவை. இப்போதுதான் உலக வங்கி நிதியுதவியுடன் குழாய்களை மாற்றி அமைக்கும் பணியினை சம்பந்தப்பட்ட துறை மேற்கொள்ள இருக்கிறது. தண்ணீரில் உள்ள பாக்டீரியாக்கள், பூச்சிகள் மற்றும் அசுத்தங்களை நீக்க, .1 அல்லது .2 குளோரின் அளவு போதுமானது. ஆனால் .5 அளவினை மாநகராட்சி சேர்ப்பதின் நோக்கம் மக்களை சென்றடைவதற்குள் இடைப்பட்ட நேரத்தில் ஏற்படும் மாசுகளை தவிர்த்திடத்தான். தனிப்பட்ட வீடாயினும், குடியிருப்பு வீடாயினும் சரி தண்ணீரின் குளோரின் அளவைத் தெரிந்து கொள்வதுடன், அதன் அளவு (.1 அல்லது .2) குறைவு என்று தெரிந்தவுடன் கடைகளில் விற்கும் குளோரின் மாத்திரைகளை 30 லிட்டர், 10 லிட்டர் (ஏற்ப விற்கப்படுகிறது) நீர்த் தொட்டிகளில் இரவே சேர்த்து விட்டு 5 மணி நேரம் கழித்து உபயோகித்தும் கொள்ளலாம். அதிகப்படியான குளோரின் உடலுக்குத் தீமை என்று மருத்துவரீதியாக இதுவரை நிரூபிக்கப்படவில்லை.

பேட்டி : **கீதா மோஹன்**

# என்னையே ஆராய்ச்சிக்கு உட்படுத்திக் கொண்டேன்

பணக்காரன், படித்தவன் முதல் பாமரன் வரை தங்கள் ஜாதகத்தில் உள்ள நவகிரகங்களின் நிலையை அறிந்து செயல்படவே விரும்புகிறார்கள். மேலெழுந்தவாரியாக ஜாதக பலனைத் தெரிந்து கொண்டு முரண்பாடான பலன்களைப் பெற்று ஜோதிடர்களைத் திட்டுபவர்களும் உண்டு. ஏன் இந்த முரண்பாடு? 'காரணம், பிறக்கும் நேரத்தைத் துல்லியமாகத் தெரிந்து கொள்ளாமையே' என்கிறார் இத்துறையில் வல்லுநரான திருமதி மயூரி.

"பலானி க்ரஹசாரேண சூசயந்தி மனீஷ:

கோவக்தா தாரதம்யஸ்ய தமேகம் வேதஸம் வினா.

விதியை மாற்றும் மதிக்குத் துணை நிற்கிறது ஜோதிடம். சமுதாய முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட யாரும் விதியைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. ஆம்! மதியின் உதவி கொண்டு விதியை மாற்றி அமைத்துக் கொள்ள முயலுகின்றனர். அதற்குத் துணை செய்கிறது ஜோதிடம் என்பதே உண்மை!

**"நவ கோள்களின் இயக்கத்தை நம் இஷ்டப்படி மாற்றி வைக்க முடியும் என்பது ஒப்புக் கொள்ள முடியாததாக உள்ளதே?"** என்கிறோம்.

"அதை நான் விளக்குகிறேன் பாருங்கள். நவகோள்களின் சஞ்சாரத்தினால் ஏற்படுகின்ற தீமையான விளைவுகளிலிருந்து தடுத்துக் கொள்ள, பாதுகாத்துக் கொள்ள நமக்கு ஜோதிடத்தில் மந்திர, தந்திர, யந்த்ர சாஸ்திரங்கள் பயன்படுகின்றது என்பது கண்கூடு. என் வாழ்க்கையே அதற்கு முன் உதாரணம் என்பதால் என் ஜாதகத்தை ஆராய்ந்து என் வாழ்வை அமைத்துக் கொண்டதை உங்களுக்குச் சொன்னால் புரியும் என்று நினைக்கிறேன்."

"நான் ஒன்பதாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த சமயம், ஜோதிடத்தின் மேல் ஈடுபாடு வந்து தபால் மூலம் படித்துத் தேர்ச்சி பெற்றேன். அந்த சமயம் என் தந்தை என் ஜாதகத்தை ஒரு ஜோதிடரிடம் காண்பித்த போது களஸ்திரஸ்தானம் சரியில்லாததால் மண வாழ்க்கை சரியாக அமையாது, திருமணமானாலும் பிள்ளை பாக்கியம் இருக்காது எத்தனை கஷ்டப்பட்டுப் படித்தாலும் மதிப்பெண்கள் வராது, சுமாரான ஜாதகம் அதிர்ஷ்டம் குறை வானது என்று சொன்னாராம். ஏற்கெனவே ஜோதிடம் மீது ஆசை கொண்டிருந்த நான், என் ஜாதகத்தை நானே அலசி ஆராய்வதில் வெறியுடன் செயல்பட்டேன் எனலாம். அதற்காக ஜோதிடத்தை ஆதாரபூர்வமாக அறிந்து கொள்ள, பல ஜோதிடர்களை சந்தித்து, பேசும் முறை, அவர்கள் கணக்கிடும் முறை பற்றியெல்லாம் அறிந்து கொண்டேன். நிறைய புத்தகங்கள் படித்தேன். நாடி ஜோதிடர் சந்தித்தேன். இயற்கையாகவே ஈடுபாடு ஜோதிடத்தில் இருந்தும், ராணி





பொட்டுக்கடலை, ப. மிளகாய், பெருங் காயம், தேங்காய் இவற்றுடன் பரங்கிக்காய் உள்ளிருக்கும் விதை நீக்கிய விழுதைப் போட்டு சட்னி அரைத்தேன். எல்லோரும் இது என்ன சட்னி என்று விரும்பிச் சாப்பிட்டார்கள். பொட்டுக்கடலையைக் கொஞ்சமாக போட்டால் போதும். பூண்டும் இஞ்சியும் போட்டு அரைத் தால் இன்னும் சூப்பர்!

— கே. கல்பனா

மேரி கல்லூரியில் பி.எஸ்ஸி பூகோள இயலில் வானியல் சாஸ்திரம் பாடமும் வந்ததால் அதை முழுமையாக தெரிந்து கொண்டு தேர்ச்சி பெற்றதும் கூடுதல் காரணமாக அமைந்தது.

ஆராய்ச்சியின் முடிவில் என் ஜாதகத்தை நானே பார்த்த போது அந்த ஜோதிடர் சொன்னது உண்மையென்று தெரிந்தது. அதனால் நான் மனம் கலங்கவில்லை. தெய்வ அருள் இருந்தால், நவகோள் களை சாந்தப்படுத்தவும் முடியும் என்பதைப் புரிந்து கொண்டேன். உதாரணமாக, உச்சி வெயில் மண்டையைப் பிளக்கும் போது சூரியனின் கிரணங்கள் நம்மைத் தாக்காமல் இருக்க குடை பிடிப்பதால், சூரியன் தன் இயக்கத்தையே நிறுத்துகிறதென்பதில்லையே! அதன் உக்கிரம் தாங்கக் கூடிய அளவு குறைக்கப்படுகிறது என்பதே உண்மை இல்லையா! என் ஜாதக பலனை நெகடிவிலிருந்து பாஸிடிவாக மாற்ற குரு ஒருவரைத் தேடி மந்திரம் கற்றுக் கொள்ளச் சென்றேன். எந்த மந்திரமும் குரு மூலம் உபதேசிக்கப்பட்டால்தான் பலன் தரு மல்லவா? மூல மந்திரம், துர்க்கா ஸ்லோகம், நவக்கிரக ஸ்லோகங்கள், தாந்த்ரீக மந்திரங்கள் அனைத்துப் பூஜா மந்திரங்களையும் லட்சக் கணக்கான முறை உச்சாடனம் செய்வேன். எந்நேரமும் பூஜையில் குறிப்பாக துர்க்கா பூஜையில் ஈடுபட்டேன். விடியற்காலை நாலு மணி முதல் ஆறு மணி வரை பூஜை செய் வேன். அதுவே உகந்த 'ம். இந்த சமயம் தெய்வங்கள் உலாவும். பிரார்த்தனை நிறை வேறும். என் நாகதோஷம் நீங்க நாக பிரதிஷ்டை செய்து, நாகபூஜை செய்ய ஆரம் பித்தேன். '85-ம் வருடம் திருமணமானது. களத்திரஸ்தானம் சரியாக இல்லாததால் கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் தெய்வ அருளால், நவக்கிரக சாந்தியால் எல்லை தாண்டாமல் இருக்கும்படி செய்து கொண்டேன். எனக்கு ஒரு மகனும் பிறந்தான். அந்த பலனும் மாறியது கண்டு நான் மகிழ்ந்தேன்.

தீவிரமான தெய்வ பக்தி காரணமாக ஒரு மனிதர் வந்தால் அவர் நல்லவரா? கெட்ட வரா? அவர்களுக்கு ஏற்படும் நல்லது, கெட்டது எனக்கு உள்ளுணர்வாகத் தெரிகிறது.

**"நீங்கள் ஸ்பெஷலாக தனிமுறையில் ஜாதகம் கணிக்கும் விதத்தை விளக்குங்க ளேன்?"**

"முதலில், பிரம்மாவின் தத்துவ சித்தாந்தத் தில் குறிப்பிட்டுள்ளபடி, என் குரு மூலம் கற்றுக் கொண்ட முறையில் பிறந்த நேரத்தைத் துல்லியமாக கணக்கு செய்த பிறகுதான் பலன் சொல்கிறேன். ஏனென்றால் மொத்தம் 360° (முந்நூற்று அறுபது டிகிரி) உள்ள ஜாதகக் கட்டத்தில் முப்பது டிகிரிக்கு ஒரு ராசி வீதம் பன்னிரண்டு ராசிகள் உள்ளன. நான்கு நிமிட வித்தியாசத்தில் ஒருவர் பிறந்தால், ஒரு டிகிரி தள்ளினால் கூட ராசியின் முதல் அல்லது கடைசி பாகத்தில், அந்த ஒரு டிகிரியால் வித்தியாசம் ஏற்பட்டு கிரக நிலை மாறும் வாய்ப் புள்ளது. ஜாதக பலனும் மாறிவிடும். முரண்பாடுகள் ஏன் ஏற்படுகின்றது என்று கேட்டீர்களே இதனால்தான். ஏன்? ஜாதகமே இல்லாமல் பிறந்த நேரத்தைச் சரியாகக் குறித்து வைத்துக் கேட்டாலே பலன் சொல்ல முடியும். குழந்தை பனிக்குடம் உடையும் நேரம், தலை தெரியும் நேரம், அழும் நேரம் அனைத்துக்கு முண்டான பலன்களை கிரந்தத்திலிருந்து எடுத்து எழுதியுள்ளார் Astrological College ன் முதல்வர் காலஞ்சென்ற திரு சாஸ்திரி அவர்கள்.

பொதுவாக ஆத்மகாரகன் (ஜாதகத்தில்) சூரியன் என்பது விதி. ஒவ்வொருவருக்கும் மற்ற எட்டு கிரகங்களில் ஒன்று கூட ஆத்மகாரகனாக இருக்க வாய்ப்பு உண்டு. அதை நான் கணக்கிட்டுச் சொல்வது பலருக்கும் பெரும் பயன் தருகிறது. "இது போன்ற தனிமுறை விளக்கத்தை ஆத்மகாரகன் பற்றி நீங்கள்தான் மிகத் துல்லியமாகக் கணக்கிட்டு சொன்னீர்கள்'

# "சக்திக்கும் புத்திக்கும் இதோ இருக்கு சோலார் உப்பு"







**அறிமுகம் சோலார் சால்ட்.** உணவை மட்டுமல்ல; உங்கள் உடலையும் ஆரோக்கியத்தையும் பாதுகாக்கிறது. அயோடின் சத்து நிறைந்த சோலார் சால்ட், சுவையான உணவுக்கும் சுறுசுறுப்புமிக்க வாழ்வுக்கும் அத்தியாவசியமானது.

கட்டி தட்டாத சோலார் சால்ட், உப்பு தயாரிப்பில் 50 வருட அனுபவமிக்க தூத்துக்குடி சால்ட் அண்டு மரைன் கெமிக்கல்ஸ் லிமிடெட்டின் ஒரு தரமான தயாரிப்பு.

**வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகிறது**



**TUTICORIN SALT & MARINE CHEMICALS LTD**
Harbour Link Road,
Post Box No.41, Tuticorin - 628 001
Phone: Off: 321494 Fact: 320097
Fax: 0461-323473 Grams: "REFINESALT"




SASI (M) /108/97

**PURE, IODISED, FREE FLOWING.**

என்று ஒருமுறை திரு வலம்புரி ஜான் அவர்கள் அனுபவபூர்வமாக உணர்ந்து பாராட்டியது மறக்க முடியாது.

இரண்டாவதாக, ஜாதகத்தில், நவகோள் களின் பலா பலன்களை நிர்ணயிக்க 'Residential Strength' என்று உள்ளது. அது மிகவும் முக்கியம். அதன்படியும் கணக்கிடுகிறேன்.

அடுத்து ராசி மட்டும் பார்க்காமல் 'பாவத்தின்' (Bhavam) நிலை, அதாவது கிரகத்தின் உண்மை நிலை வைத்துதான் பார்க்கிறேன். 'இந்து லக்னம்' என்பதும் நான் பார்க்கும் முக்கியமான ஒன்று. அதன் மூலம் ஒவ்வொரு வரும் எந்தத் தொழில், எந்தத் துறை மூலம் எத்தனை பணம் சம்பாதிப்பார்கள் எனும் சம்பாதிக்கும் திறமையை அலசி ஆராய்ந்து சொல்கிறேன்.

ஜாதக நேரத்தை பிரம்மாவின் தத்துவ சித்தாந்த விதிப்படி கணக்கிட்டுப் பார்த்துத் துல்லியமாக கணித்துக் கொண்டு, நான் மேற் கூறிய அத்தனை முறைகளிலும் ஆழமாகப் பார்த்து பலன் சொல்லுகிறேன்.

என்னிடம் வழக்கமாக வரும் பிரபல பெண்மணி ஒருவர் வீட்டில் அவரது ஒரே மகள் திருமணம் செய்து கொள்ள மறுத்து வந்ததை அவர் வேதனையுடன் சொன்ன போது அந்தப் பெண்ணின் ஜாதகப்படி கட்டாயம் மணவாழ்க்கை உண்டு என்று சொன்ன போது, அவர் நம்பிக்கையில்லாமல் இருந்தார். இப்போது மணமாகி மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறாள் அந்தப் பெண் திருமணப் பொருத்தம் பார்க்கும் போது பத்துப் பொருத்தம் தவிர, நாடிப் பொருத்தம், ரிஷிப் பொருத்தம், உயிர்ப் பொருத்தம், வர்ணப் பொருத்தமும் பார்ப்பேன். திருமணத் தடையிருந்தால் பரிகாரத்துக்கும் வழிகாட்டுகிறேன். 'மங்கள சண்டிகா', 'பார்வதி ஸ்வயம்வரா', மந்திரங்களைத் திருமணமாக வேண்டிய பெண்களே ஜபிக்க வேண்டும். தொண்ணூறு நாட்களில் பலன் தெரியும். மிகக் கடுமையான ஜாதகம் என்றால் கூட ஒரு வருடத்தில் நிச்சயம் மணமாகும்.

பொதுவாக 8540084 எனும் என்னுடைய தொலைபேசி மூலம் அப்பாயின்ட்மென்ட் தந்துதான் பார்க்கிறேன். அவசர யுகத்தில் குறுகிய நேரத்தில் ஜாதகத்தைப் பார்த்து சொல்லுங்கள் என்பவர்களே அதிகம் உள்ளனர். அந்தக் குறுகிய நேரத்திலும் நான், பொறுப் புடன், பயபக்தியுடன் என் தொழிலைக் கவனிக்க உதவும் என் கணவர், என் மாமனார் அட்ஜஸ்ட் செய்து கொள்ளும் என் மகன் அவர்களைக் குறிப்பிட்டே ஆக வேண்டும். காலை எழுந்தவுடன் கையில் காப்பியைத் தயாராக வைத்துக் கொண்டு, ஒரு சிறு வேலை கூட என்னைச் செய்யவிடாமல், என்னைத் தேடி வருபவர்களுக்கும் இன்முகத்துடன் சலிக் காமல் காப்பி தந்து உபசரித்து, பெற்ற தாயினும் மேலாக என்னைக் கவனித்துக் கொள்ளும் என் மாமியார் எனக்குப் பெரும் வரப்பிரசாதம்தான்.

எனவே ஒருவர் செய்யும் தொழில் விருத்திக்கும், குடும்ப நிலைக்கும், சுபகாரியங்களுக்கும் மக்கள் கல்வி நிலை அறிந்து அவர்களுக்கு வழிகாட்டவும், புதிய முயற்சிகள் செய்யவும் அதற்குத் தகுந்த நல்ல நேரத்தைத் தெரிந்து கொண்டு செயல்படவும் ஜோதிட சாஸ்திரம் எப்படி உதவுகிறது என்பதற்கு நானே ஒரு உதாரணம்தான். அதே போல நவகோள்களை சரியான முறையில் சாந்தப்படுத்தி, அதன் தாக்கத்திலிருந்து விடுபடவும், தாந்த்ரீக மந்திரங்களை உச்சாடனம் செய்து, யந்த்ரங்களை முறை யாக எழுதி, விரதம் இருந்து, வண்ண தெரபி மூலம் நவகோள்களையும் நன்மை அளிக்கும் படி செய்வது நம் கையில்தான் உள்ளது என்பதே நிஜம். ஜோதிடக்கலையை ஆக்க சக்திகளுக்குப் பயன்படுத்தி மக்களுக்கு, முக்கியமாகப் பெண்களுக்கு ஏற்படும் கஷ்டங்களையும், தொல்லைகளையும் நீக்கப் பயன்படுத்தி அனைவரும் அமோகமாக வாழ வேண்டுமென்பதே என் பிரார்த்தனை" என்று கூறுகிறார் மயூரி.

— பானுமதி

---

**வெளியூர் செல்லும்போது ஃபிரிட் ஜைக் காலி செய்து விட்டு மீதமுள்ள கறி காய்களை உப்பு கலந்து (நறுக்கிய பின்) பால்கனியில் வெயில் படுமிடத்தில் தட்டில் வைத்து சல்லடைத் தட்டுப் போட்டு மூடி விட்டுச் சென்றால் திரும்பி வந்ததும் வற்றல் குழம்பில் போட்டுக் கொதிக்க விடலாம். ருசியாக அமைந்துவிடும்.**

**— லக்ஷ்மி சுந்தரம்**



ட்ரிபுள் ஆக்டிங் மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் உங்களை பாதுகாக்கிறது. வெய்யிலின் வெப்பத்திலிருந்து... கறுத்துப் போவதிலிருந்து... சீக்கிரமே விழும் சுருக்கங்களிலிருந்து.

**கடும் வெய்யிலினால் ஏற்படும் கெடுதல் மிக்க அல்ட்ரா வயலெட் கதிர்களிலிருந்து உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள்.**




பகலில் ஒவ்வொரு நிமிடமும் கெடுதல் மிக்க சூரியனின் அல்ட்ரா வயலெட் கதிர்கள் தாக்குவதால், உங்கள் மேனியழில் பாதிக்கப்படுகிறது. சூரிய வெப்பத்தால் சருமம் கன்றிப்போவதோடு, மேனி கறுத்துப்போகவும், கறைகள் ஏற்படவும் வாய்ப்புள்ளது. அது மட்டுமல்ல. உங்கள் மேனியில் உள்ள இயற்கையான ஈரப்பசை மற்றும் எண்ணெய்ப்பசை அற்று காய்ந்து விடுவதால், சருமம், வறண்டு, பொலிவிழந்து காணப்படுகிறது. எனவே, சருமத்தில் கோடுகளும் சுருக்கங்களும் சீக்கிரமே விழுகிறது.

உங்கள் மேனியை பராமரிக்க ட்ரிபுள் ஆக்டிங் மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் பாதுகாப்பு மிக அவசியம். ஏனெனில், அது கண்ணுக்கு புலப்படாத ஒரு குடை போல் செயல்படுகிறது. இதிலுள்ள 'சன் ப்ரொட்டெக்ஷன் ஃபாக்டர்' இந்திய சீதோஷ்ண நிலைகளுக்கு மிகவும் உகந்தது. மேலும், 100% ஆயில் ஃப்ரீ ஃபார்முலேஷன், அதிநவீன சர்வதேச சருமப்பராமரிப்பு தொழில்நுட்பத்தால் உருவாக்கப்பட்டுள்ளது.

எனவே, நீங்கள் மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் உபயோகிக்கும் வரையில், கெடுதல் மிக்க யுவி கதிர்கள் உங்களை தாக்குவதற்கு வாய்ப்பே இல்லை.

**மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் லோஷன் மற்றும் க்ரீம்**

வெய்யிலிலிருந்து பாதுகாக்கும் மேனி வண்ணத்தில் மெருகு சேர்க்கும்.

# L A K M É

# பொய்யல்ல நிஜம்

வேலை
கிடைக்காதவர்களுக்கு

**மாதம் ரூ. 3000/- சம்பளம்**

(ஆண்/பெண்களுக்கு)

## நிச்சயமாக வேலை தருகிறோம்

✦ உங்கள் ஊரில் உள்ள பணக்காரர்களைப் பாருங்கள். நிச்சயம் சொந்த தொழில் செய்பவர்களாகவே இருப்பார்கள்! மற்றவர்களிடம் வேலை செய்பவராக இருக்கமாட்டார்கள்.

✦ நீங்களும் ஏன் சொந்த தொழில் செய்யக் கூடாது?

✦ எந்த தொழிலை செய்வது? எப்படி ஆரம்பிப்பது? நடத்துவது? என்று பலப்பல சந்தேகங்கள் இல்லையா?

✦ தையல் தொழிலை செய்யலாமே!

✦ தையல் தொழிலில்தான் அதிக வருமான வாய்ப்புள்ளது. தினம் ஒரு பேண்ட், ஒரு சட்டை தைத்தால் ரூ. 100/- வருமானம் உண்டு.

✦ தையற் தொழில் ஒன்றும் மிகப் பெரிய ரகசியம் உள்ள தொழில் அல்ல. சாதாரண படிப்பு உள்ள யாரும் எளிதில் புரிந்து கொண்டு செய்யலாம்.

✦ தபால் மூலமாக: ஆண்/பெண்/குழந்தைகள் ஆடைகளுக்கு அளவெடுப்பது? வெட்டுவது? தைப்பது எப்படி? போன்ற பயிற்சி தருகிறோம். பயிற்சி மட்டும் இன்றி, தையல்கடை ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்துவது எப்படி? என்ற பயிற்சியும் + டிப்ளமோவும் தருகிறோம்.

✦ பயிற்சியின் போது வீட்டில் தையல் இயந்திரம் தேவை இல்லை. தபால் பயிற்சியில் தைக்கும் முறை வித்தயாசமாக அமைக்கப்பட்டுள்ளது.

✦ முழுமையான தையர்கலைஞராக ஆண்/பெண்களை உருவாக்குவோம்.

✦ வீட்டை விட்டு வெளியே சென்று பயிற்சி பெற முடியாதவர்களுக்கு இது ஒரு அருமையான திட்டமாதலால், உங்கள் முகவரியை தெளிவாக ஒரு போஸ்ட் கார்டில் எழுதி

## வனஜ் தையற் பள்ளி,

**3, ஹால்ஸ் சாலை, எழும்பூர், சென்னை - 600 008.**

என்ற முகவரிக்கு எழுதுங்கள்.
நாங்கள் இலவச விவரப் புத்தகம் அனுப்புகிறோம். போன் : 8258265

**நேர்முக பயிற்சி உண்டு** **ஹாஸ்டல் வசதி ஆண்களுக்கு உண்டு**

நேர்முகப் பயிற்சி மையங்கள், 33, காந்தி இர்வின் சாலை, எழும்பூர், சென்னை - 8; ● 4, ராஜாஜி சாலை, மற்று தாம்பரம் (தேஷனல் தியேட்டர் எதிரில்) சென்னை - 45; ● 97, L.B. ரோடு, அடையார், சென்னை - 20. ணபதிராம் தியேட்டர் அருகில்); ● 339, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 24.

**முகத்தில் தோன்றும் பல குறைகள், அதனை சீர் செய்யும் முறைகள் குறித்து, பிரபல முக சீரமைப்பு அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் எஸ். எம். பாலாஜி விளக்குகின்றார் : —**

# முக வளர்ச்சிக் குறைபாடுகள்

தாடை எலும்புகளில் மற்றும் முகத்தில் உள்ள உறுப்புகளில் ஏற்படும் வளர்ச்சிக் குறைபாடுகள், பிறவிக் காரணங்களினாலோ அல்லது பாரம்பரியத்தினாலோ ஏற்படலாம். பிறவிக் குறைபாடுகள் பிறக்கும்



• டாக்டர் எஸ்.எம். பாலாஜி

பொழுது விகாரமாக தென்ப து. பாதிக்கப்பட்ட குழந்தை வளர வளர குறைபாடும் பெரிதாகக் காணப்படும். இதற்கு சரியான உதாரணம் பாதிமுகப் பெருவளர்ச்சி. இந்தக் குறைபாட்டுடன் பிறக்கும் குழந்தைக்கு சிறு வயதில் பாகுபடுத்த இயலாது. இவர்கள் வளரும் பொழுது, பாதிக்கப்பட்ட பக்கத்தில் உள்ள மேல் தாடையும், கீழ்தாடையும் பெரிதாக தோன்றும். அதில் உள்ள பற்கள் விரைவில் முளைத்து விழுந்தும் விடுகிறது. அறுவை சிகிச்சையின் மூலம் முகத்தை ஓரளவிற்குச் சரி செய்யலாம்.

முக வளர்ச்சிக் குறைபாடுகளில் பெரும்பாலும் நாம் காண்பது தாடை எலும்பு வளர்ச்சி குறைபாடுகள்தான். தாடையின் வளர்ச்சி மிகவும் குன்றிப் போயோ அல்லது அதிக மாகவோ இருக்கும். இவை மேல் மற்றும் கீழ்த்தாடையையும் பாதிக்கும். நீண்டு வளர்ந்திருக்கும் தாடை எலும்பை, துண்டித்து அளவைக் குறைத்து தட்டுக்களாலும் திருகு ஆணிகளாலும் சரியான அளவில் நிலை நாட்டலாம். வளர்ச்சி குன்றியுள்ள தாடைகளை கிராஃப்ட் (Bone Graft) மூலம் முன்னே கொண்டு வரலாம். அறுவை சிகிச்சையின் மூலம் முகத்தில் உள்ள எலும்பு பாகங்களை மட்டுமின்றி தசை பகுதியையும் சீர் செய்யலாம்.

உதட்டின் இருப்பக்கம் கருவிலிருந்து சரியாக இணையாமல் இருந்தால், உதட்டு குழிகள் தோன்றுகின்றன. இவை அதிகமாக கீழ் உதடிலே காணப்படுகின்றன. குழிகள் உருவாவதால், உதடு தடித்துக் காணப்படும். இவற்றை அறுவை சிகிச்சையினால் சரி செய்யலாம். சிலருக்கு உதட்டின் உள்பகுதியின் சதை இரண்டாக மடிந்து இரட்டை உதடாகக் காணப்படும். இவை பிறவியிலிருந்தே காணப்படும். இவற்றை சீர் செய்யவும் அறுவை சிகிச்சையே தேவைப்படும்.

உதட்டில் ஏற்படும் மற்றொரு குறைபாடு உதடு, அண்ணப் பிளவு. இவை இரண்டு வகைப்படும். ஒன்று, உதடு பிளவு மட்டும் தனியாகவோ அல்லது அண்ணப் பிளவும் சேர்ந்தோ இருப்பது. மற்றொன்று, அண்ணப் பிளவு மட்டும் தனியாக இருப்பது.

உதடு பிளவுக்குப் பல காரணங்கள் கூறப்பட்டுள்ளன. கருவின் சரியான வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் குறைந்தால், மற்றும் கருவுற்றிருக்கும் தாய்க்குக் கடுமையான நோய் தாக்கினால் கூட உதடு பிளவு ஏற்படும். இதைத் தவிர இரத்த ஓட்டத்தில் தீங்கு விளைவிக்கும் அதிகமான மருந்து வகைகள், ஆல்கஹால், இரத்த சோகை போன்ற காரணங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. கருவின் வளர்ச்சியின் பொழுது அண்ணம் இரண்டு தனி தட்டுகளாக இருக்கும். அதற்கு மேல் நாக்கு உருவாகும். முழுமையாக உருவாகிய நாக்கு இவ்விரண்டு தட்டுகளின் வழியே கீழே இறங்கி வாய்க்குள் அடங்கும். இவ்வாறு நாக்கு ஒழுங்காக இறங்கா விட்டால் தட்டுகள் இணையாமல், பிளவு ஏற்படும்.

மேற்கண்ட காரணங்களை உறுதியாகக்

கூற இயலவில்லை. நெருங்கிய சொந்தத்தில் திருமணம் செய்வது முக்கியமான காரணமாகக் கருதப்படுகிறது. இந்நிலையில் உதடு, அண்ணப் பிளவு மட்டுமின்றி, காது தோன்றாமை, பெருந்தலை, நீர்தலை வாய்ப் பூட்டு நோய், சிறு கீழ்தாடை மற்றும் பிறவி இருதயக் கோளாறு ஏற்படும். உதட்டுப் பிளவு அதிகமாக தோன்று கின்றன. ஒரே நபருக்கு உதடு பிளவு மற்றும் அண்ணப் பிளவு சேர்ந்து இருந்தால், அது ஒன்றிற்கு ஒன்று தொடர்பு உள்ளதாக இருக்கும். உதட்டுப் பிளவுகள், உதட்டின் ஒரு பக்கமாகவோ அல்லது இருபக்கமாகவோ காணப் படுகிறது. இரண்டு பக்கமாக பிளந்து இருக்கும் உதட்டை முயல் உதடு (Hare Lip) என அழைக்கிறோம். உதட்டுப் பிளவும், அண்ணப் பிளவும் சேர்ந்து இருப்பவர் களுக்கு மூக்கு துவாரமும், வாயும் ஒன்றோடு



• சிகிச்சை செய்து கொண்டவர்....

ஒன்று இணைப்புடன் இருக்கும். சாப்பிடும் பொருட்கள் மூக்கின் வழியே வெளியே வரும். தாயிடம் பால் குடிக்க சிரமப்படும். இதனால் பாலை தனியாக எடுத்து புட்டியில் அடைத்துக் கொடுக்கலாம். குழந்தை பிறந்து மூன்று மாதத்திற்குப் பிறகு உதட்டு அறுவை சிகிச்சை செய்யலாம்.

உதட்டை சரி செய்த பின், வாயில் அக்ரிலிக் தட்டை பொருத்தலாம். இந்தத் தட்டு வாயையும் மூக்கையும் தனியாக பிரிக்கும். இதனால் குழந்தை பேசுவதற்கும், உண்ணுவதற்கும் எளிமையாக இருக்கும். குழந்தையின் பால் பற்கள் வளரும் பருவத்திலும் அதன் பிறகும் மூன்று மாதத்திற்கு ஒருமுறை பல் மருத்துவரை அணுகி கருத்து கேட்பது நலம்.

இதற்குரிய அறுவை சிகிச்சை செய்த பிறகும், குழந்தையின் பேச்சுத் திறன் சரியாக இல்லாவிடில், ஃபெரிங்கோபிளாஸ்டி (Pharyngoplasty) என்னும் அறுவை சிகிச்சையை தொண்டைக் குழியில் செய்ய வேண்டும். இம்மட்டும் செய்த பிறகும், கடின அண்ணப் பகுதியிலும், உதட்டிற்குக் கீழும், எலும்புப் பகுதியில் பிளவு இருக்கவே செய்யும். பால் பற்கள் விழுந்து, நிலை பற்கள் முளைக்கும் தருவாயில், அந்த எலும்புப் பிளவிற்குள் மற்றொரு அறுவை சிகிச்சை செய்து, இடுப்பு எலும்பிலிருந்து Graft எடுத்து அடைத்தால், நிலைப் பற்கள் சீராக வளரும். இதனை சரியாக எட்டி லிருந்து ஒன்பது வயதிற்குள் செய்ய வேண்டும். இதற்கு Secondary Alveolar Bone Grafting என்று பெயர். இந்த அறுவை சிகிச்சையை பயில்வதற்காகவே நான் ஒரு மாதம் ஆலந்து சென்று பயிற்சி எடுத்து வந்துள்ளேன். இதைக் குறித்துப் பல வகையான ஆய்வுக் கட்டுரைகளை அகில உலக மாநாடுகளில் சமர்ப்பித்துள்ளேன்.

இவ்வளவும் செய்த பிறகும், மேல் தாடை மற்றும் மூக்கின் வளர்ச்சியும் முழுமையாக இருக்காது. இதனால் பிளவு இருக்கும் பக்கத் தில், மூக்கின் அடிபாகம் அமுங்கி இருக்கும். இந்த வகையான குழந்தைகளை பார்க்கும் பொழுது, கீழ் தாடைதான் அதிகமாக வளர்ந்து இருப்பது போல் தெரியும். ஆனால் இவர்களின் மேல் தாடையின் வளர்ச்சிதான் குறைந்திருக்கும். அதை 16 வயதில் அறுவை சிகிச்சை செய்து வெளியே கொண்டு வர வேண்டும். இந்த அறுவை சிகிச்சைக்கு Le Fort I Advancement என்று பெயர். பின்னர் அமுங்கி இருக்கும் மூக்கை Rhinoplasty மூலம் சீராக ஆக்கலாம்.

வளர்ச்சிக் குறைபாடுகள் சில வேளையில் நாக்கையும் தாக்குகின்றன. இவ்வாறு தாக்குவதால் நாக்கு சிறியதாகவோ, பெரியதாகவோ, அசையாமலோ, பள்ளங்கள் உடனோ அல்லது பிளவுடனோ தோன்றும். சிறுநாக்கு பெறுவதற்கான சரியான காரணம் எதுவும் தெளிவாகவில்லை. இதற்குரிய சிகிச்சை என்று எதுவும் கிடையாது. இந் நிலை காண்பது மிகவும் அரிது. பெருத்த நாக்கு உடையவர்களைத்தான் பெரும்பாலும் காணலாம். இவ்வகை பிறவியிலிருந்தே தோன்றலாம் அல்லது உடலில் ஏற்படும் பல வித மாற்றங்களினால் பின்னர் தோன்றலாம்.

நாக்கில் கட்டிகள் இருந்தால், நாக்கு பெரிதாகிவிடும். சிலருக்கு நாக்கின் சதை

அதிகமாக வளர்ந்திருக்கும். இதனால் வெளிப்படக் கூடிய அழுத்தம், அதை யொட்டியுள்ள பற்களை வெவ்வேறு திசையில் முளைக்கத் தூண்டும். இதற்கு அறுவை சிகிச்சையின் மூலம் அளவை குறைத்து விடலாம். நாளமில்லா சுரப்பியின் கோளாறுகளிலும் நாக்கின் அளவு பெரிதாகி விடும். எல்லோருக்கும் நாக்கின் அடிபாகம் வாயின் தரையோடு இணைக்கப்பட்டிருக்கும். இந்த இணைப்பு சிறியதாகவோ அல்லது இறுக்கமாகவோ இருந்தால், நாக்கின் அசைவு தடைப்பட்டு விடும். இந்நிலையை அசையா நாக்கு என்று அழைப்பார்கள். இது முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ அசையாமல் இருக்கும். ஒட்டிக் கொண்டிருக்கும் சதையை அறுவை சிகிச்சையினால் நீக்கி விட்டால், நாக்கை அசைக்கும் வாய்ப்புள்ளது. சிலருக்கு நாக்கின் பரப்பில் ஆழமான நீண்ட பள்ளங்கள் இருக்கும். இதனால் பெரிதாக பாதிப்பு ஏதும் ஏற்படாது. ஆனால், இப்பள்ளங்களில் உணவுப் பொருட்கள் சிக்கிக் கொள்வதால், நாக்கை உடனுக்குடன் தூய்மை செய்தல் வேண்டும்.

உதடு, அண்ணங்களில் மட்டுமின்றி நாக்கிலும் கூட பிளவு ஏற்படும். இக்குறைபாடு பெரும்பாலும் தனியாகத்தான் தோன்றும். பிளவு முழுமையாக நாக்கை பாதிக்கலாம் அல்லது ஒரு பகுதியை மட்டும் பாதிக்கலாம். இதனால் உண்ணுவதும், பேசுவதும், தூய்மையாக வைக்கவும் கடினமாகும். இந்தக் குறையை அறுவை சிகிச்சையின் மூலம் நிவர்த்தி செய்யலாம்.

இவ்வாறு கூறுவதுடன் பல்வேறு சாதனைகளை புரிந்து கொண்டிருக்கும் டாக்டர் பாலாஜி சென்னை ஆலிவர் சாலையிலுள்ள இசெபெல் மருத்துவ மனையிலும் மற்றும் கவிஞர் பாரதிதாசன் சாலையில் உள்ள தனது சொந்த மருத்துவ மனையிலும் மாலையில் மட்டும் ஆலோசனை அளிக்கிறார். தொலை பேசி 452936, 4996890. இவர் ஜெனிவாவில் உள்ள பல்கலை கழகத்தின் அழைப்பின் பேரில் முகச் சீரமைப்பில் உள்ள அதிநவீன சிகிச்சை முறைகளை விளக்க சென்றிருக்கிறார்.

டாக்டர் பாலாஜி மேன்மேலும் அதிநவீன சிகிச்சை முறைகளைக் கற்றறிந்து, குறைபாடுகளாலும் நோயினாலும் அவதியுறும் மக்களின் நோய் தீர்த்துக் குறையில்லாத மக்களாக அவர்களை ஆக்குவது தன் கடமை என்கிறார்.

தொகுப்பு : **'புவன்'**

# சர்வலோ



• திருப்பணி நடக்கிறது

அன்னை பராசக்தியாம் சர்வலோக நாயகியின் சௌந்தர்யத்தில் மனம் ஒன்றிய மைந்தன் ஆதி சங்கரர் முதல் ராம கிருஷ்ணர் வரை எத்தனை ஆத்ம அனு பூதியைப் பெற்றிருக்கிறார்கள். ஆயிரம் பெயர் கொண்டவளான அவளை எப்படி அழைத்தாலும் அவள் அழகின் நாயகிதான்! ஆனால் அவளே சுந்தரி -- அதுவும் 'சர்வாங்க சுந்தரி' எனப் பெயர் தாங்கி நமக்கு அருள்பாலிக்க குடி கொண்டிருக்கிறாள் என்று சொன்னால் வேறு என்ன சிறப்பு வேண்டும்?

கும்பகோணத்திலிருந்து பூந்தோட்டம் செல்லும் சாலையில் பதினாறு கிலோ மீட்டரில் கூந்தலூர் வருகிறது. அங்கிருந்து வடக்கே உள்முகமாக ஒரு கிலோ மீட்டர் தொலைவில் இருப்பதுதான் 'கருவிலி' கிராமம். அங்கே இருக்கும் ஈசுவரன் கோயில் அதன் மகிமையாலும், புராணச் சிறப்பாலும் தல விசேஷத்தினாலும் அனைவரையும் ஆகர்ஷித்துக் கொண்டிருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

அதுவும் இங்கு இப்போது திருப்பணி கள் நடந்து கொண்டு இருப்பதற்கும், கும்பாபிஷேகம் மார்ச் 27-ல் நடப்பதற்கும் காரணமான சம்பவம் ஆச்சர்யமானது. இவ்வூரில் ஒரு சிறிய ஆஞ்சநேயர் கோயில். இதனை வழிபட்டுக் கொண்டு இருந்த அன்பர் ஒருவர், இக்கோயிலுக்குக் கொஞ்சம் திருப் பணி செய்ய வேண்டும் என

• யமதீர்த்தம்





• ஆஞ்சநேயர் கோயில்

# சர்வா

# க நாயகி!

நினைத்தார். எனவே இவ்வூரைச் சேர்ந்த, இப்போது சென்னையில் வாழும் வி. வைத்தியநாதன் அவர்களை அணுகிச் சொன்ன போது எவ்வளவு வேண்டும் என்று கேட்டிருக்கிறார். அவருக்குச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை. மூவாயிரம் என்று சொன்னவுடன் வைத்தியநாதன் கொடுத்திருக்கிறார். அதை வாங்கிச் சென்றவரிடமிருந்து எந்தத் தகவலும் இல்லை.

எனவே தன் உறவினரான





• சர்வாங்க சுந்தரி

கண்ணனை விசாரிக்கச் சொல்ல, அவர் கருவேலிக்குத் விசாரித்துக் கொண்டு போய் இருக்கிறார். அந்த அன்பர், "மூணா யிரம் பத்தாது. திரும்பவும் எனக்குப் போய் கேக்க கஷ்டமா இருந்தது. அப்படியே அந்தப் பணத்தை வைத்திருக்கிறேன். இந்தாருங்கள்" என்றிருக்கிறார். கண்ணன் தங்கள் மூதாதையர் வாழ்ந்த அவ்வூரைப்

சுவரன் கோயிலைப் பார்த்துப் ரமித்துப் போயிருக்கிறார். அவர் ந்து சொன்னதைக் கேட்ட வைத்தியநாதனும் அவர் சகோதரர் பிரபல தொழில்துறை வல்லுனர் திரு வி. கிருஷ்ணமூர்த்தியும் சென்று பார்த் திருக்கிறார்கள். தங்கள் குடும்ப மூத்தவர் குழந்தை ஐயர் எனும் ராமய்யர் அவ் வூரில் பிரசித்தமாக வாழ்ந்த பெருமை யும், அக்கோயிலின் ஆயிரம் வருடங் களுக்கும் மேலான பழமையும் தெரிய வந்த போது மகிழ்ந்து போனார்கள். இப்பேர்ப்பட்ட கோயிலுக்குத் தங்களால் ஆனதைச் செய்ய வேண்டும்

# ங்க சுந்தரி!

என இந்த சகோதரர்கள் தீர்மானித்தார்கள். திரு வைத்தியநாதனும், வி. கிருஷ்ணமூர்த்தியும் சேர்ந்து லட்சக் கணக்கில் செலவழித்து முழு மூச்சுடன் இன்று திருப் பணிகள் செய்து கொண்டிருக்கிறார்கள். இப்படி யாக ஈசுவரன் இவர்களை இழுத்துத் திருப்பணியில் ஈடுபடுத்தி இருக்கிறார் போலும்! இத்தனைக்கும் காரணமான ஆஞ்ச நேயரும் தனது கோயிலைச் சீர் செய்து கொண்டு விட்டார்!





• பிரகாரத்தைச் சுற்றி...

'கருவிலி' என்பது இனி ஒரு தாயின் கருவிலே உதிக்க வேண்டாம் எனும் படியான மோட்சத்தைக் கொடுக்கும் நிலை. நினைத்தாலே முக்தியளிக்கும் திருவண்ணாமலை போல, கருவிலி கொட்டிட்டைக் கோயிலில் குடிகொண்டிருக்கும் சர்குணேசுவரரைத் தரிசித்தால் மறு பிறவி இல்லையென்பதாம். அதற்கெனவே கோயிலின் எதிரில் யம தீர்த்தம் உள்ளது.

சற்குணன் எனும் அரசர் சிறந்த சிவ பக்தனாக இருந்து இக்கோயில் ஈசுவரனைத் தொழுது முக்தி பெற்றான். அவன் பெயரால் சற்குணேஸ்வரன் என இறைவன் அழைக்கப் பெற்றான் என்கிறார்கள். 'கருவிலி'யைச் சுற்றியுள்ள எட்டு திக்கிலும் கோனேரி ராஜபுரம், வள்ளியூர், திருவீழிமலை, திருவாஞ்சியம், கூந்தலூர், தூர்க்காட்சி, அம்மன் குடி, அம்பாச்சிபுரம் ஆகிய தலங்கள் ஒன்றுக்கொன்று புராண, வரலாற்றுத் தொடர்புடைய ஊர்கள்.



திரிபுரம் எரித்த பிரான் ருத்ர தாண்டவம் ஆடியதாகவும், நடனங்களிலே ஒருவகை கொட்டிட்டை எனவும், அதனையே சிவபிரான் இங்கு தாண்டவமாக ஆடினார் என்பதால் தான் அப்பர் தன் பதிகங்களிலே 'கருவிலிக் கொட்டிட்டை' என்றே குறிப்பிடுகிறார். இப்படி மிகப்பழம் பெருமை வாய்ந்த இக் கோயில் சமீபகாலமாக மிகவும் க்ஷீணமான நிலையில்தான் இருந்தது. நாங்கள் போனபோது வெகு வேகமாகக் கும்பாபி



ஷேகத்திற்குத் தயாராகிக் கொண்டு இருந்தது.

இத்தனைக்கும் காரணமான ஆஞ்ச நேயரைத் தரிசித்து ஊருக்குள் சென்று ஈசுவரன் கோயிலுக்குள் அடியெடுத்து வைத்தோம். வாசமணக்கும் கதம்பத் திலே எந்த மணத்தை ரசிப்பது? கலை மணக்கும் சோழநாட்டில் எந்தக் கோயில் அழகில்லை? அதுவும் இங்கு சுற்றுப்பிரகார கோஷ்டங்களிலே இருக்கிற தெய்வ மூர்த்தங்கள்... ஒவ் வொரு தெய்வமும் அப்படி ஒரு தீர்க்க மான அமைப்புடன், வனப்பும் கலைவண்ணமுமாக மிளிர் கிறார்கள். கோயில் கோபுரம் தாண்டி உள்ளே சென்றால் இருபுறமும் கணபதியும், முருகனும். பிறகு தட்சிணாமூர்த்தி, பிரம்மா, துர்க்கை என பார்த்துக் கொண்டே நிற்கலாம் போலிருக்கிறது.

கருவிலிப் பேற்றைத் தரும் சற்குணேஸ்வரனைத் தரிசிக்கிறோம். சத்துவ குணமே மோட்சத்தைத் தருகிறது. மோட்சத்திற்கு மட்டும் சாத்விகக் குணம் தேவை என்றில்லை. இன்றைய நிலையில் வன் முறையும், ஒழுக்கக் கேடு களும் நிறைந்து போன நிலையில் சாத்வீகம்தான் சமுதாயத்தைக் காப்பாற்ற வேண்டும். அதனை அருளுபவராக சற்குணேஸ் வரர் விளங்குகிறார். சமுதாய நாலனுக்காக இனியாவது மக்களைத் தீய வினை களிலிருந்து காப் பாற்றுங்கள் என வேண்டித் தொழுது வெளியே வருகிறோம்.

அம்மனுக்கு என பிரகாரம் தாண்டி தனி கோயில், சன்னதி. உள்ளே சென்றபோது தான் பிரமித்து நின்றோம். எப்பேர்ப்பட்ட அம்மன்! பெயரும் சர் வாங்க சுந்தரி! இதழ்க்கடையில் விரிக் கும் புன்சிரிப்பில் மனம் கொள்ளை போகிறது. ஐந்தடிக்கும் மேலான அத்தனை பெரிய அம்மன் அபூர்வமான ஒன்று. பாலாலயம் வைத்துப் பூஜித்து வந்ததால் விசேஷ மான அலங்காரம் இல்லாத நிலையிலும் அப்படி ஒரு தெய்வீகம் அங்கு குடி கொண்டு இருக்கிறது.

"அப்பல்லாம் நாங்க மார்கழி மாசமான காலையில் ஊரச் சுத்தி





பஜனை பாடி இங்க வந்து சேருவோம். இந்த அம்மன் மேலேயே நிறைய பாட்டுங்க இருக்கு. அதையெல்லாம் பாடிக்கிட்டு வருவோம்" என்கிறார்கள் அங்கிருந்த வயதானவர்களான கோதண்டபாணி, பக்கிரிசாமி, நடேசன் எனும் வயதானவர்கள்.

"அந்தப் பாட்டுங்கள்ள ஒண்ணு பாடுங்களேன்!" என்ற போது,

"சர்வலோக நாயகி, சர்வாங்க சுந்தரி

சாட்சா சாரணி, சாயுஜ்ய ரூபிணி

நானும் உனக்குத் தொண்டு

நாளும் புரியவும் கண்டேன்

நமனை விரட்ட வழி

நவிலுவோம் அதற்கென்று'

என்று வயோதிகக் குரலில் நினைவுபடுத்திப் பாடியது சுருக்கமாக அந்த ஊரின் வரலாற்றையே கூறுவதாக இருந்தது.

"இந்த அம்மன் ரொம்ப சக்தி வாய்ந்த அம்மனுங்க. நிறைய பெண்கள் வேண்டுதல் நிறைவேறி இருக்குங்க. குறிப்பா கல்யாணம் ஆகாதவங்க, குடும்பப் பிரச்னை காரணமாக வருத்தமா இருக்கிற பெண்கள் இங்க வேண்டிக்கிறப்ப நிறைய தீர்ந்து போயிருக்கு. பெண்கள் வேண்டிகிட்டு வேண்டுதலை நிறை வேத்தி இருக்காங்க. இப்பதான் சமீபகாலமா கோயில் புனருத்தாரணம் பண்ணாம போயிடிச்சு. திரும்பவும் இந்தக் கோயில் பழைய நிலைக்கு வர்றதைப் பார்க்கும் போது சந்தோஷமா இருக்கு" என்றகிறார்கள் இவ்வூரைச் சேர்ந்தவர்கள்.



திருப்பணிக்காகத் தரும் ஒத்துழைப்பு பெரிய விஷயம். இங்கே மிகச்சின்ன சாமான் கடை இருக்கிறது. அதன் உரிமையாளர் சாதாரண நிலையில் இருப்பவர் தான். அவர் கூட, திருப்பணிக்காக அங்கேயே தங்கி வேலை செய்பவர்களுக்கு அந்த வாரம் பணம் வரலேட்டானால் கூட நீங்க சாமான் வாங்கிக்குங்க, அப்புறமா பணம் தாங்க என்கிறார். அந்த அளவிற்கு அன்பும், அக்கறையும்

திருப்பணி என்று வரும்போது கோயில் திருப்பணிகளில் ஆர்வமுள்ள பன்னீர்செல்வம், ஸ்தபதி எம். எஸ். சிவப்ரகாசம், முன்னாள் கர்ணம் இராமதுரை முதலியவர்கள் மிகவும் சிரத்தையுடன் செய்து வருகிறார்கள். இக்கோயிலின் ஈ.ஓ. கே. ராஜகோபால் ஹெச்.ஆர். அண் சியில் திருப்பணிக்காக அனுமதி வாங்கிக் கொடுத்து, அங்கே அடிக்கடி வந்து தன் பெரும் பகுதி நேரத்தைச் செலவழித்துக் கொண்டிருக்கிறார். உள்ளூர்க்காரர் மதிவாணனோ தன் செல்வாக்கினைப் பயன்படுத்தி கோயிலுக்குத் தேவையான ஒத்துழைப்பினை வழங்கிக் கொண்டு இருக்கிறார்.

"இவ்வூர்க்காரர்கள் இக்கோயில்



• கோதண்டபாணி, பக்கிரிசாமி, நடேசன்

வைத்திருக்கிறார்கள்" என்கிறார்கள் திருப்பணிக் குழுவினர்.

'ஊர் கூடி தேர் இழுத்தல்' என்பார்கள். அப்படி மிகப் புராதான மான, அற்புதமான மகிமைகளைக் கொண்ட திருக்கருவிலி கொட்டிட்டை சற்குணேசுவரரின் கோயில் புதுப் பொலிவுடன் மாறி வருகிறது. சர்வாங்க சுந்தரி தன் இரண்டு கைகளிலும் அட்சமாலை, தாமரைமலர், தாங்கி, மற்றும் இருகரங்களால் அபயம் அளித்து வரமளிக்கும் தெய்வீகப் பொலிவுடன் திகழ்கிறாள். 'அவள் அருளாலே அவள் தாள் வணங்கி' இகபர வாழ்வில் அன்பும் அருளும் பெறுவோம்.

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : ஜி. சுரேஷ்

• சிவப்ரகாசம்



• ராமதுரை



# பட்ஜெட் பற்றிப் பார்க்கலாமா?

சென்ற இரண்டு இதழ்களில் பொருளாதாரத்தைப் பற்றியும் மேலும் பல வகையான சேமிப்பைப் பற்றியும் மேலோட்டமாகப் பார்த்தோம். இவைகளைப் பற்றி இன்னும் தெரிந்து கொள்ள வேண்டியது நிறையவே இருக்கிறது. மார்ச் முழுவதும் பல நாளிதழ்களும், பத்திரிகைகளும் பட்ஜெட் பற்றி எழுதுவதும் விவாதிப்பதுமாக இருந்தன. நாமும் பட்ஜெட்டைப் பற்றி அறிந்து கொள்ள முயற்சிப்போம். ஏனென்றால் பட்ஜெட் போடுவது பொருளாதாரத்தின் முக்கிய அங்கமாகும். மேலும் இப்பொழுது அதைப் பற்றித் தெரிந்து கொள்வது மிகக் காலப்பொருத்தமாக இருக்கும். ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு பட்ஜெட் ஒரு முக்கிய வழிகாட்டி மற்றும் பாதையாகும். இந்த அறிமுகத்தோடு விஷயத்திற்கு வருவோம்.

பட்ஜெட் என்பது குறிப்பிட்ட நிதியாண்டிற்கு (Financial Year) அதாவது ஏப்ரல் 1-ஆம் தேதி முதல் அடுத்த ஆண்டு மார்ச் 31 வரை திட்டமிடப்பட்ட செலவுகளும், எதிர்பார்க்கப்படும் பணவரவுகளின் கணக்கெடுப்புமாகும்.

நம் தனிப்பட்ட குடும்பத்தின் பட்ஜெட்டிற்கும் நாட்டின் பட்ஜெட்டிற்கும் ஒரு அடிப்படை வித்யாசம் என்னவென்றால் நாம் வருமானத்திற்கு ஏற்ப செலவுகளுக்கு ஒதுக்குவோம் (அது அநேகமாக கட்டுக்கடங்காமல் போய்விடும்; அது வேறு விஷயம்). ஆனால் நாட்டின் பட்ஜெட் திட்டமிட்ட செலவிற்கு ஏற்ப வருமானத்தை "ஏற்படுத்துவதும்" பெருக்குவதுமாகும். முடியாத அளவுதான் பட்ஜெட் பற்றாக்குறை எனப்படும் budgetary deficit. இந்தப் பற்றாக்குறை ஒட்டுமொத்தமாக "கவலைக்கு அறிகுறி" என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. இன்னும் சொல்லப் போனால், நான் ஏற்கெனவே கூறியபடி, பணவீக்கம் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு எப்படி நல்லதோ, அதே போல 'பட்ஜெட் பற்றாக்குறை' அதுவும் பணப் பற்றாக்குறை ஒரு சிறிய அளவில் நாட்டிற்கும் நன்மையே தரும்.

நம் நாட்டின் மொத்த பொருட்களின் உற்பத்தி; மற்றும் சேவையின் மதிப்பின் அளவில் கிட்டத்தட்ட ஐந்து சதவிகிதம் பணப் பற்றாக்குறை இருக்குமானால் அது நாட்டின் பொருளாதாரத்திற்கு சாதகமாக இருக்கும். இதைத்தான் ஆங்கிலத்தில் GDP அதாவது Gross Domestic Product என்று சொல்லுகிறார்கள். இதைப் பற்றிப் பிறகு பார்ப்போம்.



வெறும் செலவுகளுக்காக பணம் ஒதுக்குவது பட்ஜெட்டின் நோக்கம் கிடையாது. பட்ஜெட்டின் நீண்ட காலக் குறிக்கோள் பணவீக்கத்தை

# உங்கள் இல்லத்தில் எங்கள் "சமய சஞ்சீவி"யை வரவேற்றிடுங்கள். வாழ்க்கையில் முன்னேற்றம் கண்டிடுங்கள்.






சரியான சமயத்தில் செய்யப்படும் உதவிக்கு இணையாக வேறு எதையும் கூறமுடியாது. அத்தகைய உதவியைச் செய்யும் நட்பு பொக்கிஷம் போன்றது – நட்பைப் பற்றிய இந்தக் கருத்தில் ராம் காஷ்யப் சிட்ஸ் முழு நம்பிக்கை கொண்டிருக்கிறது. **எங்கள் ஊழியர்கள், முகவர்கள்** ஆகியோர் உங்களுக்கு அளிக்கும் சேவையின் அடித்தளமாக இருப்பதும் இந்தக் கருத்துதான். அதனால்தான் அவர்களை **சமய சஞ்சீவிகள்** என்று அழைக்கிறோம். மானிடப் பண்புகள், நிலையான உறவுகள், சமூக வளம் ஆகியவற்றில் எங்களுக்குள்ள முழுமையான ஈடுபாட்டின் அடிப்படையில்தான் அவர்கள் உங்களுடைய வாழ்க்கை முன்னேற்றத்திற்கு உதவும் முயற்சிகளை மேற்கொள்கிறார்கள்.



சந்தாதாரருக்கான பரிசு

சீட்டுகளை ஒரு பயனுள்ள சேமிப்பு வழிமுறையாக மக்கள் நீண்ட நெடுங்காலமாகப் பயன்படுத்தி வருகிறார்கள். எப்போதெல்லாம் அவசியத் தேவை ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் அவர்களுக்கு சீட்டுகள் பேருதவியாக இருந்து வருகின்றன என்பது நிரூபணமான ஒன்று. இன்னும் சொல்லப்போனால், வளர்ந்து வரும் நாடுகளில் சீட்டுகள் மிகப்பாதுகாப்பான சேமிப்பு வழிமுறையாக விளங்கி வருகின்றன என்பதை **ஏசியன் டெவலப்மென்ட் வங்கியின்** ஆய்வறிக்கை தெளிவுபடுத்தி இருக்கிறது. நம்பகத்தன்மை, பண்பாடு, தொலைநோக்கு ஆகிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு

கட்டுப்படுத்துவதாகவும், பற்றாக்குறையைக் கட்டுக்குள் வைத்திருப்பதாகவும், தொழிற்சாலை வளர்ச்சியினை பெருக்குவதாகவும், ஏற்றுமதியை ஊக்குவிப்பதாகவும், சமுதாய வளர்ச்சிக்கு வழி வகுப்பதாகவும் இருக்க வேண்டும்.

ஆனால் நடைமுறையைப் பார்த்தால் 'முன் நிர்பந்தச் செலவுகளே பட்ஜெட்டின் பெரும் பகுதியை ஆக்கிரமித்து விடுகிறது. உதாரணமாக இந்தாண்டுக்கான பட்ஜெட்டைப் பார்ப்போம். நம்முடைய ஒரு ரூபாயில் 25 பைசா வட்டிக்காகவே போகிறது. ராணுவத்திற்காக 13 சதவிகிதம் ஒதுக்கியிருக்கிறோம். அதாவது 38% இவைகளுக்கே போய் விட்டது. சென்ற ஆண்டு பட்ஜெட்டில் நாம் சமுதாய முன்னேற்றத்திற்காக திட்டமிட்ட/ திட்டமிடப்படாத செலவு உட்பட ரூ. 10,000 கோடிக்கு மேலேயே ஒதுக்கியிருந்தோம்.

மேற்கூறிய எல்லா செலவுகளுமே நேர்முக நன்மை தருபவையல்ல. இருந்தாலும் அவை அவசியம். அநேகமாக எல்லா நாடுகளிலும் மேற்கூறிய எல்லாச் செலவுகளும் இருக்கும். ஒரு நாட்டின் பொருளாதாரக் கொள்கை மற்றும், அதன் முன்னேற்றத்தின் அளவு, மேலும் வேறு பல விஷயங்கள் பொறுத்து இந்த மாதிரிச் செலவுகளின் விகிதம் மாறுபடும்.

நாட்டின் செலவுகளை இரண்டு அங்கங்களாகவும் இரண்டு வகையாகவும் பிரிக்கலாம். திட்டமிடப்பட்ட மற்றும் திட்டமிடப்படாத செலவு என்று இரண்டு அங்கங்களாகும், மூலதன செலவு மற்றும் நடைமுறை செலவு இரண்டு வகையான செலவாகும். அதாவது Capital and Revenue Expenditure.

பொருளாதாரத் துறைக்கு, சமுதாயப் பணிகளுக்கு மாநில மற்றும் யூனியன் பிரதேசங்களின் திட்டத்திற்காக ஒதுக்கப்படும் செலவுகள் திட்டமிடப்பட்ட செலவில் அடங்கும்.

வட்டிச் செலவு, ராணுவச் செலவு, மானியம் வழங்குவதால் ஏற்படும் செலவும், பொருளாதார/சமுதாயத் துறைக்கு மேற்கூறிய பிரிவில் சேர்க்கப்படாத சில பல செலவுகள், மாநிலம் மற்றும் யூனியன் பிரதேசங்களுக்கு வழங்கும் கடன் திட்டமிடப்படாத செலவில் சேரும்.

மேலும் பட்ஜெட் வழங்குதல் என்பது பொருளாதாரத் துறை, வணிகத்துறை, நிதித் துறை, பொதுப் பணித்துறை என்று நாட்டின் பல துறைகளின் தேவையை கருத்தில் வைத்துக் கொண்டு வழங்கப்படுகிறது. ஆனால் இந்தத் துறைகளின் தேவை வருடத்திற்கு வருடம் பெருகிக் கொண்டே போவதால் அரசாங்கத்தால் சமாளிக்க முடியவில்லை. அதனால் இப்பொழுது தனியார் துறையின் முதலீட்டை அனுமதிப்பதற்காக பரிசீலித்துக் கொண்டிருக்கிறது.

இந்த பட்ஜெட்டில் நிதியமைச்சர் ப. சிதம்பரம் இன்ஷூரன்ஸ் துறையில் அதாவது 'உடல்-நல காப்பில்' மட்டும் தனியார் துறையின் முதலீட்டை அனுமதித்ததை நீங்கள் கவனித்திருக்கலாம். உண்மையில் தனியார் மயமாக்குதல் காலகட்டாயத்தால் ஏற்படுத்தப்பட்ட ஒரு மாற்றம். இதைப் பற்றி விவாதிப்பதற்கு, எழுதுவதற்கு நிறையவே இருக்கிறது.

சரி! மறுபடியும் பட்ஜெட்டிற்கு வருவோம். செலவைப் பற்றிப் பார்த்தோம். ஆனால் இந்தச் செலவை எவ்வாறு ஈடுகட்ட முடியும்? செலவிற்கு ஏற்ப அல்லது ஓரளவேனும் செலவை ஈடுகட்டக் கூடிய வருமானம் இருக்கிறதா என்று பார்ப்போம்.

நாட்டின் வருமானத்தை மூலதன

**பவுடர் பூசப் பயன்படும் பப்ஸ் பழையதாகி விட்டால் வெளியில் எறிந்துவிட வேண்டாம். ஷூ பாலீஸ் போடவும், பித்தளை வெள்ளிப் பாத்திரங்களைத் துடைத்து சுத்தம் செய்யவும் பயன்படுத்தலாம்.**

**— எல்.எம். அழகு**



வருமானம் என்றும் அந்த ஆண்டிற்கான வருமானம் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். Capital receipts and revenue receipts.

ரெவின்யூ வருமானம் எனப்படும் அந்தாண்டுக்கான வருமானத்தின் முக்கிய பகுதி மறைமுக வரியாகும். நம் நாட்டின் ரெவன்யூ வருமானத்தில் கிட்டத்தட்ட 75% மறைமுக வரியின் மூலமாகக் கிடைக்கிறது.

மறைமுக வரி என்பது என்னவென்றும் பார்ப்போம். சுங்க வரி, விற்பனை வரி, கலால் எனப்படும் Excise Duty இவையெல்லாம் மறைமுக வரிகளாகும் வருமான வரி, சொத்து வரி, பரிசுத் தொகையின் மேல் போடப்படும் வரி (Gift Tax) நேர்முக வரியைச் சார்ந்ததாகும். வருமான வரியின் விசித்திரத்தைச் சொல்லுவதென்றால் நாட்டின் வெகு குறைவான ஜனத் தொகையே இந்த வரியின் கீழ் வருகிறது. நம் நாட்டில் 75% ஜனத்தொகை விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறது. ஆனால் இதுவரை எந்த அரசாங்கமும் அவர்களிடமிருந்து வரி வசூலிக்க சட்டம் கொண்டு வரவில்லை.

அதற்குக் காரணம் அரசியல் ரீதியான நிர்பந்தம் என்பது ஒரு சாராரின் கருத்து. விவசாயத்தை ஊக்கப்படுத்த வேண்டும், 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குதான் மிஞ்சும்' என்பதெல்லாம் இன்னொரு சாராரின் கருத்து.

மேற்கூறிய வழிகளில்லாமல், அரசாங்கத்திற்கு வட்டி, டிவிடண்ட் மூலமாகவும் ஒரு சிறிய தொகை வருகிறது. இது 1995-96 ஆண்டின் ரெவன்யூ வருமானத்தில் கிட்டத்தட்ட 20% ஆக இருந்தது.

ஆனால் நாட்டின் பெரிய திட்டங்களுக்கும் செலவுகளுக்கும் இதெல்லாம் எம்மாத்திரம்? மூலதன வருமானம் எனப்படும் Capital receipts ஐப் பற்றிப் பார்ப்போம். இந்தப் பிரிவில் வரும் வருமானத்தில் கிட்டத்தட்ட 40% உள்நாட்டு மற்றும் வெளிநாட்டுக் கடன் மூலமாக வருகிறது (1995 - 96). இந்த ஆண்டுக்கான பட்ஜெட்டில் ரூ. 79,033 கோடி இந்த வகையில் வரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. சிறு சேமிப்பு மற்றும் அரசாங்கத்தின் வைப்பு திட்டத்தின் மூலமாகவும் ஓரளவு பணம் புரட்ட முடிகிறது. 1995 - 96 ஆம் ஆண்டின் பட்ஜெட்டில் ரூ. 7,000/- கோடி அரசாங்கத் துறையின் பங்குகளை தனியாருக்கு விற்பதின் மூலமாக திரட்ட திட்டமிட்டிருந்தது. பணநெருக்கடி இருக்கும் இந்நேரத்தில் கவர்மெண்ட் கம்பெனியின் பங்குகளை விற்பதும் அரசாங்கத்தின் பல துறைகளில் தனியார் முதலீட்டை ஊக்குவிப்பதும் கவர்ச்சிகரமாக இருந்தாலும் நாம் கொள்கை காரணமாகத் தயங்குகிறோம். நான் ஏற்கெனவே கூறியது போல தனியார் துறையின் அனுமதிப்பு பற்றி சாதகமாகவும் பாதகமாகவும் (ஒரு சில) கருத்துக்களும் நிலவுகின்றன. பல நிபுணர்கள்; விவரம் அறிந்தவர்கள் அதற்குச் சாதகமாகவும், பாமர மக்கள், தொழிலாளிகளின் சங்கங்கள் பெரும்பாலானவை எதிர்மறையாகவும் கருத்து தெரிவித்துக் கொண்டிருக்கின்றன. ஒரேடியாக தனியாரிடம் விடாவிட்டாலும் தேவை நிர்பந்தமாக பல துறைகளில் தனியார் முதலீட்டிற்கு அனுமதி வழங்கப்படும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

பின் குறிப்பு : பணப் பற்றாக்குறை (Fiscal deficit) = மொத்த ரெவின்யூ வருமானம் + இதர வருமானம் + திரும்பப் பெறும் கடன் - மொத்தச் செலவு.

**— ஜெயந்தி ஸ்ரீனிவாசன்**



**நாம் எலுமிச்சை சாதம் செய்யும் பொழுது புளியோதரைக்கு என்று ஸ்பெஷலாக செய்து வைத்திருக்கும் வெந்தயம் தனியா பொடியைப் போட்டுக் கலந்தால், சாதம் புளியஞ்சாதம் போல, வாசனையாக நன்றாக இருக்கும். அதிலும் வறுத்த வேர்க்கடலை போட்டுக் கலந்தால் பிரமாதமாக இருக்கும்.**

**— சித்ரா ஸ்ரீதர்**



1



• ஹென்னா ...

... • போட்டதும்





" 'கருநாகம் போன்ற கூந்தல்' என்று வர்ணிப்பார்கள். கருமையான வண்ணக் கூந்தல் விரும்பிய காலம் போய் இன்று பல வண்ணங்களில் கூந்தல் வண்ணத்தை மாற்றிக் கொள்கிறார்கள். இதை விரும்பி எங்களிடம் கேட்கும் இளம் பெண்களுக்கும் செய்கிறோம். ஆனால் கூந்தலுக்கு அது அவ்வளவு நல்ல தல்ல" என்கிறார் தி விஸிபிள் டிஃபரன்ஸ் ப்யூட்டி பார்லரின் (தொ. பே. 8254079) உரிமையாளரும், சன் டீ.வியில் பிரபலமான நிகழ்ச்சித் தொகுப்பாளராகவும் விளங்கும் வசுந்தரா. இங்கு அவர் சில கேசப் பராமரிப்புகளைச் செய்து காட்டுகிறார்.

3



3a

1. முடிக்கு ஹென்னா போடுவது நல்லது. பொடுகு, முடி உதிர்தல்

3b



2a

• ஹேர் கலரிங்

2b

போன்ற பிரச்னைகளுக்கு இது நல்ல தீர்வு. ஹென்னாவை மாதம் ஒருமுறை போட்டு வந்தால் நரை முடி வராமல் தடுக்கலாம்.

2. Hair Colouring இப்பொழுது மிகவும் பிரபலமாகி வருகிறது. இளம் பெண்களும், ஆண்களும் இப்பொழுது கருமையான முடியின் கலரை மாற்றி அமைத்துக் கொள்ள விரும்புகிறார்கள். இப்பொழுது பாப்புலர் கலர்ஸ் Burgandy, Red மற்றும் Brown.

2a. இது பார்ப்பதற்கு ஒரு fashionable look கொடுக்கிறது. இதனைச் செய்ய 2 மணி நேரம் ஆகிறது. அடிக்கடி செய்யக்கூடாது. ஏனென்றால் அது முடியை பாதிக்கக்கூடும்.

3. முடி உதிராமல் நன்கு செழித்து வளர hot-oil மஸாஜ் செய்து கொள்ளலாம். தேங்காய் மற்றும் ஆலிவ் எண்ணெயைச் சம அளவு எடுத்து, சூடாக்கி ஒவ்வொரு அங்குலமாக முடியைப் பிரித்து எண்ணெயைப் பஞ்சினால் தொட்டுத் தேய்க்கவும்.

3a. மஸாஜர் என்ற கருவியை உபயோகித்து நன்கு மஸாஜ் செய்கிறோம். இதனால் எண்ணெய் உள்ளே சென்று, மயிர்க்கால்களுக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. முடியும் நன்கு வளர வாய்ப்புண்டு.

3b. அதன் பிறகு hair

# வண்ண வண்ணமாகக் கூந்தல்!





pack food அளிக்கிறோம். இதற்குத் தேவையான பொருட்கள் ஹென்னா 100 கிராம், ஆம்லா 100 கிராம், பிரம்மி, ஆம்லா பிரிங்கராஜ் அனைத்தும் சேர்த்து 200 கிராம், செம்பருத்திப் பவுடர் 30 கிராம். இதனுடன் ஒரு முட்டை, சிறிதளவு தயிர் எல்லாவற்றையும் கலந்து தலையில் தடவி, 15 நிமிடம் ஊறிக் கழுவலாம்.

4. முடிக்கு நல்ல ரத்த ஓட்டம் தேவை. எண்ணெய் மஸாஜ் செய்த பிறகு comb massager கொண்டு இதனைச் செய்வதால், தலையில் மயிர்க்கால்களில் ரத்த ஓட்டம் அதிகரிக்கிறது.

4a. இந்த மஸாஜரை நன்கு எண்ணெய் தடவிய பிறகு, 10 - 15 நிமிடம் வரை நாம் வைத்து அதன் பின் 'hairpack' போடுகிறோம். Hair pack ல் ஆம்லா, பிரிங்கராஜ், பிரம்மி, ரீதா போன்ற மூலிகைகள் உபயோகப்படுத்துகிறோம்.

4b. பொடுகு நிறைய இருந்தால் முடி உதிர்தல் ஒரு பிரச்னையாகி விடுகிறது. இதற்கு Ozone கதிர்களை செலுத்தும் பொழுது பொடுகை உண்டாக்கும் கிருமிகளை நாம் படராமல் தடுக்க முடியும்.

படங்கள் : ஜி. சுரேஷ்



கோதுமையை மணம் வரும்வரை வறுத்து, குக்கரில் போட்டுத் தண்ணீர் விட்டு, நன்கு வேகவிடவும். பின் ஒரு மூடி தேங்காயைத் துருவி, மிக்ஸியில் போட்டு அரைத்து அத்துடன் ஊற்றி, இனிப்புக்குத் தேவையான அளவு வெல்லம் சேர்த்து, மணத்திற்கு ஏலக்காய் நுணுக்கிப் போட்டு இறக்க அருமையான கோதுமை பாயசம் ரெடி! இதில் வெந்த கோதுமை கொட்டை கொட்டையாக முழித்துக் கொண்டிருப்பது சாப்பிட சுவையாக இருக்கும்.

— பூர்ணிமா பாலன்

ரும்புகிறோம்!

## 'தங்கையிடம்' மானசீகமாக மன்னிப்பு கேட்கிறேன்!

❋ பொதுவாக படித்து என்னத்தைக் கிழித்தாய் என்று சொல்வார்கள். ஆனால் கிழித்ததில் இவ்வளவு பிடித்துள்ள பொன் மொழிகள் உள்ளது கண்டு வியந்தோம்.
ஸ்ரீவித்யா காளிதாஸ்,
சிதம்பரம்.

❋ சிறுகதைகள் அனைத்தும் நன்றாகவே உள்ளது. குறிப்பாக அகிலா கார்த்திகேயன் எழுதிய வீட்டுக்கு வீடு சிறுகதையும், கங்கா ராமமூர்த்தி எழுதிய உறுத்தல் சிறுகதையும் மாமியார் மருமகள், மற்றும் உடன் பிறந்த சகோதரர்களின் நல்லுறவை மிகவும் நல்லபடியாக சித்தரித்துள்ளது. இது போன்ற சிறுகதைகள் படிக்கும்போது குடும்ப உறவுகள் மேம்படும்.
வி. பசுபதி, சித்தோடு.

❋ சினிமா நடிகைன்னு நினைப்பா என்று யாரோ ஒரு வாசகி எழுதிய கட்டுரையைப் படித்துவிட்டு' உண்மையில் நான் உருகித்தான் போனேன். ஏன் என்றால் என் தங்கையும் கருப்பு நிறம்தான். பல முறை இருவருக்கும் சண்டை வரும் பொழுது அவள் வாயை அடக்க முடியவில்லை என்றால் கருவாச்சி என்று நான் கூறினால் உடனே மௌனமாகி விடுவாள். அவள் கண்கள் கலங்கிவிடும், ஆனால் அன்று அதைப் பற்றி கவலைப்பட்டதே இல்லை. அவள் வாயை அடைத்து விட்டதாக சந்தோஷப்பட்டுக் கொள்வேன். ஆனால் அது எத்தனை சிறுமைத்தனம் என்று இக்கட்டுரையைப் படிக்கும் பொழுது உணர்ந்தேன். கண்களோடு சேர்ந்து அவள் மனமும் எத்தனை முறை அழுதிருக்கும். என் தவறுக்காக (இன்று அவளை விட்டு வெகு தொலைவில் இருப்பதால்) இந்த மங்கையர் மலர் மூலம் என் தங்கையிடம் என்னை மன்னிக்க வேண்டுகிறேன்.
ஸ்ரீமதி ஜெயகுமார், திருச்சி.

❋ 'என் வாழ்வே வேள்வியானது' கட்டுரையில் சகோதரி 'சண்பகலக்ஷ்மி'யின் சாதனையைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை. நன்றாகப் பிறக்கும் பெண் குழந்தைகளையே வெறுக்கும் சில மனிதர்களிடையே, சண்பகலக்ஷ்மியின் சாதனை, ஒப்பற்ற ''ஊசி முனைத்தவம்''. கடைசியில் அவர் உடைந்து போய் கண்ணீர் விட்டதை படித்தபோது என் கண்களும் கலங்கியது. 'வனிதா'விற்கு ஏற்ற நல்ல மனம் உடைய மணமகன் கிடைக்க எங்களது வாழ்த்துக்கள்.
பிரேமா கதிரேசன், மதுரை-14.



❋ 'தயக்கம் என்னும் தடைச்சுவர்' பற்றிய கட்டுரையில் தயக்கம் கூடாது என்பது பற்றி எழுதி இருந்தார்கள். நிச்சயம் இந்தத் தயக்கத்தினால் எத்தனையோ நல்ல காரியங்கள் தடை பெறுகிறது. திருமணம் கூட தடை செய்யப்படுகிறது. தயக்கத்தை விட்டெறிந்தால் நிச்சயம் குடும்பத்தில் குழப்பமும், கூச்சலும் தடுக்கப்பட்டு பலபேர் நிம்மதியாக இருக்கலாம். சரியான கட்டுரை எழுதிய ஆசிரியருக்கும் வெளியிட்ட உங்களுக்கும் பாராட்டுக்கள்.
யசோதா பழனிச்சாமி, ஈரோடு - 11.

❋ 'கைகள் கண்களுக்கும் மேலானவை!' கட்டுரை கண்டு வியந்து போனேன். 'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' என்றுதான் காலங்காலமாய் சொல்லக் கேள்விப்பட்டு வருகிறோம். ஆனால் இப்பேட்டியைப் படித்தபின் 'கைகளில் சிறந்த உறுப்பில்லை' என்று மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று.
வசந்தராஜ செல்வன், பாண்டிச்சேரி - 3.

❋ இவ்வளவு நாள் திருபுவனத்திற்குப் பட்டுப் புடைவை வாங்கத்தான் செல்ல வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. அவ்வூர் ஸ்ரீ கம்பஹரேஸ்வரர் திருக்கோவிலின் திருப் பெருமையை படித்த பிறகு கோவிலுக்குச் சென்று இறைவனை தரிசிக்காமல் திரும்பக் கூடாது என முடிவு செய்துள்ளேன்.
மோகனா சிவானந்தம்,
தாத்தையங்கார் பேட்டை.

❋ கசப்பது பெரும்பாலும் உடல் நலத்திற்கு மிகவும் உதவக் கூடியது என்பது இயற்கை அளித்திருக்கும் நியதி. உதாரணம் பாகற்காய் வேம்பு. அதே போல் பிறர் சொல்லும் உண்மைகள் கசப்பாக இருந்தாலும் அதைப் பற்றி விசாரித்து நடவடிக்கை எடுப்பதே நன்மை பயக்கும். அல்லாது அவ்வாறு சொல்பவர்களை உதாசீனப்படுத்துவது பெரும்பாலான சமயங்களில் தீமையையே பயக்கும் என்ற ஆசிரியரின் கருத்து நிச்சயம் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய நியாயமான கருத்தாகும்.
டி.எஸ். பார்வதி, திருப்பரங்குன்றம்.

❋ 'எதிர்கால கணவனே' என்று விளித்து கடமைகளை சொன்னதும் பெண்ணின் பெருமைகளை விளக்கியதும் இயல்பாக ஏற்றுக் கொண்டு படித்துக் கொண்டே போய், கடைசி வரியில் ஷாக் 'என் மருமகளின் எதிர்கால கணவனே' என்று! எல்லாக் கணவன்மாருக்கும் அருமையான கவிதை.
ராணி உலகநாதன், சென்னை - 41.

❋ கருப்பாய் பிறந்துவிட்ட காரணத்தினால், சொந்த வீட்டாராலேயே உதாசீனப்படுத்தப்பட்டு வேதனையில் வாழ்ந்து வரும் வாசகியின் கடிதம், நெஞ்சை நெகிழச் செய்தது.
எல். முருகன், மதுரை - 1




# சின்னச் சின்ன தாளில் வண்ண வண்ண வாழ்த்துக்கள்!





**தேவையானவை :**

7 செ.மீ. X 7 செ.மீக்கு ஏதேனும் டார்க் கலர் வெல்வெட் பேப்பர்

போஸ்ட் கார்டு (அ) வெள்ளை, மஞ்சள் சார்ட் அட்டை

**செய்முறை :**

மேற்சொன்ன அளவின் படி ஒரு சதுர வெல்வேட் பேப்பரை எடுத்து அதை சரிபாதியாக மடிக்கவும். [□ → □] பின் மடித்த வெள்ளை மேற்புறத்தில் □ பாதி இலையில் ஓரம் போல் outline வரைந்து படத்தில் உள்ளது போல் இலை, கொடி வரையவும் பென்சிலால். கோடுகள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டு இருத்தல் அவசியம். நடுபாகமும் கோடுகளால் இணைக்கப் பட்டால்தான் வெட்டும் போது சேதமடையாமல் இருக்கும். இப்போது மடித்த பேப்பரை கெட்டியாகக் கையில் பிடித்துக் கொண்டு கத்தரிக்கோலால் கவனமாக, கோடு மீது வெட்டி, பின்பு பிரித்தால் அழகான, டிசைன் கொண்ட படம் கிடைக்கும். இதை போஸ்ட் கார்டிலோ அல்லது வெள்ளை அட்டையிலோ ஒட்டி, வாழ்த்துக்கள் தயாரிக்கலாம். சிறிது கற்பனை வளம் கொண்டு எண்ணற்ற டிசைன்கள் உருவாக்கலாம். செலவு மிகவும் குறைவு. வித்யாசமான வாழ்த்து அட்டையாகவும் இருக்கும்.



இன்னும் சில டிசைன் களும் உங்களுக்காகக் கொடுக்கப்பட்டுள்ளது :

— மாலா இராமச்சந்திரன்



# வாஸ்து எனும் புதையல்

பி.ஜே. ரவிராஜ்

கடந்த இதழில் அடுக்குமாடி கட்டிடங்களையும் அதை எப்படி மாற்றிக் கொள்வது என்றும் பார்த்தோம். இந்த இதழில் வீட்டை ஏன் சதுரமாகவோ, செவ்வகமாகவோ கட்ட வேண்டும் என்பதனை பார்ப்போம். நான் கடந்த பல இதழ்களில் எழுதியது போல், இந்த பூமியும், அண்ட சராசரங்களும் இயற்கையின் சக்திகளாலும், பல நல் அதிர்வுகளாலும் நீக்கமற நிறைந்திருக்கின்றது. இதை ஆங்கிலத்தில் Cosmic Energy மற்றும் Cosmic Vibration என்றும் கூறுவார்கள். இந்த இரண்டு சக்திகள் இயற்கையில் இணைந்து பல சக்திகளை இந்தப் பூமியில் கொடுக்கின்றது. அதில் ஒன்றுதான் காந்த சக்தியாகும். இதே காந்த சக்திதான் மனிதன் முதல் ஜடப் பொருள் என்று நாம் கூறிக் கொள்ளும் கட்டிடம் முதலான அனைத்திலும் வியாபித்து இருக்கின்றது. இது செவ்வகமாகவோ அல்லது சதுரமாகவோ இருக்கும் இடத்திற்குச் சரியான நல் விளைவுகளைத் தருவதாக சாஸ்திரம் என்ற பெயரில் இந்த இயற்கை விஞ்ஞானம் நமக்குக் கூறுகின்றது.

நாம் வீட்டைக் கட்டுவதற்கான இடத்தைத் தேர்வு செய்வது மிக மிக முக்கியமாகும். வீட்டிற்குச் சுற்றுச் சுவர் (Compound Wall) மிக அவசியமானது. நாம் வீடுகட்ட உத்தேசித்திருக்கும் இடத்தின் மையப் பகுதிக்குச் சென்று அதன் அனைத்துத் திக்குகளும் நம் மனைக்கு சரியாக இருக்கின்றதா என்பதனை திசை காட்டும் கருவியின் வாயிலாக அறிந்து அதன்படி வீட்டைக் கட்ட வேண்டும். இடத்தின் திசைகளை நன்றாக உறுதி செய்த பின்னர் கட்டிடங்களை எப்படிக் கட்ட வேண்டும் என்று வாஸ்து சாஸ்திர ஆலோசகர்களின் வழிகாட்டுதல்படி அமைப்பது மிகச் சிறந்ததாகும். தேர்ந்தெடுத்த மனையும் கூட சதுரமாகவோ அல்லது நீண்ட சதுரமாக ஒரு குறிப்பிட்ட வரையறுக்கப்பட்ட அளவில் அமைய வேண்டும். அளவிற்கு அதிகமாக இயற்கை விதிகளை மீறி பெரியதாகவோ, நீண்டதாகவோ கட்டப்படும் வீடுகள் பொலிவிழந்து போவதை காலம் நமக்குப் பல இடங்களில் பாடமாகக் காட்டுகின்றது. சிறுகக் கட்டி பெருக வாழும் வாழ்க்கை முறையை நாம் நன்கு உணர்ந்து எல்லாவிதமான பூரண ஆற்றல் பெற்ற மனிதனாக வாழ வேண்டும்.



கீழ்கண்ட வரைபடங்களின் வாயிலாக நாம் சற்று தெளிவு பெறலாம்.

A. இந்த வரைபடத்தில் உள்ள மனையும். வீடும் காந்த திசைக்கு சரியாக கட்டப்பட்டுள்ளது. இப்படி கட்டப்பட்ட இடத்தின் வீடும் வாஸ்து கூறும் திசைக்கு ஏற்ப அமைந்துள்ளதால் இந்த இரண்டுமே இணையாக அமைந்திருப்பதால், மனிதனுடைய வாழ்க்கை எல்லா வகையிலும் சீரும் சிறப்புள்ளதாகவும் அமையும். இதில் வசிப்பவர்கள் சர்வ சுகங்களையும் பெற்று நல்ல ஆரோக்கியத்துடன் பெரு வாழ்வு வாழ்ந்திருக்கின்றனர் என்பது பல ஆராய்ச்சிகளும், அனுபவங்களும் நமக்குக் காட்டுகின்றன. இடமும்,



வீடும் சதுரமாகவோ நீள் சதுரமாகவோ அமைந்து விட்டால் எல்லா திசைகளின் சக்தி களும் சம விகித அளவில் வியாபித்துத் தாமா கவே நாம் அறிந்து கொண்டாலும் இல்லாமல் போனாலும் அதன் பலனை கொடுத்துக் கொண்டே இருக்கும்.

B. இந்த இடம் காந்த திசைக்குச் சரியா கவும், வீடு வாஸ்து திசைக்கு எதிராகவும் அமைந்துள்ளது. இன்றைக்கு அழகு என்கின்ற பெயரில் இஷ்டம் போல் தேவையற்ற இடங் களில் வளர்த்தும் நீட்டியும் கட்டப்படும் வீடு களில் மக்கள் படும் தொல்லைக்கு அளவில் லாமல் போய் விட்டது.

C. இந்த இடம் காந்த திசைக்கு எதிராகவும், வீடு வாஸ்து திசைக்கு எதிராகவும் அமைந் திருப்பதால் இப்படிப்பட்ட வீட்டில் வசிப்பவர் கள் வாழ்க்கையில் தொல்லைகள் நேரும். தனக்கு இப்படி ஏன் துன்பங்கள் ஏற்படுகின் றது என்பதனை கூட அறிந்து கொள்ள முடி யாமல் இருப்பார்கள்.

நான் பெற்ற பல அனுபவங்களே இதில் என்னை அதிகமாக சிந்திக்கச் செய்து மக்கள் படும் துன்பங்களை அவர்களை உணர வைத்து அவர்களுக்குள் மாற்றங்களை இந்த இயற்கை விஞ்ஞானத்தின் வாயிலாக தெளிவு பெறச் செய்ய வேண்டும் என்கின்ற தீராத தாகம் என் னுள் எப்பொழுதும் எரிந்து கொண்டே இருக் கின்றது. சமீபத்தில் நான் இலங்கையில் உள்ள கொழும்பு நகரில் பார்த்த அநேக பெரிய கட்டி டங்கள் மற்றும் தொழிற்சாலை மற்றும் வீடுகள் நான் மேலே குறிப்பிட்டது போல் இருப்பதைக் கண்டு மனம் வெதும்பினேன். அங்கே தனி மனிதனின் வளர்ச்சி பாதிப்பினால் பொருளா தார சீர்குலைவுகள் ஏற்படுவதை உணர்ந்தேன்.

மேற்கூறிய அனைத்தும் வீட்டிற்கு மட்டும் அல்லாமல் தொழிற்சாலைகள், தொழிற் கூடங்கள், வியாபாரஸ்தலங்கள் அனைத்திற் கும் பொருந்தும். இந்த இயற்கை விஞ் ஞானத்தை மனதில் கொண்டு நம்முடைய கட்டுமானங்களில் நாம் கவனம் செலுத்தினால் நம்மை நாம் பேரழிவிலிருந்து காத்துக்கொள்வ துடன் சொர்க்கத்தின் கதவைத் தட்டுபவர் களாக நம்மை நாம் மாற்றிக் கொள்ள முடியும்.

நான் மேலே கூறிய கருத்துக்களை கீழ் கண்டவாறு வரிசைப்படுத்தியுள்ளேன்.

1. வீட்டின் வாஸ்து திசைகள் தவறாமல் இடத்தின் காந்த திசையுடன் பொருந்தி இருக்க வேண்டும்.

2. வீட்டின் காலி மனையும், நாம் கட்டு கின்ற வீடும் சதுரமாகவோ அல்லது நீள் சதுர மாகவோதான் இருக்க வேண்டும்.

3. வீட்டை அரை வட்டம், வட்டம், எண் கோணம், அறுகோணம் போன்று கட்டக் கூடாது.

4. காலி மனையை காந்த திசைகளைக் கொண்டு சரி செய்த பின்பே கட்டுமானங் களைத் தொடங்க வேண்டும்.

5. சுற்றுச் சுவர் கட்டிய வீடே சிறந்த வீடா கும்.

6. வீட்டின் தெற்குச் சுவரும், மேற்குச் சுவரும் கனமானதாக அமைக்க வேண்டும்.

7. சுற்றுச் சுவரில் அவசியம் இரண்டு கேட்டுகளை அமைக்க வேண்டும்.

8. தெற்கையும், மேற்கையும் பார்த்த வீட் டிற்கு அவசியம் முன் கதவிற்கு நேர் எதிரில் கொல்லைப்புற கதவு அமைக்க வேண்டும்.

9. வீட்டின் வடக்கிலேயும், கிழக்கிலேயும் சாலை அமைவது மிகவும் சாலச் சிறந்தது.

10. உயரமான மலைகளோ, மரங்களோ தெற்கிலும் மேற்கிலும் வரும்படியாக செய்து கொள்வது சிறந்தது.

11. கூடிய வரை அடி நிலை அறைகளை தவிர்ப்பது மிகச் சிறந்தது.

12. துளசிச் செடிகளை வடகிழக்குத் திசை களில் வைப்பது மிகச் சிறந்தது.

13. வீட்டை விரிவு படுத்தும் பொழுது தெற் கிலும், மேற்கிலும் மட்டுமே விரிவு படுத்த வேண்டும்.

14. உணவு அருந்தும் பொழுது மேற்கில் அமர்ந்து கிழக்கை நோக்கி அருந்த வேண்டும்.

மேலும் ஐயங்கள் தெளிவு பெற சென்னை யில் ஒன்றாந் தேதி முதல் ஐந்தாம் தேதி வரை தொ. பே. 8540084 லும், மற்ற நாட்களில் கோவையில் 577907 எனது இல்லத்திற்கும் தொடர்பு கொள்ளலாம்.

**வடாம் துணியில் பிழிந்து வெயிலில் காய வைக்கிறோம். அதை எடுக்க துணியின் பின் புறம் தண்ணீர் தெளித்து சிரமப்பட வேண்டிய இல்லை. குளிர்சாதனப் பெட்டியில் ஒரிரு மணி நேரங்கள் வைத்திருந்து பின்பு எடுத்தால் மிகச் சுலபமாக வந்துவிடும். (பிளாஸ்டிக் ஷீட்டுகளில் வைப்பவர்கள் இருக்கலாம். அப்படி இல்லாது துணியில் வைப்பவர்களுக்கு இது உதவும்.)**

**— லலிதா**



# "முகமூடி..."

"முகமூடி
வாங்கித்தா..."
பொருட் காட்சியில்
மகளின் அழுகை.
புலி முகமூடி மாட்டி -
"அம்மா... புலி வருது..."
பாய்ந்து வந்து
பயமுறுத்தினாள்.
நம்முடைய
அருவ முகமூடிகள்
அவளுக்குத்
தெரியவில்லை.

வைரமூக்குத்தி வாங்கின
பக்கத்து வீட்டுக்காரியை
ஜென்மப் பகையாய்
மனசு நினைக்கும்.
'மூக்குத்தி
அம்சமாயிருக்கே....'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

மாருதி வாங்கி
'ஸெல்ப் ட்ரைவிங்'
செய்யும்
வீட்டுக்கார மாமி -
'லாரியில் மோத....'
மனசு நினைக்கும்.
'நல்லாக் கார்
ஓட்டறீங்களே....'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

சொந்த வீடு கட்டின
அண்ணி
'நாசமாய்ப் போக'
மனசு நினைக்கும்.
'வீடு - அம்சமா இருக்கு.
அமோகமா வாழணும்....'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

ஐந்து கிரவுண்ட்
நிலம் வாங்கின
அலுவலக நண்பரை -
'ஊழல் கேஸில
உள்ளே தள்ளணும்.....
மனசு நினைக்கும்.
'புத்திசாலி ஐடியா...
நல்ல இடம் அது....
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

தீபாவளிக்கு
நாத்தனார் பட்டுப்புடைவை
'வெடிபட்டுப் பொசுங்க....'
மனசு நினைக்கும்.
'கெட்டி ஜரிகை
நல்லாயிருக்கு...'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

உறவுப் பையன்
தேர்வில் தோற்க -
'நல்லா வேணும்...'
மனசு நினைக்கும்.
'அடுத்த தரம்
பார்த்துக்கலாம்.'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

அழையா விருந்தாளி
உள்ளே நுழைந்தால்
'தண்டச் சோறு...'
மனசு நினைக்கும்.
'சாப்பிட வாங்க....'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

கோடை விடுமுறைக்கு
வரும்
மச்சினர் குடும்பத்தை
'தண்டச் செலவு'
மனசு நினைக்கும்.
'லீவுமுழுசும்
இங்கேதான்....'
முகமூடி போட்டுப்
புன்னகை பேசும்.

முகமூடி
போட்டுப் போட்டுச்
சுயமுகம் மறந்து
போச்சு...

நம் முகமூடி
பொசுங்குவது
சிதை நெருப்பில்தான்.

அதனால்தான் -
சடலங்கள்
அழகாயிருக்கின்றன.

— ஆண்டாள்
பிரியதர்ஷினி

# ஆராய்ச்சிக்காக (FOR RESEARCH)

1960க்கு பின் 1977 வரை அறுவை சிகிச்சை மூலம் பிறந்த குழந்தைகளின் பிறந்த தேதி, மருத்துவமனையின் பெயர், குழந்தையின் பெயர் ஆகியவை ஆராய்ச்சிக்கு தேவைப்படுகிறது. விரும்பமுள்ளவர்கள் தபால் மூலம் மட்டும் தெரியப்படுத்தவும். தேவையான நேரத்தில் எங்களது ஆராய்ச்சி நிறுவனத்தின் மூலம் கடிதம் மூலம் தொடர்பு கொள்ளுவோம்.

**மங்கையர் மலர் மார்ச் இதழில்**
**சரிபார்க்க வேண்டிய பக்கம் 138, 140, 141.**

| Name of the Newspaper | தவறு X | சரி ✓ |
|---|---|---|
| NAGPUR TIMES<br>LOKMAT TIMES<br>SUN TIMES<br>NATIONAL MAIL<br>THE SENTINEL | 1991 | •15.12.1991<br>23.11.1991<br>1.12.1991<br>1.12.1991<br>11.1.1992 |
| HINDUSTAN TIMES (PATNA) | 27.2.1992 | 27-7-1992 |
| GUIDE INDIA | 1.9.1994 | March '94 |
| T. RAJENDRA NIN USHA<br>(Tamil Weekly) 18-24/4/95 (This weekly released in 18-4-94 in Madras) | 18.4.1994 | 18.4.1995 |



**ANTHRO BIOMATRIC RESEARCH AND DEVELOPMENT CENTRE**

Tel : 091-044-4937482 Fax : 091-044-4952705 P.O. Box No : 5099 Chennai - 600 028

Visit Our Home Page : **http : //www.Kode.net/~foresee/fractals/**

# பின்னி, பெங்களூர்

## சென்னைக்கு வழங்குகிறது முதல் பிரத்யேக தூய பட்டு புடவைகளின் கலைக்கூடத்தை!

மிகச் சிறந்த கோல்ட் லேஸ் அணிவரிசைகள் சாஃப்ட்சில்க், ஜார்ஜெட்ஸ், சிபான் மற்றும் பிரிண்டட் வகைகள் எண்ணற்ற புதிய வண்ணங்களில். மேலும் பட்டு வேஷ்டிகள், அங்கவஸ்த்ரம் மற்றும் ஸ்பன் சில்க் ரகங்களும் கிடைக்கும். காசி ஆர்கேடில் வாங்கி, அணிந்து மகிழ வருகை தாருங்கள்.



மறவாதீர்... உங்கள் பரிசையும் பெறுங்கள்
பரிசு குலுக்கல் கூப்பனையும் பூர்த்தி செய்யுங்கள்!

அறிமுகச் சலுகை **20%** தள்ளுபடி

*தமிழ் புத்தாண்டு தினம் வரை

# BINNY

பிரத்யேக பட்டுப்புடவைகளின் கலைக்கூடம்
காசி ஆர்கேட் (அடித்தளம்)
போக் ரோடு ஜங்க்ஷன்,
பாண்டி பஜார், தி. நகர், சென்னை – 17.

SUNDAY OPEN

Diners Club







இன்றைய பட்டு இன்றைய பெண்மணிகளுக்கு

BRIGHT ADVERTISING

* திரு தீபக் ஃபரேக்



## சேமியுங்கள், பயப்படாமல்....

**(இந்த மாதம் — விடுகட்ட கடன் தரும் நிறுவனங்கள் பற்றி)**

"வீட்டைக் கட்டிப்பார்! கல்யாணம் பண்ணிப் பார்!" என்று சவால் விடுவது பழைய மொழி. "கடன் வாங்கியாவது வீட்டைக் கட்டி விடு!" என்று குடும்பஸ்தர்களைத் தூண்டுவது இன்றைய புதுமொழி. அளவான வீடானாலும் அழகான அமைப்புடன் முன்னால் வரவேற்பறை - பிறகு சமையலறை - காற்றோட்டமான படுக்கை அறை - படிக்கும் அறை என்று விதவிதமாகத் திட்டம் தீட்டி, வீடு அல்லது ப்ளாட்டை கட்ட விரும்பாதவர் யார்?

மொத்தமாகப் பணம் போட்டு, பெரும் முதலீட்டில் இதைச் சாதிக்க முடியாதவர்களுக்கென கை கொடுக்கின்றன எளிய தவணை முறையில் எட்டக் கூடிய வட்டி விகிதத்துடன் கடன் கொடுக்கும் அமைப்புகள். இப்படிப்பட்ட அமைப்புகளும் பொது மக்களிடம் டெபாசிட் வாங்குகின்றன. இவர்களிடம் டெபாசிட் செய்வது பாதுகாப்பானதா எனக் கேட்கலாம்....

கம்பெனி சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்யப்பட்டு, வீடு கட்டுவதற்காகவே கடன் உதவி செய்து வரும் நிறுவனம். 'ஹவுசிங் - டெவலப்மெண்ட் பைனான்ஸ் கார்ப்பரேஷன்' (H.D.F.C.). அவர்கள் அளிக்கும் உதவி எத்தகையது. குறிப்பாக மக்கள் செலுத்தும் டெபாசிட் அவர்களிடம் பாதுகாப்பாக உள்ளதா போன்ற சந்தேகங்களுக்கு அந்த நிறுவனத்தின் சென்னை கிளை அதிகாரி திரு மாத்யூ ஜோஸப் அளித்த விளக்கங்கள் சில :

# எல்லோருக்கும் எட்டும் வீட்டு வசதி



• திரு. ஜோஸப்

**கேள்வி : வீடு கட்ட விரும்பும் மக்களுக்கு உதவ வரும் உங்கள் நிறுவனம் போன்றவை தனியார் கம்பெனிகளா? அல்லது அரசாங்கப் பின்னணியுடன் இயங்குபவையா?**

வீடு கட்ட வசதி செய்யும் நிறுவனங்களில் சில அரசாங்கப் பின்னணி கொண்டவை. சில தனியார் கம்பெனிகளாக விளங்குகின்றன. எங்கள் நிறுவனம் 1977-ம் ஆண்டு திரு ஹெச். டி. பரேன் என்ற தனி மனிதரால் ஆரம்பிக்கப் பட்டதுதான். இருப்பினும் ஐ.சி.ஐ.சி.ஐ (I.C.I.C.I) ஐ.எப்.சி. (I.F.C) உலக வங்கி (World Bank) மற்றும் ஆகாகான் ஆகியோரின் நிதி உதவி கொண்டுதான் ஆரம்பிக்கப்பட்டது.

**கேள்வி : அரசாங்க நிறுவனங்கள் இருந்த நிலையில் இத் தனியார் நிறுவனங்களை மக்கள் எவ்வாறு நாடுகின்றனர்?**

எல்.ஐ.சி., ஜி.ஐ.சி போன்ற அரசாங்க நிறுவனங்கள், அவர்களின் மற்ற கடனுதவிகளுடன் வீடு கட்ட கடனளிக்கும் வசதியை ஒரு அங்கமாகக் கொண்டுள்ளனர். மேலும் அதைப் பெற கடன் வாங்குபவர் பாலிஸி எடுக்க வேண்டிய அவசியம் உண்டு. ஆனால் இத்தகைய நிபந்தனைகள் எதுவுமின்றி கடனளிக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் தொடங்கப்பட்டவையே எங்களைப் போன்ற நிறுவனங்கள். நிர்பந்தம் எதுவுமில்லை என்பதால் மக்கள் எங்களிடம் கடன் பெற முன் வருகின்றனர். மேலும் நிறுவனத்தின் நிதி முப்

## பொன்மொழி

*** எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருப்பவர்களுக்கு, பயப்படுவதற்கு நேரம் இருப்பதில்லை.**

**— பைரன்**

**தகவல் : வி. பரமசிவம்**

பத்தி இரண்டு சதவிகிதம் பொது மக்களிடமிருந்தும் மீதமுள்ளவை பெரிய வங்கிகள், இன்சூரன்ஸ் கம்பெனிகள், ம்யூசுவல் பண்டுகள், பெரிய கம்பெனிகள், வெளிநாட்டு வங்கிகளிடமிருந்தும் பெறப்படுவதால், அதிக அளவு தொகை எங்களைப் போன்ற நிறுவனங்களால் எளிதாக அளிக்கப்படுகிறது.

**கேள்வி : மக்களிடம் இருந்து பெறப்படும் தொகைக்கு வட்டி எவ்வாறு அளிக்கிறீர்கள்? மக்களுக்குக் கடன் அளிக்கும் தொகைக்கு வட்டி எவ்வாறு விதிக்கிறீர்கள்?**

பொது மக்கள் எங்களிடம் முதலீடு செய்யும் தொகைக்கு மற்ற நிதி நிறுவனங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது, எங்களைப் போன்ற நிறுவனங்கள் அளிக்கும் வட்டி குறைவானது தான். ஆனால் நாங்கள் பொது மக்களுக்கு அளிக்கும் நம்பிக்கை, முதலீட்டிற்குக் கிடைக்கும் உத்திரவாதமே. இதுவே மக்களை எங்களிடம் ஈர்க்கிறது. மேலும் முதலீடு செய்யப்பட்டுள்ள தொகை திரும்ப வேண்டுமென்றாலும், அதன் மீது கடன் வேண்டுமென்றாலும், பதினைந்தே நிமிடங்களில் திருப்பி அளிக்கப்படுகின்றது. இதனாலேயே பொது மக்களிடம் இருந்து பெறப்பட்ட டெபாசிட் தொகை மட்டும் கடந்த ஓராண்டில் நான்காயிரத்தி ஐநூறு கோடியாக உயர்ந்துள்ளது.

இத்தனை நிதி வசதியிருந்தும், முதலீடு நிறைய இருந்தும் நாங்கள் அளிக்கும் வட்டித் தொகை ஏன் குறைவாக உள்ளதென நீங்கள் நினைக்கலாம். அதற்கு வீடு கட்ட கடனாக நாங்கள் அளிக்கும் தொகைக்கு வசூலிக்கும் வட்டியும் மிகக் குறைவாக உள்ளதே காரணம். பணத்தைக் குறைந்த வட்டிக்குக் கடனளிக்கும் போது முதலீடு செய்யப்படும் தொகைக்கு அதிக வட்டி தர இயலாது அல்லவா?

**கேள்வி : குறைந்த வட்டி அளிக்கும் போது, மக்களை முதலீடு செய்ய வைப்பதற்கென ஏதேனும் கவர்ச்சிகரமான, லாபகரமான திட்டங்கள் வைத்துள்ளீர்களா?**

எங்களைப் போன்ற நிறுவனங்கள் வீடு கட்ட கடன் தந்து உதவுவதால், ரிசர்வ் வங்கி எங்களுக்கென ஒரு தனிச் சலுகை அளித்துள்ளது. வேறு எந்த வித வருவாயோ, வேறு எந்த முதலீட்டிலிருந்து வட்டித் தொகையாக வருவாயோ இல்லாவிடில் எங்கள் நிறுவனத்தில் சுமார் எழுபத்தி ஏழாயிரம் முதல் எண்பதாயிரம் வரை முதலீடு செய்து, வட்டியை வருமான வரி பிடித்தமில்லாமல் முழுத் தொகையாகப் பெறலாம். இச்சலுகையை மற்ற நிதி நிறுவனங்கள் அளிக்க இயலாது. அதே போல் டெபாசிட்டாக எங்களிடம் முதலீடு செய்யப்படும் தொகையில், மூன்று மாத காலத்திற்குப் பிறகு கடன் தேவையானால் பெறலாம். இம்முறை எங்களைப் போன்ற நிதி நிறுவனங்களால் பின்பற்றப்படுகிறது.

பெண்மணிகள் சேமிப்பதை ஊக்குவிக்கும் மனத்துடன் எங்கள் நிறுவனம் ஒரு திட்டம் தீட்டியுள்ளது. இதற்கு 'எளிய முறையில்

---

**இட்லிப் பொடி தீர்ந்துவிட்டதா? அவசரத்திற்கு திடீர் இட்லிப் பொடி உடனே தயார்! பொட்டுக் கடலை அல்லது வறுத்த நிலக்கடலையை கரகர வென்று (மிக்ஸியிலிட்டு/அம்மியில்) பொடித்துக் கொள்ளவும். தேவையான அளவு மிளகாய்த்தூள் (சாம்பார் பொடி) உப்பு கலந்தால் திடீர்ப் பொடி ரெடி! தேவையெனில் பூண்டினை நான்கு பற்கள் எடுத்து அம்மியில் வைத்து நசுக்கி, துளி எண்ணெய் விட்டு (தாளிக்கும் கரண்டியில்) வறுத்து எடுத்து பொட்டுக் கடலையை பொடிக்கும் போது சேர்த்து விட்டால், சுவையும் மணமும் அலாதிதான்! பிறகு திடீர்ப் பொடிதான் நிரந்தரப் பொடி!**

**— ஹேமலதா**



# ஆத்ரேயா

## ரெடிமேட் ரவிக்கைகள்

**IMMEDIATE EFFECTIVE CHANGE IN YOUR PERSONALITY**



மேனேஜர் : ஏம்மா அனிதா! ''ஆத்ரேயா கார்மெண்ட்ஸ்'' போலாம்னு சொல்லிட்டு இப்படி ஊரப்பாக்கத்திலே வந்து நிக்கறயே... உனக்கு கரெக்ட் அட்ரெஸ் தெரியுமா!! தெரியாதா?!

அனிதா : கொஞ்சம் பொலம்பாம இருங்க ஸார்!! உங்களோட பெரிய பாடா போச்சே. நான்தான் ''ஆத்ரேயா கார்மெண்ட்ஸ்'' நுங்கம்பாக்கத்திலே இருக்குன்னு சொன்னா நீங்க இப்படி வழி தெரியாம ஊரப்பாக்கத்திலே வந்து நின்னா! நானா பொறுப்பு!! வண்டியை திருப்புங்க ஸார்.

- ''ஆத்ரேயா கார்மெண்ட்ஸ்'' நுங்கம்பாக்கம் வள்ளுவர் கோட்டத்திற்கும், நுங்கம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்கும் நடுவிலே இருக்கு. **9, 10, 17E, 17K, 25, 26, 37, 37G, 37D, 47, 47A, & 47D** இப்படி எல்லா பஸ்ஸும் போற வழிதான்.
- ''ஆத்ரேயா கார்மெண்ட்ஸ்'' கடைக்குள் நுழையும் போது (மேனேஜருக்கு அவருடைய ஆபீஸிலிருந்து செல்லுலார் ஃபோன் வருகிறது).
- ஹலோ! ஏம்பா வெங்கடாச்சாரி!! நீ இப்ப எங்க இருந்து பேசறே?
- ''ஆத்ரேயா கார்மெண்ட்ஸி''லிருந்து ஸார்....''
- ''அது ரெடிமேட் ரவிக்கை கடையாச்சே!! அங்க உனக்கு என்னய்யா வேலை?!

(தொடரும்)

**ஆமாம்! ஆசியத் தமிழ் வாழ் மக்கள் விரும்பி அணியும் ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் உங்கள் தோற்றத்தில் ஓர் அழகிய மாற்றம் உடனடியாக.**

## 10% சிறப்பு தள்ளுபடி

**தமிழ் - தெலுங்கு - கேரள வருடப் பிறப்பு மற்றும் பக்ரீத் பண்டிகையை முன்னிட்டு**

**ஏப்ரல் 1 முதல் 14-ம் தேதி வரையில்**

**வாடிக்கையாளர்களின் வருகையே எங்கள் முதலீடு....**
**வாடிக்கையாளர்களின் திருப்தியே எங்கள் லாபம்....**

## ATHREYA GARMENTS A/c

வள்ளுவர் கோட்டம் நெடுஞ்சாலை (ஹோட்டல் சப்பாத் எதிரில்)
நுங்கம்பாக்கம், சென்னை - 600 034 Ph: 8226586 Fax : 8276031, 560076

வேலை நேரம் : 10.00 முதல் இரவு 8.00 வரை. ஞாயிறு விடுமுறை



**நாம் நமது வீட்டில் உபயோகித்த குழந்தைகளின் துணிமணிகள் விரைவில் சிறியதாகி போட முடியாமல் ஆகிவிடும். அந்த கவுன்கள், சட்டைகள் முதலியவை பாத்திரக்காரர்களும் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். அவற்றையெல்லாம் சேர்த்து வைத்து ஸ்டேஷன், கோவில் போன்ற இடங்களில் காணப்படும் ஏழைக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.**

**— கே. லலிதா**

சேமிப்பு' என்று பெயர். இதில் பன்னிரெண்டு மாதங்கள் முதல் பதினெட்டு மாதங்கள் வரை மாதாமாதம் சேமிக்கலாம். முதலில் ஆயிரம் ரூபாய் தொகையைச் செலுத்தி சேமிப்பைத் தொடங்கினால், பிறகு மாதாமாதம் ஐநூறு ரூபாய் செலுத்தி வரலாம். இத்தொகைக்கு வங்கிகளை விட அதிகமாக பதினொன்றரை சதவிகிதம் (11.5%) வட்டி அளிக்கப்படுகிறது. இவ் வரிய திட்டம் மூலம் விடுமுறை செலவு, பள்ளி தொடக்க கால செலவு, அவசர மருத்துவச் செலவு போன்றவற்றை சிரமமின்றி மேற் கொள்ளலாம்.

**கேள்வி : பொதுவாக வீடு கட்ட கடன் தரும் உங்களைப் போன்ற நிறுவனங்கள் மூலம் கடன் வாங்க மக்கள் என்னென்ன பத்திரங்களை சமர்ப்பிக்க வேண்டும்?**

திரு ஜோஸப் : பொது மக்கள் பணத்தி லிருந்து கடன் தரப்படுவதால், கடனை எளி தாகத் தந்தாலும், தக்க ஆதாரங்கள் வைத் திருக்க வேண்டியது மிக அவசியம். வீடு கட்டப்படப் போகும் நிலத்தின் அசல் பத்திரம், பட்டா, என்கம்பரன்ஸ் சான்றிதழ், பொறுப் பேற்று சாட்சி கையெழுத்திட ஒரு நபரின் உத்திரவாதம், வீடு கட்ட உரிய முறையில் ஒப்புதலளிக்கப்பட்ட ப்ளான் ஆகியவை இருக்க வேண்டும். அடுக்குமாடி கட்டிடத்தில் ஒரு ப்ளாட்டை வாங்குவதானால் வீடு கட்டித் தரும் நிறுவனத்திடமிருந்து மேலே கூறிய பத்திரங்களைப் பெற்றுத் தரலாம். மேலும் அந் நிறுவனத்திடமிருந்து எங்கள் நிறுவனத்திற்கு ஒரு கடிதமும் தரப்பட வேண்டும். அதோடு சாட்சி கையெழுத்திட பொறுப்பேற்பவர்கள் இருவர் இருக்க வேண்டும். இவை அனைத் திற்கும் மேலாக வாங்கும் கடனை திருப்பி யளிக்க தகுதியுள்ளவர் என்று நிரூபிக்க, சம்பளச் சான்றிதழை சமர்ப்பிக்க வேண்டும். இப்பத்திரங்கள் கடன் முழுவதும் அடையும் வரை எங்களிடமே பத்திரமாக வைக்கப்பட் டிருக்கும்.

**கேள்வி : வீடு கட்டுவதைத் தவிர வேறு எதற்காவது கடன் அளிக்கிறீர்களா?**

திரு ஜோஸப் : நீங்கள் ஏற்கெனவே கட்டிய வீட்டை பெரிதுபடுத்த விரும்பினாலோ, மாடி கட்ட நினைத்தாலோ, புதிதாக டைல்ஸ் போட, கிரானைட் ஸ்லாப் போட, வீட்டிற்கு பெயின்ட் அடிக்க, பிளம்பிங் எலக்டிரிகல் வேலை செய்ய முற்பட்டாலோ இவற்றிற்கும் கடன் அளிக்கிறோம். சிலருக்கு தாம் இருக்கும் வீடு சிறியதாகவோ, பழைய மாடலில் உள்ள தாகவோ தோன்றலாம். புதிய வீடு வேறு வாங்க வேண்டுமானால் இருக்கும் வீட்டை விற்ற பிறகே வாங்க முடியும். இத்தகையோருக்கு எங்களிடம் ஓர் திட்டம் உள்ளது. அதில் பழைய வீட்டில் இருந்து கொண்டே புது வீடு வாங்க கடன் அளிக்கிறோம். புதிய வீட்டிற்குச் சென்றுவிட்ட பிறகு பழைய வீட்டை விற்றுக் கடனைத் திரும்ப அளிக்கலாம். இதற்கு இரண்டு வருட தவணை தருகிறோம். மேலும் எங்கள் நிறுவனத்துடன் கூட்டணி அமைத் துள்ள சில நிறுவனங்கள் மூலம் தொலைகாட்சி பெட்டி போன்ற வீட்டுக்குத் தேவையான சாதனங்கள் வாங்க கடனளிக்கிறோம்.

**கேள்வி : கடன் வாங்குபவர் நீங்கள் அளிக்கும் தொகை போதாவிடில் வேலை செய்யும் கம்பெனி மூலமும் கடன் பெற லாமா?**

திரு ஜோஸப் : தாராளமாக! அவர்களது நிறுவனம் அதற்கு ஒப்புக் கொண்டால் இரண்டு இடங்களிலும் கடன் பெறலாம்.

**பொன்மொழி**

*** நம்மை வெறுப்பவர்கள் பகைவர்கள் அல்ல. நாம் வெறுப்பவர்களே பகைவர்கள் ஆகிறார்கள்.**

**- டேகா பெர்ட்ருன்ஸ்**

**தகவல் : வி. பரமசிவம்**



## கடலங்குடியின் ஸ்ரீமத்பாகவதம் - 7 வால்யூம்கள்
## தமிழ் புத்தாண்டை முன்னிட்டு 15% சிறப்புத் தள்ளுபடியில்

புராணங்களிலேயே மனத்தால் நினைத்த உடனேயே மனதை உருக்கி நம்மைப் பரவச மூட்டுவது "ஸ்ரீமத் பாகவதம்". 1931லேயே இதை ஸ்ரீநாராயணீயத்துடன் ஸ்ரீதரியவம்சீதரிய வ்யாக்யானங்களைத் தழுவி, முதன்முதலில் வெளியிட்டு அன்றும், இன்றும், என்றும் பலராலும் வெகுவாகப் பாராட்டப்பட்டவர் கோபால தத்துவ ரசதாமணி **பிரும்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகளாவர்.**

**63 ஆண்டுகளுக்குப் பின் இரண்டாவது பதிப்பாக 4200 பக்கங்கள் கொண்ட இந்த அரிய நூலின் 12 அத்யாயங்களும் 7 வால்யூம்களாக, ஆப்செட்டில் பதிப்பித்த 1 செட்டின் விலை ரூ.900 /- ஆகும். அவற்றில் முதல் வால்யூம் ரூ.100 /- இரண்டாவது வால்யூம் ரூ.150 /- மூன்றாவது ரூ.125 /- நான்காவது ரூ.100 /- ஐந்தாவது ரூ.125 /- ஆறாவது ரூ.150 /- ஏழாவது ரூ.150/- வெளிவந்து விட்டன.**

முழுசெட் வேண்டுபவர் **முன்பணமாக ரூ.765 /- (15% சிறப்பு சலுகை தள்ளுபடி போக) தபால் செலவு ரூ.50 /- சேர்த்து ரூ.815 /-** "Kadalangudi Publications" என்ற பெயருக்கு டிராப்ட்டோ (or) M.O. அனுப்பி Regd Postல் பெறவும். இச்சலுகை **தமிழ் புத்தாண்டை முன்னிட்டு (17.4.97வரை) தான் உண்டு.** உங்கள் ஊர் புத்தகக் கடைகளில் இச்சலுகையில்லாமல் பெறலாம். சொற்ப காபிகளே அச்சிட்டுள்ளதால் தேவைக்கு முந்துவது நலம். எமது இதர English / தமிழ் புத்தகங்களுக்கு **தமிழ் புத்தாண்டை முன்னிட்டு (17.4.97) வரை 10% சிறப்புத் தள்ளுபடி உண்டு.** கேட்லாக்கிற்கு ரூ.2 /- Stamp அனுப்பவும்.

**பி.கு: காடகோப நிஷத் ரூ.50 /- ஈச,கேன உபநிஷத் ரூ.55 /- தைத்திரீய உபநிஷத் ரூ.110/- வெளிவந்து விட்டன. 15 % தள்ளுபடி + Regd. Postல் பெற ரூ.205/- மட்டும் DD (or) M.O அனுப்பவும்.**

**Kadalangudi Publications**
**38, Natesa Iyer Street,**
**(Near T.Nagar Bus Stand) Madras - 600 017.**



## "கடலங்குடி"யின் தபால்வழி ஜோதிடப் பாடங்கள்
## ENGLISH/தமிழ்

ஜோதிட கலாநிதி **டாக்டர் (ஸ்ரீமதி) கே.என்.சரஸ்வதி** கல்வித் தகுதிகளையும், ஜோதிடத் துறையில் சுமார் 50 ஆண்டுகளாக ஆற்றி வரும் சேவையையும், அவரது வெளியிட்டு நூல்களையும் அறியாதோர் யார்?

ஜோதிட சாஸ்திரத்தைச் சுலபமாகப் பலரும் கற்றுத் தெளிய ஓர் எளிய தபால் வழி பாட திட்டத்தைத் தமிழிலும், English-லும் உருவாக்கி 1977ம் வருடம் முதல் "கடலங்குடி ஜோதிட ஆய்வு மைய'த்தின் மூலம் நடத்தி வருகிறார். 4 மாதங்களில் ஜோதிடம் தபாலில் கற்பித்து இறுதியில் மையம் Diploma வழங்கும். ஆயிரக்கணக்கில் உள்நாட்டு, வெளிநாட்டினர் இப்பாட திட்டத்தின் மூலம் பயனடைந்துள்ளனர். பாட திட்டத்தின் நோக்கம், சிலபஸ், கட்டண விவரம், அட்மிஷன் பாரம் அடங்கிய ப்ராஸ்பெக்ட்ஸ் தமிழ் ரூ.17/-, English ரூ.15/- M.O செய்து தொடர்பு கொள்க. வெளிநாட்டோர் 2 பிரிட்டிஷ் பவுண்டு P.O அனுப்பி விவரம் அறியவும். **தமிழ் புத்தாண்டை முன்னிட்டு (17.4.97) அன்று துவங்கும் புதிய வகுப்பில் சேர முந்துங்கள்.**

**K.N.S. நேரில் ஜோதிடப் பலன் பார்க்கும் நேரம் மாலை 3.00 முதல் 6.00 வரை பார்க்கப்படும்.**

ஞாயிறு விடுமுறை.

**For appointment Ph: 4343406**




**Kadalangudi Astrological Research Centre**
**38, Natesa Iyer Street,**
**(Near T.Nagar Bus Stand) Madras - 600 017.**



**வடாம் மாவில் சிறிது ரோஸ் மில்க் எஸென்ஸ் ஃப்ளேவரைச் சேருங்கள். மாவு ரோஸ் கலரில் இருக்கும். பொரித்தால் இளரோஸ் நிறத்தில் வடாம் பளிச் சிடும்.**

**— புஷ்பா**



அதோடு நிறுவனத்துடன் நாங்கள் கலந்தாலோசித்து வீட்டுப் பத்திரத்தை யார் வைத்துக் கொள்ள வேண்டுமென்று தீர்மானிப்போம். இதைப் போல் பல பிரபல நிறுவனங்களில் பலர் இணைந்து ஒரு காலனியாகவே கூட எங்களிடம் கடன் பெற்று உருவாக்கிக் கொண்டுள்ளனர். இதில் ஒரு வசதியும் கூட உள்ளது. கடன் பெற்றவர்கள் கடனை ஒழுங்காகத் திருப்பித் தர அவர்கள் வேலை செய்யும் நிறுவனமே இந்த வகையில் பொறுப்பேற்கிறது. அதுவும் இக்காலத்தில் இளைஞர்கள் திருமணம் செய்து கொண்ட உடனேயே வீடு வாங்க ஆசைப்படுகின்றனர். அநேகமாக இருவரும் சம்பாதிப்பதால், வீட்டிற்கு வாங்கும் கடனை அடைப்பது மிகக் கஷ்டமான காரியமில்லை. இருப்பினும் இவர்கள் வசதிக்கென ஒரு தனித்திட்டம் வைத்துள்ளோம். அதன்படி வேலைக்குச் சேர்ந்த புதிதில் உள்ள நிலையில் குறைந்த அளவு பணம் செலுத்திக் கடனை அடைக்கலாம். வருடங்கள் செல்லச் செல்ல சம்பளம் கூடிவிடும் நிலையில், கூடுதலாகப் பணம் செலுத்தி மீதி கடனை வசதியுடன் திரும்ப அளிக்கலாம்.

**கேள்வி : உங்களைப் போன்ற நிறுவனங்கள் மூலம் நகரத்தில் உள்ள மக்கள்தான் கடன் பெற முடியுமா? மற்ற நகர்புற, கிராமப்புற மக்களுக்கும் உதவுவீர்களா?**

திரு ஜோஸப் : எங்கள் நிறுவனம் மூலம் நகரத்தில் உள்ளவர் மட்டுமல்லாது, கிராமப்புறத்தில் உள்ளவர்களும் கடன் உதவி பெறலாம். ஆனால் யாராயிருந்தாலும் மாத வருமானம் பெறும் ஆதாரத்தைக் கட்டாயம் காட்ட வேண்டும். கிராமப்புறத்திலிருந்தாலும் மாத வருமானம் பெறுபவராகவோ அல்லது மாதாமாதம் கணிசமான நிலையான வருமானம் பெறக்கூடிய அளவு சுயதொழில் செய்பவராகவோ இருந்தால் கடன் தருகிறோம். கிராமத்திலுள்ளவர்கள், நகரத்திலுள்ளவர்கள் மட்டுமல்ல, வெளிநாட்டில் வாழும் இந்திய மக்கள் கூட எங்களிடம் கடன் பெற்று இந்தியாவில் வீடு கட்டலாம். கடன் தொகையை அங்கிருந்தபடியும் செலுத்தலாம். திரும்ப இந்தியா திரும்பி விட்டால் இங்கு வந்து தொடர்ந்து செலுத்தலாம். எங்கள் நிறுவனத்தின் கிளைகள் நாடெங்கிலும் இருபத்தி எட்டு இடங்களிலும் ஒரு கிளை துபாயிலும் உள்ளது.

**கேள்வி : அரசாங்கப் பின்னணி இல்லாது, தனியார் நிறுவனமாக விளங்கும் உங்களைப் போன்ற நிறுவனங்களின் வெற்றிக்குக் காரணம் என்ன?**

மக்கள் எங்களைப் போன்ற நிறுவனங்களின் மீது வைத்திருக்கும் நம்பிக்கையே. முதலீடு செய்த மக்கள், பணம் பத்திரமாக உள்ளது என நம்ப வேண்டியது மிக மிக அவசியம். இந்தக் கருத்தைத்தான் எங்கள் நிறுவனத்திலுள்ள பணியாளர்கள் அனைவரும் மக்கள் மனதில் பதிய வைக்க பாடுபடுகின்றனர். இதற்காக பொது மக்கள் பணம் முதலீடு செய்துள்ள நிலைமை பற்றியோ, கடன் வாங்கியுள்ள நிலைமை பற்றியோ எந்த ஊரிலிருந்து கேட்டாலும் தரக்கூடிய நிலையில் இருக்க வேண்டுமென அனைத்து ஊழியர்களுக்கும் கம்ப்யூட்டர் வசதி தரப்பட்டுள்ளது. இருப்பினும் அது லாபகரமான நிறுவனமாகவும் இருக்க வேண்டும். ஏன் தெரியுமா? அப்போதுதானே எங்களை நம்பி தங்கள் பணத்தை முதலீடு செய்துள்ள பொது மக்கள், மற்றும் பெரிய நிறுவனங்கள் நிம்மதியுடன் மேலும் மேலும் உதவ முடியும்?

சேவை, மனித நேயம், பாதுகாப்பு ஆகிய கொள்கைகளை கடைபிடித்து பொது மக்களுக்கு நலனளிக்க என்று உருவாகும் எங்களைப் போன்ற நிறுவனங்களை மதிப்பிட கிரஸில் (CRISK) மற்றும் இக்ரா (ICRA) நிறுவனங்கள் உள்ளன. ஆசிய அளவில் சிறப்பாக நிர்வகிக்கப் பட்டு வரும் நிறுவனத்தை அங்கீகரிக்க 'ஏசியா மணி' (Asia Money) என்ற நிறுவனமும் உள்ளது. எங்கள் நிறுவனம் இவை அனைத்தின் அங்கீகாரத்தையும் பெற்றுள்ளது. பொது மக்கள் முதலீடு செய்யும் தொகைக்கு அதிக வட்டி கிடைக்கிறதா என்று பார்ப்பதை விட இந்த முறையில் அங்கீகாரங்களைப் பெற்ற நிறுவனமா என்று நன்கு ஆராய்ந்தே முதலீடு செய்வது மேல்.

பேட்டி : **ராஜ்ஸ்ரீ சந்திரசேகர்**

படங்கள் : **ராஜ நாராயண்**

## விநாயக வழிபாடு துதிப்பாடல்கள்

தினமும் பாராயணம் செய்வதற்கு ஏற்ற வகையில் துதிப்பாடல்கள்.

பக் - 32 விலை ரூ. 6.00

## வெற்றி தரும் விநாயகர்

விநாயகர் பற்றி - விரதங்கள், பிள்ளையார் சுழி என நிறைய செய்திகள். தொகுப்பு - சாந்தினி

பக் - 176 விலை ரூ. 36.00

(இரண்டும் - காமதேனு பப்ளிகேஷன்ஸ் லிட்., 2, ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.)

## உங்கள் பிள்ளைகளைப் புரிந்து




## கொள்வது எப்படி?

பெற்றோர்கள் படிக்க வேண்டிய நூல். ஆசிரியர் - டேவிட் சித்தையா.

பக் - 124 விலை ரூ. 23.00

## பொது அறிவுப் புதிர்கள் - பாகம் 1

சுவையான புதிர் குறுக்கெழுத்துப் போட்டிகள். தொகுப்பு - அப்பாஸ் மந்திரி. சிறுவர்களுக்கேற்ற வகையில் வடிவமைப்பு, தரப்பட்டுள்ளது.

பக் - 96 விலை ரூ. 36.00

(இரண்டும் - மணிமேகலை பிரசுரம், த.பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17.)

## சிட்டுக் குருவியின் சின்னக் கவலை

சுற்றுப்புறச் சூழல் பற்றிய கவிதைகள். ஆசிரியர் - மணிமேகலை குப்புசாமி.

'மனி தருடன் சேர்ந்திங்கே மரங்களும், மூச்சுவிட ஏங்கும் பரிதாப நிலை'.

பக் - 103 விலை ரூ. 45.00

(விளாதிமிர் பதிப்பகம், 38, 4-வது குறுக்குத் தெரு, குறிஞ்சிநகர், புதுச்சேரி - 605 008.)

## பேரருள் வழங்கும் சீரடி சாயிபாபா

பலருக்கும் நடமாடும் தெய்வமாக விளங்கிய சீரடி சாயிபாபாவின் வாழ்க்கையினை எளிய உரையில் தந்திருப்பவர் ஸ்வாமி முருகானந்தா.

பக் - 96 விலை ரூ. 17.00

## புதுமுறை மனையடி சாஸ்திரம்

வாஸ்து பற்றி எளிமையாக விரிவாகக் கூறியிருப்பவர் ஸ்வாமி முருகானந்தா.

பக் - 112 விலை ரூ. 20.00

(இரண்டும் - கார்த்திகா பப்ளிகேஷன்ஸ், 18, தெற்கு பெருமாள் கோவில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 26.)

## பக்திப் பரவசக் கதைகள்

கணேச கிதை எனத் தொடங்கி அனுமன் பெற்ற அருள் என பதி னாறு புராணக் கதைகளைச் சுவையாகக் கூறு பவர் கங்கா ராமமூர்த்தி. ஓவியர் வேதா வரைந்த தெய்வீகம் பொலியும் அட்டைப்படம்.

பக் - 80 விலை ரூ. 15.00

## மன்னன் மாடத்து நிலவு

விஜயநகர மன்னர், சிவாஜி, கட்டபொம் மனின் வீர சாகசம் நிறைந்த சரித்திரக் குறு நாவல்கள். ஆசிரியர் - கௌதம நீலாம்பரன்.

பக் - 142 விலை ரூ. 30.00

(கங்கை/வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17.)

## பூவை அமுதன் கவிதைகள்

தற்காலச் சமுதாயத்தின் அவலங்களைக் கூறுகிறார் பூவை அமுதன்.

பக் - 160 விலை ரூ. 30.00

(கலையமுதம் பதிப்பகம், 142, 2-ம் தெரு, பாஸ்கர் காலனி, சென்னை - 92.)




திருச்சி பிரபல சித்த மருத்துவ நிபுணரும், இந்திய ஜனாதிபதியின் கௌரவ ஆலோசகருமாகிய டாக்டர் இரா. கண்ணன் எழுதிய "மருந்தாகும் மூலிகைகள்" என்ற நூலின் வெளியீட்டு விழா அண்மையில் நடைபெற்றது. விழாவில் தமிழக நல வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு நா. ஆற்காடு வீராசாமி, தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன், சென்னை பல்கலைக் கழக துணைவேந்தர் பேராசிரியர் பி.கே. பொன்னுசாமி, சென்னை எம்.ஜி.ஆர். மருத்துவ பல்கலைக்கழக துணைவேந்தர் மேஜர் டாக்டர் ராஜா, டாக்டர் குமாரதாஸ் எம்.எல்.ஏ. டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி, திருமதி மஞ்சுளா ரமேஷ் ஆகியோர் கலந்து கொண்டனர்.

## பாரதி இருந்த வீடு

சுஜாதாவின் மூன்று நாடகங்களின் தொகுப்பு

பக் - 128 விலை ரூ. 24.00

## சீரோவின் எண் கணித நூல் அதிர்ஷ்டத்தின் ரகசியம்

தமிழாக்கம் - ஆர். ராமன்

பக் - 268 விலை ரூ. 50.00

(இரண்டும் - குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001.)

## விவேக சிந்தாமணி

இன்றைக்கும் உலக உண்மையைச் சொல்லும் பழைய நூல். அதனை எளிய தமிழில் சொல்லி தெளிவுரையும் தருபவர் - ஞா. மாணிக்கவாசகன்.

பக் - 90 விலை ரூ. 12.00

## அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு

1776 முதல் 1945 வரையிலான சரித்திரம் கூறுபவர் பி.எல். ராஜேந்திரன்.

பக் - 150 விலை ரூ. 35.00

(இரண்டும் - உமா பதிப்பகம், 58, ஐயப்ப செட்டித் தெரு, மண்ணடி, சென்னை - 1)

## வீர வணக்கம்

இழையோட்டமாகச் சம்பவங்கள் ஓட நகரும் சிறுகதைகளின் தொகுப்பு

பக் - 164 விலை ரூ. 30.00

(காவ்யா, 16, 17-வது கிராஸ் தெரு, இந்திரா நகர் 2-வது ஸ்டேஜ், பெங்களூர் - 38.)

## புவனா தேடிய புதையல்

மதி ஒளி எழுதிய சிறுவர்களுக்கான கதைகள். மணியம் செல்வனின் அற்புதமான வண்ண ஓவியங்களுடன்.

பக் - 124 விலை ரூ. 30.00

## பெண்ணால் முடியும்

தொழிலதிபராக உயர ஒரு பெண் பாடு படும் கதை. ஆசிரியர் - பி.சி. கணேசன்.

பக் - 256 விலை ரூ. 32.00

பிரண்டையைச் சுத்தம் செய்து சிறு துண்டுகளாக்கி வடகத்திற்கு அரிசி மாவு அரைக்கும் பொழுது போட்டால் வடாம் இளம் பச்சை நிறத்துடன் காணப்படும். உடம்புக்கும் நல்லது.

— புஷ்பா





எங்கள் காம்பௌண்டில் வேப்ப மரம் இருக்கிறது. இப்பொழுது இலையுதிர் காலம் என்பதால் இலைகள் அனைத்தும் உதிர்ந்து விட்டன. அதை அள்ளி வெளியில் கொட்டியதைப் பார்த்த ஒரு பெண்மணி, ''இதை எரித்து வெந்நீர் போடலாமே. மேலும் இந்தப் புகையை சுவாசித்தாலே உடலுக்கும் நல்லது'' என்றார். அதிலிருந்து வெளியில் கொட்டுவதே இல்லை.

— பி. ஜானகி

*(இரண்டும் கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17.)*

## வாழ்க்கை வெற்றிக்கு வள்ளுவர் காட்டும் வழி

இல்லறத்தில் புகும் மணமக்களுக்குக் கூறுபவர், பி.சி. கணேசன்.

பக் - 160 விலை ரூ. 25.00

*(இமயப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 1.)*

## ஆயிரத்து ஓர் அதிசய இரவுகள்

பல சுவையான காதல் கதைகளை ஓர் அழகி அரசருக்குச் சொல்வதாக வழிமுறையாகச் சொல்லப்பட்டு வந்தது. தொகுப்பு - ஆர். சண்முகம்.

பக் - 276 விலை ரூ. 45.00

## Agasthiar Hindi - Hindi, Tamil, English Dictionary

அகஸ்தியர் வெளியீடாக வந்துள்ள இந்த அகராதி மாபெரும் முயற்சி. மூன்று மொழிகளுக்குமான அகராதி. மாணவர்களுக்கும், மொழித்துறை வல்லுனர்களுக்கும், பொதுவாக இன்றைய மக்களுக்கும் இல்லத்தில் பாதுகாத்துப் பயன்படுத்த வேண்டிய நூல்.

பக் - 2112 விலை ரூ. 290.00

(Agasthiar Publications, Clives Building, Nandhi Koil St., Teppakulam, Trichy - 620 002.)

## பாண்டுரங்கன் தரிசனம்

பாண்டுரங்க விட்டலரின் கருணையையும், பண்டரீநாதன் அடியவர்களை ஆட் கொண்டதையும் பக்திச் சுவை ததும்பும் நாடகமாகத் தந்திருப்பவர் - டி.பி. இராமானுஜம்.

பக் - 340 விலை ரூ. 75.00

*(திருநெல்வேலி ஸ்ரீ நம்மாழ்வார் சபா, D 107-F, சங்கீதா காலனி, அண்ணாமெயின் ரோடு, சென்னை - 78.)*

## சுவாமி விவேகானந்தரின் ஞான தீபம் - சுடர் - 11

சுவாமி விவேகானந்தர் மேலை நாடுகளில் நமது புராதான இந்து மதத்தின் பெருமையை நிலைநாட்டி நாடு திரும்பிய நூற்றாண்டு விழாவைச் சிறப்பாக நாடு முழுவதும் கொண்டாடினார்கள். இச்சமயத்தில் வெளி வந்துள்ள சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம் அவருடைய 'இந்தியச் சொற்பொழிவுகள்' அடங்கிய நூல். சுவாமிஜிக்கே உரிய வேகமும், தாக்கமுமான வார்த்தைகளை அதே அளவு வீர்யத்துடன் தமிழில் மொழி பெயர்த்துத் தந்துள்ளனர். இந்திய நாட்டின் மகிமையை உணர்ந்து மெய்சிலிர்க்கச் செய்யும் நூல்.

பக் - 412 விலை ரூ. 25.00

*(ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், 16, ராமகிருஷ்ண மடம் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4.)*

## ஸ்ரீ ரமணரும் ஆன்மீகப் பாதையும்

வேத உபநிடதங்களை கரை கண்ட காவ்ய முனிகளுக்கும், உலகம் முழுவதும் ஆன்மீக அமைதி காண பயணம் செய்து இறுதியில் இந்தியாவில் திருவண்ணாமலையில் தங்களுக்கு விடைகிடைத்ததை உலகம் முழுக்க மெய் சிலிர்த்துக் கூறியவர்களுக்கும் குருவானவர் ரமண மகிரிஷி. அதே சமயம் எளியனுக்கு எளியனாக சாதாரண எச்சுமி பாட்டி முதல் அணில்களுக்கும் ஜீவராசிகளுக்கும் கருணை வடிவானவர். வாழ்வின் உண்மையை மிக எளிய கோட்பாடுகளினால் வகுத்து வழி காட்டிய மகான் மகிரிஷியின் வாழ்க்கையை அவருடைய தத்துவக் கோட்பாடுகளுடனும் பல்வேறு பட்ட அனுபவங்களுடனும் எழுதியிருக்கிறார் Atthur Asparn. அதனை மூலநூலின் மகத்துவம் குன்றாது மொழி பெயர்த்திருப்பவர் லா.சு. ரங்கராஜன்.

பக் - 363 விலை ரூ. 60.00

*(ரமணாச்ரமம் வெளியீடு, திருவண்ணாமலை. பதிப்பாளர் V.S. ரமணன், தலைவர் நிர்வாகக் குழு, ஸ்ரீ ரமணாச்ரமம், திருவண்ணாமலை - 3.)*

# இந்தியா செக்யூரிடீஸ் லிமிடெட்

அளிக்கும்

# Posi+ive Deposi+ Schemes





### அதிக பாதுகாப்பு

- CARE AA - மதிப்பீடு "High Investment Grade"
- குரூப் நிறுவன சொத்துக்கள் ரூ. 15,000 கோடி

### அதிக வருமானம்

- ஆண்டிற்கு 17.50% முதல் 29.77% வரை வருமானம் அளிக்கும் திட்டங்கள்

### அதிக நம்பிக்கை

- 15 லட்சத்திற்கும் மேற்பட்ட பங்குதாரர்கள்
- பல்வேறு அத்யாவசியமான தொழில்களில் ஈடுபாடு

### நிறைவான சேவை

- வட்டிக்கு முன் தேதியிட்ட காசோலைகள்

| காலம் மாதங்கள் + நாள் | வட்டி மாதம் ஒரு முறை | வட்டி காலாண்டிற்கு ஒரு முறை | வட்டி ஆண்டிற்கு ஒரு முறை | குமுலேடிவ் மூலம் பெறக்கூடிய வருமானம் |
|---|---|---|---|---|
| 12 + 1 | 17.50 % | 17.75 % | 19.00 % | 19.00 % |
| 15 | 17.75 % | 18.00 % | 19.25 % | 20.00 % |
| 24 + 1 | 18.00 % | 18.25 % | 19.50 % | 21.40 % |
| 36 | 18.50 % | 18.75 % | 20.00 % | 24.27 % |
| 48 | 18.50 % | 18.75 % | 20.00 % | 26.84 % |
| 60 | 18.50 % | 18.75 % | 20.00 % | 29.77 % |

% - ஆண்டு வட்டிவிகிதம்

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளுங்கள்.




**India Securities Limited**

14, ஹாடோஸ் ரோடு, சென்னை - 600 006. தொலைபேசி : 8279517.

விண்ணப்ப படிவங்களுக்கு தொடர்பு கொள்ள : மும்பை : 4950606, 2044006, Extn. 1520/21, 2041003, சென்னை : 8279517, 8272377, பெங்களூர் : 5591650, 5591708, ஹைதராபாத் : 313585, கல்கத்தா : 2406177, புது டெல்லி : 6842458 / 9546, அகமதாபாத் : 6560277, 6561844, சூரத் : 683461.




ISL/1168

"ஹ

ப்பா... தலையைச் சுத்தறது... ஹா'ம்..." சியாமளா மூக்கைப் பொத்திக் கொண்டு நகர்ந்தாள். கம்மென்ற மணம் வீடு பூராவும் வியாபித்திருந்தது. சோகம் ததும்பிய இரண்டு மூன்று முகங்கள் கூட தத்தம் செயல் மறந்து தம்மையறியாமல் மூச்சை இழுத்து விட்டன. செண்ட் பாட்டில் மூடப்பட்டது.

அப்பாவின் தலைமாட்டில் இருந்த விளக்கு சுடருடன் பனிச்சிட்டது... இப்போதுதான் கடையிலிருந்து புழக்கத்திற்காக எடுக்கப்பட்டது போல் புதுமை மாறாமல் நின்றிருந்தது பிசுக்கோ தூசோ அதனை அண்டக் காணோம்.

அப்பாவே சாய்த்து வைக்கப்பட்ட விளக்கைப் போல்தான் இருந்தார். கொஞ்சம் உற்று நோக்கினால் மூச்சு விடுவதைப் போன்ற பிரமை ஏற்படுமோ என்னவோ... மார்பும் தோளும் அகண்டு, அறுத்த பலகை போல் பொருக்கு இன்றி, ரோமம் இன்றி, இருபது வருடத்துக்கு மேல் அனுஷ்டிக்கப்பட்ட பிராணாயாமம்....



# சுத்தம்

''மாரை வலிக்கறது தண்ணி கொண்டாடி'ன்னார். குடுத்தேன். வாங்கறதுக்குள்ளே ஒரு வெட்டு. ராமான்னு ஒரு சத்தம். ஆச்சு..." அம்மா தேய்ந்த இசைத் தட்டாய்ச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ராமகிருஷ்ணனுக்கு முந்தைய நாள் நிழலாடியது. அப்பா தண்ணீர் கேட்டார். அம்மா கொடுத்தாள். குடிக்கப் போனவர், பாத்திரத்தை ஊன்றிப் பார்த்தார். குப்பையோ சத்தையோ... ஒன்றும் பேசாமல் தண்ணீரைக் கீழே ஊற்றினார். கடைசிப் பகுதி நீரில் உடைந்த துடைப்பக் குச்சி மிதந்தது.

"அப்படி என்ன ஆங்காரம், நான் கேக்கறேன். சின்ன தூசு தும்பு இருந்தா செத்தா போயிடுவா. கொதிக்கவச்ச ஜலம். பூதக் கண்ணாடி வச்சுண்டு எதுடா ஆப்படும்னு பாக்கறது.'' அம்மா நொடித்தபடி வேறு நீர் கொண்டு வர உள்ளே போனாள்.

அப்பா சிரித்த மாதிரி இருந்தது விலுக்கென்று இழுத்த போது.

''ஃபஸ்ட் க்ளாஸ் ஜலம். பால் இன்ஸ்பெக்டர்கிட்ட சர்டிபிகேட் வேணும்னாலும் வாங்கிண்டு..." சொல்லிக் கொண்டே வந்தவள் தடாலென்று பாத்திரத் தைத் தவற விட்டபடி "அய்யோ தெய்வமே."

"டேய் இங்க வாடா...."

ராமகிருஷ்ணனுக்கு நேரமாகி விட்டது... ஒன்பது மணி பஸ்ஸை விட்டால் அப்புறம் முக்கால் மணி நேரத்திற்கு வண்டி கிடையாது. ஓடும் நேரம் ஒரு முக்கால் மணி... இன்டர்வ்யூ கோவிந்தாவாகி விடும்...

"எல்லாம் எடுத்துண்டேன். டைமாச்சு. வரட்டுமாப்பா..."

"இது என்னடா சட்டையும், பேண்டும்..." முகம் சுளித்தார். ராமகிருஷ்ணன் கண் சிமிட்டினான்.

"வேற ஒண்ணுமில்லப்பா. அதுல ஒரு தொழில் ரகசியம் இருக்கு.. கொஞ்சம் அழுக்கா சுமாரா போனாதான் சட்னு அனுதாபத்தைச் சம்பாதிக்கலாம். ப்ளஸ் உருக்கமா பேச்சு... சும்மா."

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்



"போடா முட்டான். பிச்சையா போடப் போறான். அங்க உக்காந்திருக்கறவன் இதப் பாத்தா மூட் அவுட் ஆவான். கேக்கறதுக்கு தேங்கா உடைச்சாப்பல பதில் சொன்னாதான் உம்மேல அவன் கவனமே வரும். அனுதாப அலைன்னு போனா பத்தோட பதினொண்ணுன்னுதான் பாப்பான்."

அவரே பெட்டி திறந்து மடிப்பு கலையாத உடைகளைத் தேர்வு செய்தார்.

இருபத்தைந்து வயது இளைஞனின் முகவாயைப் பற்றி, சிப் பால் படிய வாரினார். தூரத்தில் நின்று ஓவியனைப் போல் பார்த்தார்.

"ம்.... ஆல் த பெஸ்ட்...."

"அய்யோ சாரங்கா... நல்லா இருந்தியேடா... என் பேரன் கூட வெள்ளைத் தாத்தாவைப் பாக்கணும்னான்..." எதிர் வீட்டு ரங்காச்சாரி துண்டில் வாய் வைத்துக் குலுங்கினார்.

"ஓய் ரங்காச்சாரி... என்னய்யா நீரு... பொண்ணுக்குச் சம்பந்தம் பேசப் போறீரா இல்ல எங்கயாவது பரிசாரகத்துக்குப் போறீரா. பொண்டாட்டி செத்தவர் மாதிரி அங்க போய் நிக்காதியும்..." அப்பா வாசல் திண்ணையிலிருந்து சொன்ன போது பொருட்படுத்தாமல் போன ரங்காச்சாரி சோகமாய்த் திரும்பி வந்தார். யாரும் சரியாய் முகம் கொடுத்துப் பேசவில்லையாம்...

அப்பாவைக் கண்டதும், புறக்கணித்தவர்களே மீண்டும் ஓடி வந்து வரவேற்றதும், ரங்காச்சாரி சார்பில் அப்பாவே சம்பந்தம் பேசியதும், யார் பெண் வீட்டுக்காரர்கள் என்னும்படி அவர்கள் தழைந்து போனதும், கல்யாணம் ஆனதும் பின்னால் பேசப்பட்ட கதை.

ராமகிருஷ்ணன் நேற்று இரவுதான் வேஷ்டி மாற்றினான் அப்பாவுக்கு. பாலியெஸ்டர்... வளை வளையாய் காற்றுக்கு ஏற்ப ஜாலம் காட்டிய சன்னமான சித்திரமாய்....

"டேய் பரியாரியைக் கூப்பிடு. மூஞ்சியெல்லாம் நறநறன்னு இருக்கு."

"நாளைக்குப் பண்ணலாம்பா. இப்பவே ரொம்ப டயர்டா தெரியறே... டாக்டர் வந்துட்டுப் போகட்டுமே."

"டு வாட் ஐ சே. உசிரோட இருக்கற வரைக்கும் பளிச்னு இருந்துடறேன். நான் கண்ணை மூடினப்புறம் ஒங்க ஊழலைக் கேக்கவா போறேன்."

படுத்த வாக்கில் சவரம் செய்தார். கண்ணாடி பார்த்தார். திருத்தம் சொன்னார். திருப்தி அடைந்தார்.

ஈரத் துணியால் முகம் பூராவும் துடைத்து விட்டான். வெளியே ஓலை பின்னியபடி ஆட்கள் மும்முரமாய் இருக்க, வாத்தியார் உத்தரவு பிறப்பித்துக் கொண்டிருந்தார்.

"அப்பா... அப்பா..." அழுதபடி சியாமளா மூக்கைப் புடைவையில் சிந்தியது அருவருப்பாய் இருந்தது.

ராமகிருஷ்ணனுக்கு துக்கம் இருந்தும் ஒரு பொட்டுக் கண்ணீரோ, அழுகையோ வராதது அனைவருக்கும் ஆச்சரியம் அளித்திருக்க வேண்டும்.

"அப்பா ராமு... அவர் இருந்தது யானை பலம்.. இனிமே நாம சுதாரிச்சுண்டுதான் காலத்தைக் கழிச்சாகணும்."

யாரோ ஒரு பெண்மணி தைரியம் சொல்லும் போக்கில் அவனைத் தளரச் செய்ய முயற்சித்தாள். அவன் வெறித்தபடி இருக்க, இதற்குக் கூடவா ஒருத்தன் அழமாட்டான் என்னும் வெறுப்பில் சட்டென்று நகர்ந்தாள்.

"ராஸ்கல்.. எங்கம்மாதான் செத்துப் போனா இல்லங்கலே... ஆ ஊன்னு அழுது ஆகாத்தியம் பண்ணினா ஆச்சா... புழுதில ஏன் புரண்டு விழறே... போடா...." பாட்டி செத்துப் போன போது அவனைத் தள்ளி விட்டார். சட்டையைத் தட்டி விட்டார்.

பாட்டிதான் அப்பா, சித்தப்பா, அத்தைகள் அத்தனை பேரையும் விதவைக் கோலத்துடன் மேலே கொண்டு வந்தவள்... அவள் போகும் வரை அவள் அபிப்ராயமே செயல்பாடு....

"அழுது, கூச்சல் போட்டுத்தான் சாவு வீட்டைக் காமிக்கணும்னு ஒண்ணும் சட்டம் இல்லைடா. துக்கம் மனசுல இருக்கலாம். அதுவும் உப்பும் தண்ணியும் உள்ள போகப் போகக்



**புளிப்புத் தயிர்தானே என்று அலட்சியப்படுத்திய தயிரை என் நாத்தனாரிடமிருந்து வாங்கி அதில் வெள்ளிக் கொலுசை பத்து நிமிடம் போட்டுப் பிறகு சோப் பவுடரில் பிரஷ் செய்தேன். வாழ்க புளிப்புத் தயிர் என்று வாயார வாழ்த்தினார், 'பளிச்' கொலுசைப் பார்த்து!**

**— கி. மஞ்சு**

குறையப் போகிறது. அமைதியா இருந்து துக்கத்தை அனுபவிக்கணும். அய்யோ மகாராஜா போயிட்டியேன்னு வெறி புடிச்சுக் கத்திட்டு அடுத்த வருஷம் அப்பாவோட திதியே மறந்து போகிற மாதிரிதான் எல்லாம் நடந்துக்கறாங்க. நானே நாளைக்குப் போனாக் கூட நீங்க அழணும்னு எதிர்பாக்கலே. அர்த்தமாச்சா..." அப்பா காரியம் ஆனதும் சொன்னார்.

அதற்குப் பிறகு நடந்த துக்க வீடுகளில் ராமகிருஷ்ணன் எங்கும் அழத்தோன்றாமல்தான் நின்றிருக்கிறான். இப்போதும் அப்படியே....

"ஸ்மசானம் போய்ட்டு வர நேரமாயிடும். ஒரு வாய் சாப்பிடு... தெம்பு வேணுமில்ல...."

சியாமளா கொடுத்த காப்பியில் பால் ஆடை துணுக்குகளாய் மிதந்தன... சுருட்டிக் கொண்டும் உருட்டிக் கொண்டும் குடிக்கையில் திரடும்.. பல் அரைக்கையில் காப்பியின் சுவை போய் ஆடையின் வாசனைதான் நிற்கும்.

அப்பா மோர் சாதம் சாப்பிடும் அழகே தனி... பனிரென்ற வெண்மை தாக்கும். அம்மா ஊறுகாய் போட உதறும் போது ஒரு பொட்டுச் சிவப்பு எண்ணெயுடன் நடு வெண்மையில் விழுந்து பரவ ஆரம்பித்தது. சிறிது சிறிதாய் வெண்மையும் இல்லாமல் சிவப்பும் இல்லாமல் கலங்கலானது...

அப்பா சாப்பிடாமல் எழுந்தார்.

அப்பாவைக் குளிப்பாட்டினார்கள். நீர் தரையில் உருண்டு கோடிழுத்துக் கறையாக ஓடியது.

சம்பிரதாயப்படி பல்லக்கு ஏறினார். விறகுகள் அடுக்கப்பட்டன. ஒரு சிலாம்பு கூட நீட்டாமல் பாதியாய் பிளக்கப்பட்ட விறகுகள்.

அப்பா. உன் மனம் போலவே இதுவரை நடந்து விட்டது. நீ சாகவில்லை. சுத்தமாக ஒவ்வொன்றிலும் ஓடுவது உன் உயிர். அதைக் கடைப் பிடிப்பதன் மூலமே உனக்குண்டான கர்மாவைச் சரியாகச் செய்தவன் ஆகிறேன் நான்... தேஜஸ் என்பது வானத்திலிருந்து குதித்த மாயம் அல்ல. நிர்மலமான செயல், தோற்றம்.

"ம். வெயில் ஏறிடுத்து. ஆகட்டும். வேண்டியவா எல்லாம் பாத்துக்கோங்க.. அக்னி எங்க..." வாத்தியார் பரபரத்தார்.

"இருங்க சாமி. அவசரப்படாதீங்கள். என் காரியம் இன்னும் ஒண்ணுமே ஆகலே..." வெட்டியான் முண்டாசைக் கட்டிக் கொண்டார்.

"இன்னும் என்ன காரியம். ராட்டிய அடுக்க அஞ்சுமணி நேரமா வேணும்..." வாத்தியாருக்கு அவருடன் பேசிக் கொண்டிருக்க நேரமில்லை.

"வெறும் ராட்டி அடுக்கினா எப்படி எரியும். நாளைக்கு என்னத்தான் பொல்லாப்பு சொல்வீங்க.. காசு வாங்கினா ஒழுங்கா பண்ணணும்...."



**வெண் பொங்கலுக்குப் போடும் மிளகு சீரகத்தை ஒருமுறை சிறிது வறுத்து தூள் செய்து நெய்யில் பொரித்துப் போட சுவை அற்புதம்.**

**— லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்**

பாசியும் பச்சையும் படிந்த சேறு பானை மூங்கியதில் வாயைத் திறந்து தன் கறுப்பைக் இறிக் காட்டியது. வெட்டியான் தபதபவென்று பிரேதத்தின் மேல் சேற்றைக் கொட்டிக் கைகளால் பூசினார்.

ராமகிருஷ்ணன் தடுத்தான். சுத்தமான ஒரு மனிதரின் மேல் அவர் வாழ்ந்த வாழ்க்கை புரியாமல் மாசு பூசுகிறார்.

"நோ... வேண்டாம்பா. அப்படியே எரிப்போம். இன்னும் வெறகு வேணும்னாலும் வாங்கிக்க..." துடித்தான்.

"அய்யே சாமி. நாளைக்கு அஸ்தி கரைக்க வேணாமா. நெருப்பு உள்ள புழுங்கினாதான் பூ கணக்கா சாம்பல் ஆவும். செங்கல் மாதிரி நல்லா கடணும். அரையும் குறையுமாவா எரிப்பாங்க!"

நிமிட நேரத்தில் பானை பானையாய்ச் சேறு கொட்டி பூசியதில் அப்பா மறைந்து மேடை மட்டும் தெரிந்தது. நெஞ்சுக்கு மட்டும் துவாரம் விடப்பட்டு அக்னி வார்க்கும் போது தான் ராமகிருஷ்ணனின் நெஞ்சுக் குழியிலிருந்து கேவல் வெடித்தது.

"அப்பா...."

"எல்லாத்தையும் சுத்தமா ஆக்கிடும் பாருங்க...." வெட்டியான் ஒதுங்கிக் கொண்டார்.

புகைய ஆரம்பித்தது.

அதையே பார்த்துக் கொண்டிருந்தான் ராமகிருஷ்ணன்.

# மனச்சோர்வு???



**தேர்ந்தெடுப்பது உங்கள் கையில். நாங்கள் கூறும் யோசனை**
**ராம் காஷ்யப் சிட்ஸ் – இணையற்ற தேர்வு.**

வாழ்க்கையில் சோதனையான கட்டங்கள் வருவது சகஜம். அதனால் உங்கள் மனதில் பல விதமான குழப்பங்கள் ஏற்படக்கூடும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் நீங்கள் செய்யக் கூடிய மிகப்பெரிய தவறு, உங்களை அப்படியே விழுங்கிவிடக் கூடியவர்களை அணுகிவிடுவதுதான். அதனால் நிலைமை மேலும் மோசமாகிவிடும்.

மாறாக, ராம் காஷ்யப் சிட்ஸ் எவ்வாறு செயல்படுகிறது என்பதைப் பாருங்கள். அது நம்பகத் தன்மை, பண்பாடு, தொலைநோக்கு ஆகிய முழுநிறைவான கொள்கைகளின் அடிப்படையில் இயங்கிவரும் நிறுவனம். நிலையான உறவுகளை அடித்தளமாகக் கொண்டு உருவாக்கப்பட்ட நிறுவனம்.



சந்தாதாரருக்கான பரிசு



அறிமுகப்படுத்துவோருக்கான பரிசு

# மகிழ்ச்சிப்பெருக்கு!!!



எனவே, ராம் காஷ்யப் சிட்ஸில் சந்தாதாரராகக் சேர்ந்திடுங்கள் அதற்கு, எங்கள் **சமய சஞ்சீவியை** உங்கள் இல்லத்தில் வரவேற்றால் போதும். அதன் பலனாக, உங்களுக்கு நீங்களே உதவிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது. உங்கள் தேவைகளை நீங்களே முழுமையாகப் பூர்த்தி செய்து கொள்ளும் ஆற்றல் கிடைத்துவிடுகிறது. இவ்வாறு நிகழ்வது மிகவும் இயற்கையான ஒன்று. காரணம், ராம் காஷ்யப் சிட்ஸில் சேரும்போது ஓர் அன்பான குடும்பத்தில் நீங்களும் ஓர் அங்கமாகி விடுகிறீர்கள்.







**Ram Kaashyap Chits**

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தேர்வு**

ராம் காஷ்யப் நிறுவனங்களில் ஓர் அங்கம்

Insight-738

**ராம் காஷ்யப் குரூப் நிறுவனங்கள் முகவரி : பதிவு அலுவலகம்** : 53, பிஷப் கார்டன், சென்னை 600 028.
**நிர்வாக அலுவலகம்** : 14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் 4341513, 4330034

**கிளைகள் : தமிழ்நாடு : சென்னை** : • **ஆழ்வார்பேட்டை** : 1/1 (கீழ்த்தளம்), சர் தேசிகா ரோடு, ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், சென்னை 600 004. போன் 4970205 • **மேற்கு மாம்பலம்** : 1/A, முதல் மாடி, மூர்த்தி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 600 033. போன் 4896638 • **அண்ணா நகர்** : 102, 'D' பிளாக், N.P. டவர்ஸ் (சிந்தாமணி அருகில், அண்ணா நகர் கிழக்கு, சென்னை 600 102. போன் 610979 • **அடையாறு** : 11, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு சென்னை 600 020. போன் 418081 • **தி.நகர்** : 14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் 4341513 • **கோயம்புத்தூர்** : 2வது மாடி, ஏசியாடிக் பில்டிங், 378 டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் 231886 • **திண்டுக்கல்** : 24 புதிய அக்ரஹாரம், திண்டுக்கல் 624 001. போன் 34218 • **திருநெல்வேலி** : கடை எண் 5, எலைட் காம்ப்ளக்ஸ், 182 E/24, S.N. ஹை ரோடு, திருநெல்வேலி 627 001 • **கும்பகோணம்** : நல்லி பிளாசா, முதல் மாடி 34 T.S.R. பெரிய தெரு, கும்பகோணம் 612 001. போன் 30246 • **மதுரை** : N.C.S. பில்டிங் 113-B, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை 624 001. போன் 741802 • **தஞ்சாவூர்** : T.S. எண் 2547 தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர் 613 009. போன் 25871 • **திருச்சி** : 44–45 அன்னை சிவகாமி காம்ப்ளக்ஸ், சிங்காரத் தோப்பு (சூப்பர் பஜார்) திருச்சி 620 008. போன் 704752 • **ஈரோடு** : ஆனூர் அம்மன் காம்ப்ளக்ஸ், 58 சத்தி ரோடு, ஈரோடு 638 003. போன் 79822 • **சேலம்** : 61, செரி ரோடு, சேலம் 636 007. போன் 418171 • **திருவாரூர்** : 80–A தெற்கு தெரு, திருவாரூர் 610 002. போன் 20895 • **காரைக்குடி** : எண் 1, T.T. நகர், முதல் தெரு S.K.N. பில்டிங்ஸ் (கீழ்த்தளம்) காரைக்குடி 630 001.

## முதல் பரிசு ரூ. 500/- பெறும் கட்டுரை :

### Diploma in Transport Economics & Management
(Conducted by Railway Dept.)

இந்த டிப்ளமோ கோர்ஸ் மூலமாக அனைத்து வகையான போக்குவரத்துத் துறைகளிலும் குறிப்பாக இரயில்வே துறையில் மிக அதிக வாய்ப்புகள் உள்ளன. ஏனெனில் இது போக்குவரத்துத் துறையில் பொருளாதாரம் (Economics), மேலாண்மை (Management) ஆகிய இரண்டைப் பற்றிய டிப்ளமோ அளிக்கிறது.

இந்த கோர்ஸ் அஞ்சல் வழி மூலமாக ரூ. 1550/-ம், நேரிடையாக சென்று படிக்க (Regular Class) ரூ. 2050/-ம் கட்டணமாக உள்ளது.

இதன் நேரிடை வகுப்புகள் தில்லி மற்றும் சென்னையில் மட்டுமே நடத்தப்படுகிறது.

இதன் முக்கிய அம்சம் என்னவென்றால் இந்தக் கோர்ஸை படிக்கும் போதே நேரிடை வகுப்புகளுக்கும் தேர்வுகளுக்கும் சென்று வர இரயில் பயணக் கட்டணத்தை இந்தத் துறை இலவசமாக வழங்குகிறது.

மேலும் விவரங்களுக்கு :

Institute of Rail Transport, Room No. 17, Rail Bhavan, New Delhi - 110 001.

இதைப் பற்றிய மேலும் சில தகவல்கள் (Prospectous) பெற மேற்கண்ட முகவரிக்கு ரூ. 30/- டி.டி. எடுத்து அனுப்ப வேண்டும்.

D.D. in favour of Institute of Rail Transport, New Delhi.

— கே. சுந்தர், பாண்டிச்சேரி - 9.

# என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?

## இரண்டாம் பரிசு ரூ. 250/- பெறும் கட்டுரை

மனிதவள மேன்மை புண்டங்கு உயர மானேஜ்மென்ட் கோர்ஸுகள் உதவுகின்றன. இதனாலேயே எம்.பி.ஏ. போன்ற பட்டங்களுக்கு இப்போது மவுசு கூடியுள்ளது.

இந்தியாவைப் போல் இங்கிலாந்திலும் Management படிப்புக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. இங்கிலாந்தின் Management Course உலகப் பிரசித்த பெற்றது.

இந்தியாவில் இருப்பது போல் நுழைவுத் தேர்வுகள் (Entrance tests) அங்கே கிடையாது. ஆனால் எம்.பி.ஏ. படிக்க விரும்புவர்கள் GMAT (Graduate Management Assessment Test), Toefl (Test of English as a Foriegn language( (or) IELTS (International English Language Testing System) இவை இரண்டிலும்





**கேசரி செய்யும்போது, தண்ணீரின் அளவைக் குறைத்து, பால் ஒரு டம்ளர் சேர்த்துக் கொண்டால் சுவை கூடும். புதுமையாகவும் இருக்கும்.**

— **ஜெயா**



நல்ல மதிப்பெண்கள் வாங்கினவர்களாக இருக்க வேண்டும். சில கல்லூரிகள் அனுபவ அறிவுக்கும் (Work Experience) முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். குறைந்த பட்சம் இரண்டு வருட அனுபவமாவது வேண்டும். நிறைய மதிப்பெண்கள் வாங்கி முதல் பட்டம் வாங்கி யிருந்தாலே போதும் என்று நினைக்கும் பல் கலை கழகங்களும் உண்டு.

இங்கிலாந்து படிப்பு முறையின் சிறப்பு அம்சமே அதன் flexibility தான். போதிய அளவு 'ஞானம்'/அறிவு இருக்கிறது என்று தோன்றினால் விதிமுறைகளை தளர்த்தவும் தயங்கமாட்டார்கள். ஆனால் வெளிநாட்டி லிருந்து செல்லும் மாணவர்களின் பிரச்னை என்ன என்றால் படிக்கும் போது வேலை பார்க்க முடியாது என்பதுதான். மாணவ விசா வில் போகிறவர்களுக்கு அங்கே வேலை பார்க்க அனுமதி (work permit) கிடைப்ப தில்லை. இதனால் full time MBA மட்டும்தான் இங்கேயிருந்து போகிறவர்கள் பண்ண முடியும்.

Britain MBA யின் புதுமை/லாபம் அதன் கால அளவுதான். அங்கு நடத்தப்படும் எல்லா முதுகலைபட்டப் படிப்பு மாதிரி MBA யும் ஒருவருடம் படித்தால் போதும். London Business School -ம் (21 மாதங்கள்). Manchester Business School -ம் (18 மாதங்கள்) தான் இதற்கு விதிவிலக்கு.

### தேர்வு எப்படி?

மேற் சொன்னது போல், 'நல்ல' ஒரு பட்டமும் (First Degree) (அது பி.ஏ., பி.எஸ்ஸி., பி.காம்., பி.டெக், பி.ஈ. எதுவாயிருந்தாலும் பரவாயில்லை) உயர்ந்த GMAT, TOEFL, IELTS (ஏதாவது ஒன்று) Score இவையின் அடிப் படையில்தான் மாணவர்களை தேர்வு செய் கிறார்கள். GMAT என்பது Graduate Management Admissions Council நடத்து கின்ற ஒரு பரீட்சையே ஆகும். இங்கிலாந்தில் MBA செய்ய விரும்புபவர்கள் இதில் குறைந்த பட்சம் 550 - 600 வது வாங்கியிருக்க வேண்டும். (GMAT பற்றி மேலும் அறிய விரும்புபவர்கள் GMAT Bulletin க்காக Fulbright Commission ஐ அணுகவும்).

GMAT நடத்துகின்ற Education Testing Service தான் TOEFL ம் நடத்துகிறது. IELTS என்பது British Council ம் International Development Project (IDP) ம் Cambridge University Examinations Syndicate (UCLES) ம் இணைந்து நடத்துகின்ற பரீட்சையாகும். ஆங்கிலம் கையாளுவதில் உள்ள தேர்ச்சி, திறமை இவை அறியத்தான் இந்தப் பரீட்சை நடத்துகிறார்கள். சென்னையிலுள்ள British Council Division ல் கூட எல்லா மாதமும் இந்தப் பரீட்சை நடக்கிறது.

கல்லூரிக்குக் கல்லூரி MBA Course Content வேறு பட்டிருந்தாலும் பொருளா தாரம், Financial management, Marketing, Quantitative Methods, Human Resource Management, Information Systems Management, Operations Management போன்றவை எல்லா இடங்களிலும் பொதுவாக சொல்லிக் கொடுக்கப்படும் விஷயங்களாக இருக்கிறது.

### Fees எப்படி?

ஒரு வருடத்துக்கான மொத்த செலவு ரூ. ஏழிலிருந்து பத்து லட்சம் வரை ஆகும். Fees, தங்கும் வாடகை, சாப்பாடு மற்றும் மீதிச் செலவு, புத்தகங்கள் வாங்குவதற்காகும் செலவு எல்லாம் இதில் அடங்கி விடுகிறது. சில யூனி வேர்சிட்டிகள் உபகார சம்பளம் கொடுக்கிறது. (கூடுதல் விவரங்களுக்கு British Council வெளி யீடான 'Study in Britain - Awards Guide' ஐ பார்க்கவும். விலை ரூ. 40.00).

### விண்ணப்பிப்பது எப்படி?

இந்தியாவிலுள்ள British Council Libraries/ British Libraries ல் 'Education Counselling Service' என்றொரு பிரிவு இருக்கிறது. இங்கே அனேகமாக எல்லா British Universities Prospectuses ம் கிடைக்கும். MBA ன் முழு விவரங்கள் அடங்கின புத்தகங்களும் இருக்கின் றன. அவைகளிலிருந்து உங்கள் தகுதிக்கேற்ற MBA Course ஐ நீங்களே தேர்ந்தெடுக்கலாம். நேரடியாக தொடர்பும் கொள்ளலாம். சொந்தச் செலவிலோ (அ) லோனிலோ படிக்க விரும்பு பவர்கள் British Council ன் Referral Service வழியாக மூன்று பல்கலை கழகங்களுக்கு ஒரே சமயத்தில் விண்ணப்பிக்கலாம். இதற்குக் கட்டணம் ஏதும் இல்லை.

**மேலும் விவரங்களுக்கு :**

1. Education Counselling Officer, British Council Division, 737, Anna Salai, Chennai

A UNIT OF
HARI
AGENCIES

# மாமி, அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சாவிய அவர்கிட்ட கொடுத்துடுங்க !



போகும் போது எங்க போறேன்னு கேட்கக் கூடாது ... இருந்தாலும்...

நீங்க கேட்கறதுக்கு முன்னாடி நானே சொல்லிடறேன் மாமி ! மயிலாப்பூர் லஸ் கார்னரில் இருக்கும் ஹரிப்பிரியாவுக்குத் தான் போறேன். ஹரிப்பிரியா பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே பெட்டிகோட்ஸ், கசிதார்கள், பேண்டீஸ், பிராக்கள், நைட்டீஸ், மாக்ஸிகள், கைக்குட்டைகள் எல்லாம் ஏராளமான வகைகள் தாராளமாக கிடைக்கிறது.

5 வது.
ஆண்டு
விழா

ஏப்ரல் 14
முதல்
21 வரை

மேலும், ஏப்ரல் 14லிருந்து 21 வரை நாம வாங்கற எல்லா துணிமணிகளோட ஒரு விசேஷ பரிசு காத்திருக்கு. ஹரிப்பிரியா ஹரி ஏஜென்ஸியோட ஒரு அங்கம்.

சித்த நாழி இருக்கியா ? நானும் கதவை பூட்டிண்டு பக்கத்தாத்தில சாவிய கொடுத்துட்டு வந்திடறேன்.




ஹரிப்பிரியா

பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம்

111 முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004.
போன் : 4942368.

- 600 002.

2. Librarian, The British Library, YMCA Building, Trivandrum - 695 001.

3. The Fulbright Commission (GMAT), 62, Doughty Street, London WC1 M2 LS.

— லலிதா. எம், திருவனந்தபுரம் - 1.

## மூன்றாம் பரிசு ரூ. 100/- பெறும் கட்டுரை

## (Regional College of Education) NCERT

ஏற்படுத்தியுள்ள இந்த கோர்ஸ் இந்தியாவிலேயே 4 இடங்களில்தான் உள்ளது. Southern Region - Mysore, Eastern Region - Bubaneshwar, North & Western Region க்கு ஆஜ்மீர், போபால் என்னும் இடங் களில் உள்ளது.

இதில் டிகிரி கோர்ஸோடு கூடவே பி.எட்டையும் Integrated Course ஆக, அதாவது பி.ஏ., பி.எஸ்ஸி., பி.காம் கூடவே பி.எட்டையும் ஒவ்வொரு வருடமும் சில பேப்பர்கள் பரீட்சை எழுத வேண்டும். மொத்தம் 4 வருடங்கள். மாணவ, மாணவிகள் எந்த Group ல் சேர்ந்து படிக்கிறார்களோ அதற்குத் தக்கபடி பி.எட் கோர்ஸ் உள்ளது. (English B.Ed., Science B.Ed., Maths B.Ed. என்று) 3 வருடங்கள் டிகிரி படித்து விட்டு, பிறகு பி.எட்க்கு அப்ளை செய்து படிப்பதை விட 4 வருட Integrated Course ஆன இதில் சேரலாம். NCERT ஏற்படுத்தியுள்ள இதில் கிடைக்கும் டிகிரி B.A. English Hons. B.Ed., B.Sc Maths Hons B.Ed., B.Sc Chemistry Hons B.Ed., B.Sc Physics Hons B.Ed என்று Hons Degree + Education Degree ஆக இரண்டும் சேர்ந்தாற்போல் கிடைக்கும்.

இதில் +2 வில் வாங்கியிருக்கும் மார்க் வாரியாக மெரிட்டில் வருபவர்களுக்கு மட்டுமே ஸீட் கிடைக்கும். அது தவிர S.C., S.T. இடங்களுக்கும் ஸீட் உண்டு. ஒவ்வொரு Department லும் இருக்கும் 50% மாணவ, மாணவிகளுக்கு Scholarship உண்டு. S.C., S.T க்கும் Scholarship சலுகை உண்டு. முதல் வருடம் ரூ. 75/- இரண்டாம், மூன்றாம் வருடங்கள் ரூ. 100/-, நான்காம் வருடம் ரூ. 125/-, என ஒவ்வொரு மாதமும் கிடைக்கும். என் பெண்கள் இருவரும் இதில் சேர்ந்துதான் புபனேஸ்வரில் பட்டம் பெற்றார்கள். தற்பொழுது சென்ட்ரல் ஸ்கூலிலிருந்து வந்து காம்பஸ் இண்டர்வியுவும் நடத்துவதாக தெரிகிறது.

மே மாதம் பரீட்சை முடித்தவுடன், ஜூன் மாதம் ஸ்கூல் திறந்ததும் வேலை கிடைத்து விடும்.

பட்டமேற்படிப்பு செய்ய விரும்புபவர்களுக்கும் எம்.ஏ., எட்., எம்.எஸ்ஸி., எட், என்ற 2 வருட Integrated Course உள்ளது. Education னிலும் எம்.எட்., எம்.ஃபில், பி.எச்டி பட்டம் பெறும் வாய்ப்பும் உள்ளது. ஒவ்வொரு படிப்பிற்கும் Scholarship ம் உள்ளது. ஹாஸ்டல் வசதியும் உள்ளதால் டிரான்ஸ்பர் ஆகும் பெற்றோர்களின் குழந்தைகளுக்கு இது ஒரு வரப் பிரசாதம். ஒவ்வொரு Region லும் பல மாநிலத்துக் குழந்தைகள் வந்து சேருவதால் பல மாநிலத்து கலை நயம், பண்பாடுகள் நிறைந்த குழந்தைகளாக பட்டம் பெற்று மாணவ மாணவிகள் வெளி வருகிறார்கள். கல்வித் தரமும் நன்றாக இருப்பதால் 2 டிகிரிகள் 4 வருடத்தில் கிடைத்தவுடன் எம்.சி.ஏ., எம்.பி.ஏ முதலிய நுழைவுத் தேர்வுகளிலும் இம் மாணவ மாணவிகள் சுலபமாக வெற்றி பெற்று விடுகிறார்கள்.

— சரோஜினி பாலசுப்ரமணியன், சென்னை - 61.

## சர்க்கரை ஆலைகளில் வேலை வாய்ப்பு

நான் பி.எஸ்ஸி வேதியியல் படித்து விட்டு அடுத்து என்ன படிக்கலாம் என யோசித்து கொண்டிருந்த போது, A.N.S.I கோர்ஸ் பற்றிய விவரங்களை அறிந்து படித்துப் பயன் பெற்றேன்.

இந்த கோர்ஸ் பி.எஸ்ஸி இயற்பியல் மற்றும் வேதியியல் படித்தவர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பாகும். சர்க்கரை ஆலைகளில் இவர்களுக்கு வேலை வாய்ப்புகள் அதிகம். அரசு சர்க்கரை

---

**காலையில் செய்த முளைப் பயிறு சாலட் மீந்து இருந்தது. அதனுடன் 4 பல் பூண்டு, இரண்டு பச்சை மிளகாய் வைத்து அரைத்து சப்பாத்தி மாவுடன் பிசைந்தேன். சுவையான க்ரீன் சப்பாத்தி கிடைத்தது.**

**— மஹிமா**





ஒரு நல்ல தந்தை தன் குழந்தைகளுக்காக
செய்ய வேண்டிய முதல் கடமை
அவர்களுடைய தாயை நேசிப்பதே.
— தியோடார் எம். ஹெஸ்ப்ரு
தகவல் : மஹிமா

ஆலைகளில் மட்டுமின்றி தரணி, கோத்தாரி, பன்னாரி அம்மன், சக்தி மற்றும் பெரிய சர்க்கரை ஆலைகளிலும் வேலை வாய்ப்பு பெறலாம்.

***கோர்ஸ் பற்றிய விவரம் :***

பெயர் : A.N.S.I. (Associateship Course in Sugar Technology)

தகுதிகள் : பி.எஸ்ஸி இயற்பியல் (அ) வேதியியல்.

காலம் : 2½ ஆண்டுகள்.

விளம்பரம் வெளியாகும் மாதம் : ஏப்ரல் (அ) மே (Employment News) இதழில்

ஆரம்பிக்கும் காலம் : ஜூலை மாதம்.

நுழைவுத் தேர்வு நடைபெறும் மையங்கள் டில்லி, கான்பூர், சென்னை, கல்கத்தா.

மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

Director, National Sugar Institute, Kallanpur, Kanpur - 208 017.

— மு. ஜோதி, திருச்சி - 3.

பட்டதாரிகளுக்குக் கூட வேலை கிடைப்பது அரிதாக இருக்கும் இத்தருணத்தில் பத்தாம் வகுப்பு தேறியவர்களின் கல்வித் தகுதியை உயர்த்தும் வகையில் பாலசேவிகா ஆசிரியர் பயிற்சி என்ற 11 மாத கால பயிற்சியை இந்திய குழந்தைகள் நல சங்கம், தமிழ்நாடு நடத்தி வருகிறது. வயது 18-35 மிகாமல் இருத்தல் வேண்டும்.

இப்பயிற்சி வகுப்பிற்கு கட்டணம் ஏதுமில்லை. பயிற்சிகாலத்தில் ஒவ்வொரு மாதமும் ரூ. 85/- உதவித் தொகையாக வழங்கப்படும். பயிற்சி முடித்த பிறகு இந்நிறுவனம் வேலை வாய்ப்பிற்கும் உதவுகிறது.

பத்தாம் வகுப்பு தவறிய பெண்கள் குறைந்த பட்சம் 2 ஆண்டுகள் ஏதேனும் கல்வி நிறுவனத்தில் பணிபுரிந்ததற்கான சான்றிதழுடன் விண்ணப்பிக்கலாம்.

பயிற்சி முடித்த பிறகு பால்வாடி, நர்ஸரி மற்றும் 3 ஆம் வகுப்பு வரை ஆசிரியராக பணி புரிய தகுதி பெற்றவர்களாவர்.

சென்னையைத் தவிர பிற மாவட்டங்களிலிருந்தும் விண்ணப்பிக்கலாம். விடுதி வசதியும் உண்டு.

மேலும் விவரம் அறிய தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

கௌரவ பொதுச் செயலாளர்,

இந்திய குழந்தைகள் நல சங்கம், பால சேவிகா பயிற்சி நிலையம், 5, 3 வது மெயின் ரோடு, மேற்கு ஷெனாய் நகர், சென்னை 600 030.

இரசாயனப் பாடத்தில் பட்டப் படிப்பு படித்தவர்கள் அதாவது (B.Sc. Chemistry Main) எடுத்துப் படித்தவர்கள் மேலே படிக்க விரும்பினால் அதற்கு ஒரு அருமையான வாய்ப்பு உள்ளது. பி.எஸ்ஸிக்கு மேல் பி.எட் அல்லது எம்.எஸ்ஸி என்று படித்து வேலைக்கு அலைவதை விட பி.எஸ்ஸி டெக் படித்தால் உடனே வேலை வாய்ப்பு உள்ளது. மும்பையில் உள்ள University Department of Chemical Technology (Autonomous) Matunga, Mumbai - 400 019 என்னும் கல்வி நிறுவனம் பற்றி அநேகருக்குத் தெரியாது. இதில் இளங்கலைப் பட்டதாரிகள் மட்டுமே விண்ணப்பிக்க முடியும். இதில் பி.எஸ்ஸி டெக்கில் மட்டுமே 7 பிரிவுகள் உள்ளன. Tech of Dyes, Tech of Foods, Tech of Oils, Fats and Waxes, Tech of Paints, Tech of Plastics, Pharmaceuticals Technology, Textiles Chemistry என்பவை அவை. இவை தவிர முதுகலைப் படிப்பிற்கும் பல்வேறு துறைகள் உள்ளன. இங்கு படித்துப் பட்டதாரியாகும் எல்லா மாணவ, மாணவியருமே இறுதியாண்டில் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு விடுகிறார்கள். 1934 முதல் இந்நிறுவனம் எண்ணற்ற மாணவர்களைத் தேர்ந்த வல்லுநர்களாக உருவாக்கி வருகிறது. இந்தியாவின் ஒவ்வொரு மாநிலத்திற்கும் குறிப்பிட்ட சீட்கள் உண்டு. மாணவர்களை மதிப்பெண்கள் ஒன்றை மட்டுமே தகுதியாக வைத்துத் தேர்ந்தெடுக்கும் உன்னதமான நிறுவனம் இது. மாணவ, மாணவியருக்குத் தனித் தனியான தங்கும் விடுதி வசதியும் உண்டு. நன்றாகப் படிக்கும் மாணவ மாணவியர் இதனால் பயன் பெறலாமே! மே அல்லது ஜூன் மாதத்தில் இக் கல்வி நிறுவனத்தின் விளம்பரம் ஹிந்து

மார்ச், ஏப்ரலில் கஷ்டப்பட்டு தேர்வு எழுதி, +2 எஸ்.எஸ்.எல்.சி. முடித்து ரூ. நூறும், இருநூறும் கொடுத்து விண்ணப்ப படிவங்களைப் பெறுகின்ற (சில) பலர், சிறுசிறு தவறுகள் செய்து அதை வீணடித்து விடுகின்றனர். எந்த விண்ணப்ப படிவம் பூர்த்தி செய்ய இருப்பினும் ஒரு ஜெராக்ஸ் எடுத்து அதை மாதிரி யாகக் கொண்டு - பலர் அறிந்த விஷயம்தான் - ஒரு முறைக்குப் பலமுறை அதில் கேட்கப்பட்டவைகளைப் படித்து திருப்தி அடைந்த பின்னரே ஒரிஜினலைப் பூர்த்தி செய்ய வேண்டும். ஏதேனும் சந்தேகம் இருப்பின் நமக்கு முன்னோடியாக உள்ளவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். தவறில்லை. பூர்த்தி செய்ததும் ஒரு முறைக்குப் பல முறை சரி பார்த்து, அதில் கேட்கப்பட்ட இணைப்புகளை D.D./Cheque/Postal Order/ Passport size photo/Certificates/Attestation சரியாக இணைத்து (Staple செய்தால் நலம்) அஞ்சலகத்திற்குச் சென்று எடை பார்த்துக் கொண்டு வேண்டிய தொகைக்கு அஞ்சல் தலைகள் ஒட்டி பின்னரே தபால் பெட்டி யில் போட வேண்டும். விண்ணப்பம் அனுப்ப கடைசித் தேதிக்கு நிறைய அவகாசம் இருக்குமாறு அனுப்புவது நல்லது. ஏதேனும் பிறி தவறினாலும் வேறு படிவம் வாங்கி அனுப்ப அப்போதுதான் இயலும்.

TNPCEE மற்றும் பிற மாநிலத்து நுழைவுத் தேர்வுகள், மற்றும் அகில இந்திய அளவில் மருத்துவப் பொறியியல் நுழைவுத் தேர்வுகள் ஏப்ரல், மே, ஜூன் மாதங்களில் பல எழுத இருப்பவர்கள் எங்கு தந்த விண்ணப்ப படிவம், எங்கிருந்து பெற வேண்டும், எவ்வளவு தொகை, எந்தத் தேதிக்குள் பூர்த்தி செய்து, யாருக்கு அனுப்ப வேண்டும், எந்த நுழைவுத் தேர்வு எந்த நாளில், எங்கு நடைபெறுகின்றது ஆகிய தகவல் களை சேகரித்து வெள்ளைத் தாளில் எழுதி ஒரு அட்டையில் ஒட்டி கண் பார்வை படுகின்ற இடத்தில் தொங்க விட்டால் தயார் செய்து கொள்ள ஏதுவாக இருக்கும்.

— ராதா ஸ்ரீதர், சென்னை - 78.

நாளிதழிலும் 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' நாளிதழிலும் வரும்.

— காந்தா ராஜகோபாலன்,
சென்னை - 26.

நம் நாட்டில் மீன் வளத்துறை மிகவும் முக்கியமான ஒன்று. நம் நாடு மீன் சம்பந்த மான பொருட்கள் ஏற்றுமதியில் பெரும்பங்கு வகிக்கிறது. இந்த மீன் வளத்துறையைப் பற்றி படிப்பதற்கென ஒரு பட்டப்படிப்பை 25 ஆண்டுகளுக்கு முன்பே ஆரம்பித்துள்ளனர்.

இந்தியாவில் பல்வேறு இடங்களில் 9 மீன் வளர் கல்லூரிகள் உள்ளன. அவற்றுள் தூத்துக் குடி, மங்களூர், ரத்னகிரி, புவனேஸ்வர் ஆகிய இடங்களில் உள்ள கல்லூரிகள் சிறந்து விளங்கு பவைகளாகும். பிளஸ் 2 தேர்வில் இயற்பியல் வேதியியல் மற்றும் உயிரியல் பாடங்களில் 60% க்கு மேல் மதிப்பெண்கள் பெற்றவர்களே தகுதி உடையவராகக் கருதப்படுவர். பின்பு நுழைவுத் தேர்வு எழுதி மெரிட் அடிப்படையில் தேர்வு செய்யப்படுவர். ஒவ்வொரு கல்லூரியிலும் வருடத்திற்கு 30 மாணவர்கள் மட்டுமே தேர்வு செய்வர்.

தமிழ்நாட்டில் மீன்வள அறிவியல் படிப்புக் கான நுழைவுத் தேர்வு கால்நடை அறிவிய லுடன் சேர்த்து நடத்தப்படுகிறது. இந்த இரண்டு படிப்புகளுக்காக (B.F.Sc & B.V.Sc.) தனி பல்கலைக் கழகம் "தமிழ்நாடு கால்நடை மருத்துவ அறிவியல் பல்கலைக் கழகம்" என்ற பெயரில் உள்ளது. தேர்வு பெற்றவர்களில் +2 வில் அதிக மதிப்பெண் வாங்கிய முதல் 3 மாணவர்களுக்கு வருடத்திற்கு ரூ. 3000/- என படிப்பு உதவித் தொகையும் அரசினால் வழங் கப்படுகிறது. B.F.Sc. நான்கு வருட படிப்பு ஆகும். ஆனால் மற்ற படிப்புகளுடன் ஒப்பிடும் போது செலவு குறைவு ஆகும்.

பட்டப்படிப்பு முடியும் தருவாயில் ஏரான மான் தனியார் நிறுவனங்கள் கல்லூரிக்கு வந்து நேர்முக தேர்வு செய்வார்கள். இதில் முதுநிலை (M.F.Sc.) மற்றும் டாக்டர் பட்டம் (PhD) மேற் கொள்ளவும் வசதிகள் உள்ளன. முதுநிலை படிப்பிற்கு 15 முதல் 20 மாணவர்களே தேர்வு செய்யப்படுவர். இளநிலை படிப்பு முடிந்த வுடன், இந்திய வேளாண்மை அறிவியல் ஆராய்ச்சிக் கழகம் நடத்தும் தேர்வு எழுதி, இந்திய அளவில் முதல் பத்து இடத்தில் வரு பவர்களுக்கு மாதம் ரூ. 1800/- படிப்பு உதவித் தொகையும் வழங்கப்படுகிறது. மாதாந்திர உதவிப் பணம் தவிர வருடத்திற்கு ரூ. 5000/- இதர செலவுகளுக்காக வழங்கப்படும். முது நிலை பட்டப் படிப்பில் மீன்வள அறிவியலில் ஆராய்ச்சி செய்து சிறந்த முடிவுகளை வெளி யிடுபவர் மட்டுமே தகுதியுடையவராக தேர்வு செய்யப்படுவர்.

மிகப் பெரிய தனியார் நிறுவனங்கள் அனைத்தும் மீன் வளத்துறைகளில் சிறந்து விளங்குவதால் வேலையில்லாத் திண்டாட்டம் என்பதே இத்துறையில் கிடையாது. கல்லூரி பேராசிரியர், ஆராய்ச்சியாளர் மற்றும் உதவி இயக்குநர் போன்ற வேலைவாய்ப்புகளும் உள்ளது. மத்திய வேளாண்மை மற்றும் உணவு ஆராய்ச்சி மையங்களில் வேலை வாய்ப்புகளில் M.F.Sc படித்தவர்களுக்கு முதலிடம் தரப்படு கிறது.

மீன் துறை சம்பந்தமாக M.Sc (Marine Biology) Diploma in Fisheries Science, M.Sc. (mari Culture) போன்ற படிப்புகள் இருந் தாலும் B.FSc மற்றும் M.FSc படித்தவர்களே முதன்மையாகக் கருதப்படுவார்கள்.

— ஆ. அருள்மொழி தேவி, மதுரை - 18.

வீடுகளுக்கும் / கடைகளுக்கும்

# மின் தடையால் அவதிப்படுகிறீர்களா?

வழங்குகிறோம் ! ITSE Silent Electronic ஜெனரேட்டர்

**Special Product Features**

- சப்தமில்லை
- புகையில்லை
- எரிபொருளில்லை
- தானியங்கி
- குறைந்த விலை
- 1 வருட உத்தரவாதம்

**இந்த ஜெனரேட்டர் மூலம் ஒரே சமயத்தில் உபயோகப்படுத்த கூடிய பொருட்கள்**

- Fans
- Tube Lights
- Bulbs
- Coolers
- Colour T.V. / VCR
- Washing Machine
- Computer etc.,

தானாகவே இயங்கக் கூடிய இந்த ஜெனரேட்டர் உங்கள் வீட்டில் மின் தடை ஏற்பட்ட உடனேயே எவருமே இயக்காமல் Automaticகாக மின் சப்ளையை ஏற்படுத்தி செயல்படும்.




Ranges : 150W, 250W, 350W, 500W, 750W, 1KVA, 1.5KVA, 2KVA and etc.,

*For Free Demonstration and more details please call us at :*

**ITS ELECTRONICS (P) LTD.**
16, College Road, Nanganallur,
Chennai - 600 114.
Ph : 2332808 Pager : 9632-754026

**RAGAVENDRA MARKETING**
27, Main Road, Masakali Palayam,
Coimbatore - 641 015.
Ph : 575933

*An essential product for every home.*

பொரியல் செய்தது போக மீதி ஒரு கப் அளவிற்கு வாழைப்பூ மீந்து விட்டது. அதை மிக்ஸியில் ஒரு சுற்று சுற்றி தோசை மாவில் கலந்து விட்டேன். தோசை அபார ருசி. எனது குழந்தைகள் பொறியலை விட தோசையை விரும்பி சாப்பிட்டார்கள்.

— யசோதா பழனிச்சாமி



**கட்டிடக்கலை உதவியாளர் படிப்பு :**

கட்டிடக்கலையில் மகளிருக்கென ஆர்க்கிடெக்சரல் அஸிஸ்டெண்ட்ஷிப் டிப்ளமா படிப்பு உருவாக்கப்பட்டுள்ளது. சென்னை தரமணியில் உள்ள டாக்டர் தர்மாம்பாள் அரசு மகளிர் பாலிடெக்னிக்கில் இந்தப் பாடப் பிரிவு உள்ளது.

இந்தப் படிப்பு மூன்றரையாண்டு காலம். இப்படிப்பில் சேர நுழைவுத் தேர்வு இடையாது. பதினைந்து மாணவிகள் மட்டுமே இங்கு சேர்க்கப்படுகிறார்கள். எஸ்.எஸ்.எல்.சி தேர்வில் பெற்ற மதிப்பெண்கள் அடிப்படையில் மாணவிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

அப்ளைடு மெக்கானிக்ஸ், பில்டிங் மெட்டீரியல்ஸ் அண்ட் கன்ஸ்ட்ரக்ஷன், சர்வேயிங், கட்டிடக்கலை வரலாறு, ஆர்க்கிடெக்ச்சரல் டிராயிங், ஸ்கெட்சிங் இன்டீரியர் டிசைன் அண்ட் டெகோரேஷன், ஸ்ட்ரக்ச்சரல் என்ஜினீயரிங், டைப்பிங் போன்ற பாடங்கள் இங்கு கற்றுத் தரப்படுகின்றன. படிப்புக் காலத்தில் மாணவிகள் இருமுறை தலா ஆறுமாதங்கள் கட்டிடக்கலை நிறுவனங்களில் பயிற்சிக்காக அனுப்பப்படுகிறார்கள். இதனால் சிறப்பான அனுபவம் பெற முடிகின்றது.

இந்த டிப்ளமா படிப்பை முடித்தவர்கள் இரண்டு ஆண்டு கால தொழில் அனுபவத்துக்குப் பிறகு இந்தியன் இன்ஸ்ட்டிடியூட் ஆஃப் ஆர்க்கிடெக்ச்சர் நடத்தும் தேர்வுகளை எழுதித் தேறி அந்த அமைப்பின் உறுப்பினராக பதிவு செய்து கொண்டு தனியே கட்டிடக்கலை நிபுணராக பணி புரியலாம்.

மத்திய, மாநில அரசுப் பணிகளிலும் வேலைக்குச் சேர நிறைய வாய்ப்புகள் கிடைக்கும். இது தவிர கட்டிடக்கலை நிபுணர்களிடம் பணிபுரியலாம். இன்டீரியர் டிசைன் அண்ட் டெகரேஷன் நிறுவனங்களிலும் வேலை வாய்ப்பு கிடைக்கும்.

தஞ்சை மாவட்டம் வல்லம், பெரியார் நூற்றாண்டு மகளிர் பாலிடெக்னிக், சிவகாசி அய்ய நாடார் ஜானகி அம்மாள் மகளிர் பாலிடெக்னிக் ஆகிய இடங்களிலும் இப்படிப்பு உண்டு.

— எம். சஜிதாபேகம், திருவரங்கம்.

டிசம்பர் '96 இதழில் "நூல்கள் பயிற்சி" பற்றிய கட்டுரை வெளிவந்தது. நான் நூலக அறிவியல் படித்தவன். எனவே அது தொடர்பான கூடுதல் தகவல் தர விரும்புகின்றேன்.

C.L.I.S. எனப்படும் நூலகத் தகவல் அறிவியல் சான்றிதழ் படிப்பு சென்னை பல்கலைக் கழகம் மட்டுமின்றி மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், இந்திராகாந்தி திறந்த வெளி பல்கலைக்கழகம் முதலியவற்றில் பயிற்றுவிக்கப்படுகின்றது. ஆனால் இவற்றில் சென்னையைத் தவிர மற்ற பல்கலையில் +2 வைத் தவிர கூடுதல் கல்வித் தகுதி வேண்டும் மற்றும் குறைந்தது 2 ஆண்டுகள் நூலகராக பணியாற்றிய அனுபவம் வேண்டும். மேலும் அங்கெல்லாம் ஆங்கில மீடியம் மட்டும்தான். தமிழ் நாட்டைத் தவிர வெளி மாநில பல்கலையிலும் இப்பயிற்சி உண்டு. அவை D.L.I.S எனப்படுகிறது. Diploma in Lib. and Information Science ஆகும். இது ஒரு வருட பயிற்சி ஆகும். கல்வித் தகுதி +2 மட்டும்தான். தற்போதைய சூழ்நிலையில் வேலை வாய்ப்பிற்கு அதிக வாய்ப்புடையது நூலகர் பயிற்சி மட்டுமே!

| University | Period | Eligibility |
|---|---|---|
| C.L.I.S. (Madras) | 3 months | +2 |
| D.L.I.S. (Delhi and others) | 3 months | +2 |
| B.L.I.S. | 1 year | Any Degree |
| M.L.I.S. | 1 year | B.L.I.S |

— ஜி. நாகராஜன், சென்னை - 31.

## மங்கையர் மலர் & ஏ.ஆர்.சி ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும்

## ரூ. 3000/- பெறுமானமுள்ள ஏ.ஆர்.சி. ஜுவல்லர்ஸ் தங்க நகை பரிசு பெறும் கட்டுரை :

# முள்ளை முள்ளால் எடுப்பது போல....

"கர்ணன் கவசக் குண்டலத்தோடு, பிறந்ததாக வரலாறு. எனது பாதங்களும் "கொலுசோடு" பிறந்தது போலவே எப்போதும் கொலுசின்றி நான் இருந்ததே இல்லை.

புது மாடல் கொலுசு முதல் பழைய மாடல் கொலுசு வரை

• பிப்ரவரி இதழில் வெளியாகிய 'மூக்குத்தி' கட்டுரையில் பரிசு பெற்ற சந்திரசேகர், ஏ.ஆர்.சி. உரிமையாளர் கீதாவிடமிருந்து பரிசைப் பெறுகிறார்.



படம் : ராஜ்நாராயண்

# பொன்னான தருணங்கள்

...ன்டம் இருக்கும்.

(அது வெள்ளியில் ஆனது என்றாலும் சரி, சாதாரண கில்ட், போட்ட கொலுசு என்றாலும் சரி.) வெள்ளியால் ஆன கொலுசுகள் மட்டும் பனிரெண்டு வைத்திருந்தேன். பணம் அதிகம் இருந்தால் அதனை வெள்ளி கொலுசாக மாற்றி விடுவேன். இதனால் எனக்கும், எனது உறவினர்கள், மற்றும் தோழிகள், ஏன் எனது கணவருக்குமிடையே கூட அடிக்கடி பிரச்னைகள் எழும்.

சிறிய அளவில் நிகழ்ந்த பிரச்னைகள் ஒரு நாள் பெரிய அளவில் வெடித்தது. பல பேர் முன்பு எனது கணவர் கோபமாக,

"கொலுசுகளை வாங்கியே எனது

# பொன்னைப் போல் கோதுமை உங்கள் பொன்னான வாழ்வுக்கு !

சக்தி!

சத்து!



சலுகை!

சுவை!

**வாங்கத் தூண்டும் விலை**

ஒரு கிலோ
மைதா - ரூ.6.50

ஒரு கிலோ
ரவை - ரூ.6.60

ஒரு கிலோ
ஆட்டா மாவு - ரூ.5.50

- எவ்வயதினருக்கும் எந்தப் பருவத்திற்கும் ஏற்றவை கோதுமைப் பண்டங்கள் மற்றும் கோதுமைப் பொருட்களான மைதா, ரவை ஆட்டா மாவு ஆகியவை.




***கோதுமை மற்றும் கோதுமைப் பொருட்களை அரசு பொது விநியோக அங்காடிகளில் குறைந்த விலைக்கு வாங்கலாம். விரும்பும் உணவு வகை செய்யலாம்.**

தமிழ் நாடு அரசு
உணவுப் பொருள் வழங்கல் மற்றும்
நுகர்வோர் பாதுகாப்புத் துறை




தமிழ்நாடு கோதுமை உருளை மாவு ஆலைகள் சங்கம்
129 அ பிரிவு முதல் மாடி, சிவாலாயா கட்டிடம்
119, எத்திராஜ் சாலை, சென்னை - 105.
தொலைபேசி: 8265295, 8225248, 8225236.
தொலை நகல் (FAX): 8234569

அன்றாடம் கோதுமை உண்ணுங்கள்; ஆரோக்கிய வாழ்வை உறுதி செய்யுங்கள்



காசை வீணாக்குகிறாய், போதாத குறைக்கு நீ சம்பாதிக்கும் காசையும் கரியாக்குகிறாய். காசைக் கரியாக்கும் நீ பள்ளிக்கூடத்தில் சேமிப்பைப் பற்றி பிள்ளைகளுக்கு சொல்லித் தருவதும் கூட வீண்தான்" என்றார்.

பலபேரின் முன்பு எனது "ஆசிரியை தொழிலை சம்பந்தப்படுத்தி எனது ஆசையையும் கிண்டலாக பேசி விட்டது எனக்கு மன தளவில் பாதிப்பை ஏற்படுத்தி விட்டது. அன்று எடுத்தேன் சபதம். "அவரே சொன்னால் தவிர இனி கொலுசு அணியவே கூடாது" என்று.

அனைத்துக் கொலுசுகளையும் பீரோவில் வைத்துவிட்டேன். அதன் பின் "கொலுசு" அணியாமல் நாட்கள் உருண்டோடின.

எப்படியிருந்தாலும் பேசும் உலகம் தானே இது. பார்ப்பவர் எல்லோரும் ஏன் டீச்சர் இப்போதெல்லாம் கொலுசே போடுவதில்லை என்றனர். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான பதிலைக் கூறி தப்பித்தேன். எனக்கும், அவருக்குமிடையே மற்றபடி பிரச்னை ஏதுமில்லை, சாதாரணமாகவே இருந்தோம் என்றாலும் மனதில் ஏதோ ஒரு உறுத்தல் இருந்து கொண்டே இருந்தது. சந்தேகம்தான் வாழ்வை சந்தோஷமின்றி வைக்கும் என்பார்கள். ஆனால் மனதில் தைக்கும்படியான வார்த்தைகள் கூட வாழ்வில் சந்தோஷத்தைக் குறைக்கும் என்பதை இருவருமே உணர்ந்தோம். வீட்டில் பழைய மகிழ்ச்சி சிறிது குறைந்தே இருந்தது.

ஒரு நாள் அவருக்கு ஒரு கம்பெனியில் இருந்து இண்டர்வியூ வந்தது. அனைத்துத் "தேர்விலும்" தேறி விட்டார். ஆனால் "ரூ. 15000/-" டெபாஸிட் கட்டினால் வேலை. நல்ல உத்தியோகம், நல்ல சம்பளம். மூன்றே நாட்களில் பணம் கட்ட வேண்டிய நிலை. யார் யாரிடமோ கேட்டும் பலனில்லை. நமது நாட்டில் அறிவுரைகள் சொல்ல மட்டுமே ஆயிரம் பேர் வருவார்கள். உதவி என்றால் ஓடித்தானே ஒளிவார்கள்.

கடைசியாகக் கழுத்து, கை, விரல்களில் என இருந்த செயின், வளையல், மோதிரம், அனைத்தையும் வங்கியில் வைத்தேன். ரூ. 13,000/- தேறியது. எவ்வளவோ கேட்டும் ரூ. 15,000/- கிட்டவில்லை. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போய்விடுமோ என்ற பயம். எப்படியாவது ரூ. 2000/- இருந்தால் போதும் என்ற துடிப்பு. தூக்கமே பறி போனது. இருவரும் மன பாரத்துடன் யோசித்துக் கொண்டிருந்தோம்.

"அடகு வைக்கக் கூட வேறு தங்கமோ, வெள்ளிப் பொருட்களோ இல்லையே" என்று அவர் சொன்ன போதுதான் மின்னல் போல யோசனை உதித்தது. அதன் பின் ஜெட் வேகத்தில் பீரோவைத் திறந்தேன். வெள்ளி கொலுசுகளை அள்ளினேன். வேண்டாம் என தடுத்த அவரைச் சமாதானம் செய்தேன். தனியார் அடகுக் கடையில் அவைகளை அடமானம் வைத்தேன்.

எதிர்பாராத விதமாக ரூ. 2500/- கிடைத்தது. 'மகிழ்ச்சி' என்றால் என்ன என்று அன்றுதான் உணர்ந்தேன். பிறகென்ன? "டெபாஸிட்" கட்டி வேலையில் அமர்ந்தார். மதிப்பான வேலை. நல்ல சம்பளம்.

காலத்தினால் செய்த உதவியாக சிறிய கொலுசுகள் கூட சமயத்தில் கை கொடுத்து உதவியதை அவர் மனம் எண்ணி எண்ணி நெகிழ்ந்தது. அன்று கொலுசுகள் வாங்குவது வீண், அது ஒரு சேமிப்பு அல்ல என மனம் புண்பட பேசிய செயலுக்காக இன்றும் கூட வருந்துவார்.

முதல் மாத சம்பளத்தில் அவர் வாங்கி வந்தது என்னவென்று சொல்லவும் வேண்டுமா?

முள்ளை முள்ளால் எடுப்பது போல, கொலுசால் ஏற்பட்ட மனப்போராட்டத்தை கொலுசு வாங்கி வந்து அணிவித்தே போக்கினார். இப்போதெல்லாம் யாராவது புது மாடல் கொலுசு எது என்றால் பட்டென பதில் கூறுமளவு அதில் எக்ஸ்பர்ட் ஆகிவிட்டார்.

— க. ஈஸ்வரி கணேஷ், கள்ளக்குறிச்சி.

## பிரசுரத்திற்கு....

# இரவில் கேட்ட கொலுசுச் சத்தம்!

எங்களுடையது பெரிய குடும்பம். மாமியார், மாமனார், நாங்கள் எங்கள் இரண்டு குழந்தைகள், இவருடைய பாட்டி, புதிதாகக் கல்யாணமான மைத்துனர், ஓர்ப்படி, கல்யாணமாகாத இரண்டு நாத்தனார், இரண்டு மைத்துனர் என்று...

ஒரு நாள் ராத்திரி நல்ல உறக்கத்தில் இருந்த நான், 'கிளுங்' என்ற சப்தம் கேட்டு விழித்தேன். சொப்பனமா அல்லது நிஜமா என்று

புரியவில்லை. அது ஒரு கொலுசு சப்தம் போல் இருந்தது. சொப்பனம்தான் என்று தீர்மானித்து மறுபடியும் உறங்க இருந்த எனக்குக் கொலுசு சப்தம் மறுபடியும் கேட்டது. யாரோ கொலுசு போட்டு நடக்கும் சப்தம், யாராக இருக்கும்? யோசித்தேன். என் இரண்டு நாத்தனாரும் கொலுசு அணிவார்கள் ஆனால் அதில் சலங்கை கிடையாது. அதனால் சப்தம் கேட் காது. புதியதாக மணமாகி வந்த ஓர்ப்படி கொலுசு அணிவதில்லை. கல்யாணத்தின் போதும் கொலுசு இடவில்லை. வேறு யாராக இருக்கும்? புரியவில்லை. ஆனால் யாரோ கொலுசுக் காலுடன் இப்படியும் அப்படியும் நடப்பது போல சப்தம் வந்தது.

எனக்குப் பேய், பிசாசு இவைகளில் பெரிய தாக நம்பிக்கையில்லை என்றாலும் 'பயமாக' இருந்தது. பயந்து நடுங்கி என் கணவரை எழுப் பினேன். அவர் எழுந்தபோது என் அனுபவத் தைக் கூறினேன்.

"எங்கே? ஒரு சத்தமும் இல்லையே" என் றார்.

நிஜம்தான். அப்போது சப்தம் நின்று விட் டிருந்தது. சுமார் ஐந்து நிமிடம் கஷ்டப்பட்டு அவர் விழித்திருந்தார். சப்தம் ஒன்றும் கேட்க வில்லை.

"ஏதாவது கற்பனை செய்து தூக்கத்தைக் கெடுத்துக்காதே. காலையில் ஆபீஸ் உண்டு" என்று கூறிவிட்டு திரும்பிப் படுத்து அடுத்த நிமிடம் குறட்டை விட்டார்.

நடந்தது நிஜமா? கனவா? என்னால் தீர்மானிக்க முடியவில்லை. கொஞ்ச நேரம் கழிந்து சிணுங்கலாகக் கொலுசு சப்தம் மறு படியும் கேட்டது. இடைவிட்டு கேட்டுக் கொண்டே இருந்தது.

எங்கள் வீட்டில் மாடியில் மூன்று ரூம்கள் உண்டு. ஒன்று எங்களுடையது. எதிரில் என் மைத்துனருடைய பெட்ரூம். மூன்றாவது ரூம் காலி. அங்கே ஃபேன் இல்லை அதனால் யாரும் படுத்துக் கொள்ள மாட்டார்கள். வேறே




எல்லாரும் கீழேதான். எந்த ரூமிலிருந்து சப்தம் வந்தது என்று புரியவில்லை. தூங்காமல், தூங்க முடியாமல் படுத்துக் கிடந்தேன். அறியாமல் கண்ணயர்ந்த போது கனவில் சினிமா ஸ்டைலில் மோகினிப் பிசாசுகள் ஜில் ஜில் என்று நடனமாடினார்கள். பயந்து நடுங்கி உறக்கமும், விழிப்புமாக எப்படியோ விடிந்தது.

மாடியிலிருந்து கீழே இறங்க பயம். பேசாமல் படுத்துக் கிடந்தேன். கீழே மாமியார் மாமனார் சப்தம் கேட்டு தைரியத்தை வர வழைத்து இறங்கிப் போனேன். ஆபீஸ் போக வேண்டுமே! அன்றாட வேலைகளை துவக்கி னேன். திரும்பிப் பார்த்தால் என் ஓர்ப்படி இறங்கி வந்து கொண்டிருந்தாள். அவள் காலில் ஒரு புதிய கொலுசு.

பின்னால்தான் விவரம் புரிந்தது. அன்று அவள் பிறந்தநாள். அதனால் என் மைத்துனர் அவளுக்கு 'சர்ப்ரைஸாக' கொலுசு வாங்கி வந்து ராத்திரி 12 மணிக்கு வாழ்த்தி கொலுசு பரிசாகக் கொடுத்திருக்கிறார். அவளும் புதிய கொலுசு கிடைத்த சந்தோஷத்தில், ராத்திரி என்றும் யோசிக்காமல் அதை அணிந்து ரூமில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து ரசித்திருக்கிறாள்.

நான் என் அனுபவத்தை யாரிடமும் சொல்லவில்லை, 'எல்லாரும் கேலி செய்வார் களே' என்று. ஆனால் என் கணவர் காலையில் எல்லோர் முன்பும் விஷயத்தைப் போட்டு உடைத்தார். சொல்ல வேண்டுமா எல்லோரு மாக எப்படிச் சிரித்தார்கள் என்று இப்போதும் நினைத்தாலும் சிரிப்பு வருகிறது. ஆனால் அன்று இரவு நான் நடுங்கிய நடுக்கம் எனக்குத் தான் தெரியும்.

— தைலாம்பாள் நாராயணன்,
திருவனந்தபுரம்.

## நாத்தனாரின் சிரிப்பு!

கொலுசு என் வாழ்வில் மூன்று நிமிடங்கள் ஏற்படுத்திய பரபரப்பை என்னால் மறக்கவே முடியாது. நாங்கள் என் கல்யாண நிச்சயதார்த்தத்திற்காக கிருஷ்ணகிரி கிளம்பிக் கொண்டிருந்தோம். கிளம்புவதற்கு முன் கோவிலுக்குச் சென்றிருந்தோம். என்னுடைய வலது கால் கொலுசில் ஏற்கெனவே திருகு தொலைந்து போய் கம்பி போட்டு நன்றாக முறுக்கியிருந்தேன். நாங்கள் கோவிலுக்குச் சென்ற பொழுது என்னுடைய இடது கால் கொலுசு கழன்று விழுந்து விட்டது. என் னுடைய நல்ல நேரம் யாரோ ஒருவர் அதை எடுத்துக் கொடுத்தார்கள். நானும் ஊருக்குச் செல்லும் அவசரத்தில் அவருக்கு நன்றி சொல்லிவிட்டு கொலுசையும் அணிந்து கொண்டு கிளம்பி விட்டேன்.

நிச்சயதார்த்தம் தொடங்கும் நேரமும் ஆகி



விட்டது. மணையிலும் உட்கார வைத்து விட்டார்கள் எங்கள் வழக்கப்படி நாத்தனார் மணப்பெண்ணுக்குக் கால்களில் நலுங்கு வைக்க வேண்டும். நான் அப்பொழுதுதான் என்னுடைய இடது காலில் கொலுசு இல்லாததைப் பார்த்தேன். எனக்குப் 'பக்'கென்று இருந்தது. முதன் முதலில் புகுந்த வீட்டில் பார்ப்பவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள், ஏதாவது அபசகுனமாக எடுத்துக் கொள்வார்களோ என்ற பயம் வேறு. என் அம்மாவிடம் சொன்னால் அவர் வேறு பல்லைக் கடிக்கிறார்கள். வலது கால் கொலுசை கழற்ற முடியாது என்பது தெரியும். காரணம் அது கம்பி வைத்து நன்றாக முறுக்கப்பட்டுள்ளது.

விசேஷமும் தொடங்கிவிட்டது. நான் மிகுந்த தயக்கத்துடன் என்னுடைய வலது காலை காண்பித்தேன். என்னுடைய நாத்தனார் மெதுவாக ஆனால் அடக்க முடியாமல் சிரிக்கத் தொடங்கினார். நான் ஒன்றுமே புரியாமல் என்னுடைய காலைப் பார்த்தேன். என்னாலும் சிரிப்பை அடக்க முடியவில்லை. ஆமாம். என்னுடைய வலது காலில் இரண்டு கொலுசுகள் இருந்தன. கோவிலில் யாரோ கொலுசை எடுத்துக் கொடுத்த பிறகு கிளம்பும் அவசரத்தில் ஒரே காலில் இரண்டு கொலுசையும் போட்டு விட்டேன். அப்பொழுது முதல் எந்த விசேஷம்நடந்தாலும், "மன்னி ஒரு காலில் எத்தனை கொலுசு போட்டிருக்கிறீர்கள்" என்று என் நாத்தனார் கேட்கத் தவறுவதே இல்லை.

**— ஆர். சுஜாதா, புதுதில்லி - 5.**

## சம்சார கொலுசே சங்கீதம்

என் பிறந்தகத்தில் நான் செல்லப் பெண். மிகவும் கலகலப்பான சுபாவம். கண்ணாடி வளையலும் கால் கொலுசும் மிகவும் பிடித்தமான பொருட்கள். என் பெட்டியில் கலர் கலராகக் கண்ணாடி வளையலும் 4, 5 ஜோடியாவது வெள்ளிக் கொலுசும் இருக்கும். எனக்குப் பதினெட்டு வயதாகும் பொழுது என் தாய் மாமா எனக்குப் பட்டையாக நிறைய சலங்கை மணிகள் வைத்த கொலுசு ஒன்றை பம்பாயிலிருந்து வாங்கிப் பரிசளித்தார். அந்தக் கொலுசு வந்தபின் பழைய கொலுசுகளை நான் அணிந்ததில்லை. நடக்கும் பொழுது அதில் வரும் ஜல் ஜல் சத்தமும், கண்ணாடி வளையலிலிருந்து வரும் கல கல சத்தமும், என் பேச்சு சத்தமுமாக நான் இருக்கும் இடம் எப்பொழுதும் களைகட்டும்.

எனக்குத் திருமண ஏற்பாடு நடந்தது. மாப்பிள்ளை வீட்டார் பெண் பார்க்க வந்தனர். எவ்வளவுதான் குறும்பு செய்தாலும் திருமணம் என்று வந்தால் பயம்தானே! பெண் பார்க்கும் படலத்தில் தலையைக் குனிந்து காப்பி கொடுத்து விட்டு ஓடி வந்து விட்டேன். அப்பொழுது "என்னவர்" கொலுசுச் சத்தத்தை கவனித்து இருக்கிறார். வீட்டில் எல்லோரும் பெண் பிடித்திருப்பதாகக் கூற, இவர் நான் பெண்ணைச் சரியாகப் பார்க்கவில்லை என்று கூற, என் மாமனார் 'நீ உன் சிநேகிதனுடன் சென்று, பார்த்து விட்டு வா எப்படி இருந்தாலும் இவள்தான் என் மருமகள்' என்று கூறியிருக்கிறார். இவரும் எங்கள் வீட்டிற்கு வந்து அப்பாவின் இல்லாத மூக்குக் கண்ணாடியை மறந்து வைத்து விட்டார் என்று கூறினார். அம்மா 'மாப்பிள்ளைக்குக் காப்பி கொண்டு போய் கொடு' என்று கூறினார். நான் வெட்கத்துடன் மறுத்து விட்டு அடுத்த அறைக்கு ஓடி விட்டேன். அப்பொழுதும் கொலுசு சத்தத்தை கவனித்திருக்கிறார். (கனவில் கொலுசு போட்டவெள்ளைக் கால்கள் குளோசப்பில் ஓடி இம்சித்ததாகப் பின்னாளில் கூறினார்).

திருமணம் முடிந்து புக்ககம் சென்றேன். அவருடைய பாட்டி 'உன் மாமியாருக்கும் கணவருக்கும் கொலுசுச் சத்தமே பிடிக்காது கழட்டிப் பெட்டியில் வைத்து விடு' என்றார். நான் என் ஆசைகளை எல்லாம் சேர்த்து கொலுசுடன் கழற்றி பெட்டியில் வைத்தேன். அவர்கள் வீட்டு வழக்கப்படி புதுப் பெண் தன்



கணவனுக்கு உணவு பரிமாற அழைத்தனர். எல்லோரும் சென்றுவிட நானும் அவரும் மட்டும். கை கால்கள் உதறலுடன் நான் உணவு பரிமாறினேன். என்னைப் பார்த்து புன்சிரிப்புடன் "கொலுசு எங்கே காணோம்" என்றார். (அவர் என்னுடன் பேசிய முதல் வார்த்தையே கொலுசு என்பதுதான்) நான் பயந்து கண்களில் குபுக் என நீர்முட்ட "அதை அப்போதே கழட்டி பெட்டியில் வைத்து விட்டேன்" என திக்கித் திணறினேன். "உன் கொலுசுச் சத்தம் எனக்கு மிகவும் பிடிக்கும் போய் போட்டுக் கொள்" என்றார். அவரே போட்டும் விட்டார். நான் என்னையே மறந்தேன்.



இந்தப் பொன்னான தருணத்தை என் வாழ்நாளில் மறக்கவே முடியாது. பதினோரு வருடங்களுக்குப் பின்பு இன்றும் ஏதாவது சினிமாவிலோ, கதைகளிலோ, கொலுசு பற்றி காட்சி வந்தால் நாங்கள் குழந்தைகளுக்குத் தெரியாமல் அர்த்தத்துடன் சிரித்துக் கொள்கிறோம். இந்த மகிழ்ச்சி என் "சஷ்டியப்த பூர்த்தி"க்குப் பின்னும் தொடர வேண்டும் என்று ஆண்டவனை பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

— எம். புனிதவதி முருகதாஸ்,
கோயமுத்தூர் - 9.

## இப்போது வயதும் இல்லை!

அப்போது எனக்கு வயது 18 தான். ஏழ்மையில் பிறந்த காரணத்தால் சின்ன வயதிலேயே என் திருமணம் முடிந்து விட்டது. என் இரண்டாவது பிரசவத்திற்காக என் தாய் வீட்டிற்கு வந்து இருந்தேன். பிரசவம் சிரமமாக இருந்ததால் தனியார் ஆஸ்பத்திரியில் காண்பிக்க வேண்டிய நிலை. பிரசவம் நல்ல முறையில் நடந்து அழகான ஆண் குழந்தை பிறந்து விட்டது. ஆனால் டாக்டருக்குக் கொடுக்க வேண்டிய பீஸ் 80 ரூபாய் எனக் கூறிவிட்டனர். பிறந்த குழந்தையைப் பார்த்து சந்தோஷப் படுவதா? டாக்டருக்குக் கொடுக்கப் பணம் இல்லாத நிலைக்காக வருத்தப்படுவதா? என மனதில் வேதனையுடன் இருந்தேன்.

என் தாய் வீட்டில், 'இது இரண்டாவது பிரசவம் தானே நாம் ஏன் செய்ய வேண்டும். அவள் கணவர் பார்த்துக் கொள்வார்' என இருந்து விட்டனர். என் கணவரோ என் தாய் வீட்டில் செய்வார்கள் என இருந்து விட்டார். யாரும் அக்கறை எடுக்காமல் இருந்து விட்டனர். யாரிடம் சொன்னாலும் மன வருத்தம் தான் மிஞ்சும் என்ற நிலையில் நான் வீட்டிற்குப் போகும் மூன்றாம் நாளும் வந்து விட்டது.

என்ன செய்வது என்று புரியாத போது நான், 'போட்டிருந்த கொலுசு ரொம்பப் பழசாகி விட்டது. அறுந்து விடும் போல் உள்ளது. இதை விற்று விடுங்கள்' என என் தோழியிடம் கொடுத்து விற்று வந்த பணத்தில் டாக்டருக்குப் பீஸ் கொடுத்தேன். அதன் பின் என் குழந்தைகள் இன்று வளர்ந்து பெரியவர்களும் ஆகிவிட்டனர். எவ்வளவோ செலவு செய்து எத்தனையோ பொருட்களை வாங்கியும் விட்டேன். ஆனால் அதற்குப்பின் என் காலிற்குக் கொலுசு மட்டும் என்னால் வாங்கவே முடியவில்லை. இன்று வரை என் வாழ்வில் நிறைவேறாத ஆசையாகவே இருந்து விட்டது. இனியும் அந்த ஆசை நிறைவேறாது. ஏனென்றால் கொலுசு போடும் வயதைக் கடந்து விட்டேனே நான்!

— எம். மணிமேகலை, நைனார்பாளையம்.

---



வீட்டில் சில ஆரஞ்சுப் பழங்களை வாங்கினேன். அவற்றில் ஒன்றிரண்டு மறுநாள் காலையில் கெட்டுப் போயிருந்தது. விலை கொடுத்து வாங்கியதை தூர எறிய மனம் இல்லை. பூஜைப் பாத்திரங்கள், தாம்பாளம் முதலியவற்றை இந்தப் பழங்களைக் கொண்டு தேய்த்தேன். புளியும் மிச்சம். பாத்திரங்களும் பளப்பள.

— லக்ஷ்மி சிவகுமார்

# பழையது, புதியது

# இரண்டையும் கலக்காதீர்கள்

"இன்று ப்யூட்டி பார்லருக்கு வருவது என்பதையே ஃபேஷனாக நினைக்க ஆரம்பித்து விட்டார்கள். பத்தாண்டுகளுக்கு முன் இதே மதுரையில் நான் ப்யூட்டி பார்லர் ஆரம்பித்தபோதே பெண்கள் தயங்கித் தயங்கி வருவார்கள். 'நான் வந்தேன்னு யார்கிட்டேயும் சொல்லிடாதீங்க' என்பார்கள். இப்போதைய நிலைமையை பார்க்கும் போது எந்த அளவு மக்கள் மாறியிருக்கிறார்கள் என நீங்களே தெரிந்து கொள்ளலாம்."

எனச் சிரிக்கிறார் மதுரையில் ஷிபானி ப்யூட்டி பார்லரும், ஃபிட்னெஸ் சென்டரும் நடத்தி வரும் மல்லிகா கௌதம்.

**"தமிழகத்தின் தென்பகுதி. அதனால் இங்கு வருபவர்களும் உயர் வகுப்புப் பெண்கள் மட்டுமாக இருக்குமோ" என்ற போது,**

"நல்லா சொன்னீர்கள் போங்கள். இங்கு வருபவர்களில் முக்கால்வாசிக்கும் மேலாக நடுத்தர வர்க்கத்துப் பெண்கள்தான். அதே போல பாட்டிகள் பேத்தியை அழைத்துக் கொண்டு வந்து 'இந்தப் பிள்ளைக்கு அந்த சினிமாவில வர்ற நடிகை மாதிரி செஞ்சுவுடு' என்றும் சொல்கிறார்கள்.

நீங்கள் நினைப்பது போல அழகு நிலையத்திற்கு வருவது என்பது இன்றைய நிலையில் ஆடம்பரமான ஒன்று அல்ல. பெண்கள் தங்களுக்கும் ஒரு 'ரிலேக்ஸேஷன்' வேண்டும் என்று நினைக்கிறார்கள்.

நமக்கு ஒருவர் தலைபின்னி விடுவதே எவ்வளவு சுகமாக இருக்கும்? அதே போலத்தான் பேஷியல், மஸாஜ் எல்லாமே மற்றவர்கள் செய்து விடும்போது 'ரிலாக்ஸ்' செய்து கொள்ள முடியும். தாங்களும் நன்றாக இருக்க வேண்டும், அப்போதுதான் தன் குடும்பத்தை நன்றாக பார்த்துக் கொள்ள முடியும் என்ற எண்ணம் வந்திருக்கிறது. இது நிச்சயமாக ஆரோக்கியமான விஷயம்தான்.

இத்தனை ஆண்டுகளில் இதையெல்லாம் நான் பார்த்ததால்தான் ஃபிட்னெஸ் சென்டரும் பெண்களுக்காகவே முதன் முதலில் ஆரம்பித்தேன். நிறைய பேர் வந்து இங்கே உடல் இளைக்க, வயிறு குறைய, இடுப்புப் பகுதி சிறுக்க என கருவிகளின் மூலம் பயிற்சி செய்கிறார்கள்.

நான் வருடாவருடம் வெளிநாடுகளில் நடக்கும் அழகுக் கலை நிபுணர்களின் மாநாட்டிற்குப் போகிறேன். அங்கே நடக்கும் கண்காட்சிகளில் நம் நாட்டிற்கு ஏற்ற அழகுப் பயிற்சிக் கருவிகளை வாங்கிவிடுவேன். அதே போல மூலிகை 'பேக்'குகள் வாங்கிவிடுவேன்.

**''வெளிநாட்டிலிருந்தா மூலிகைகள் வாங்கி வருகிறீர்கள். மூலிகைக்கே பெயர் போன நாடாச்சே நம் நாடு...?''**



> **தங்களுடைய குறைகளை மறைக்க முயல்பவர்கள் தங்களை பாராட்டிக் கொள்கிறார்கள்.**
>
> **— நியெட்ஷே**
>
> **தகவல் : சித்ரா**

"உண்மைதான். மூலிகைகள் நம் நாட்டி லிருந்துதான் ஏற்றுமதியாகிறது. ஆனால் அதனை விஞ்ஞான பூர்வமாகப் பிரித்து மிகச் சுத்தமாக, மிக அற்புதமான முறையில் அழகு சாதனப் பொருட்களாகத் தயாரிக்கிறார்கள். பல்வேறு விதமான சருமத்திற்கு அந்தந்த சருமத்திற்கேற்ப தயாரிக்கிறார்கள். அவற்றைப் பயன்படுத்தும் போது மிகச் சிறந்த பலன் கிடைக்கிறது. நான் அவற்றை நிறையவே வாங்கி வந்து என்னிடம் பயிற்சி பெற்ற மாணவிகளுக்குத் தருகிறேன். ஏனெனில் இங்கே அவற்றை வாங்கப் போகும் போது விலை அதிகமாக இருக்கும்."

**"உங்கள் மாணவிகள் தனியாக அல்லவா பார்லர் வைத்திருப்பார்கள்?"**

"அதனால் என்ன? என் மாணவிகள் இரு பதுக்கும் மேற்பட்ட பார்லர்களை வைத்திருக் கிறார்கள். மதுரையிலேயே கிட்டத்தட்ட இரு நூறு பார்லர்கள் இருக்கின்றனவாம்! சுத்துப் பட்ட பல ஊர்களில் ஏன் உசிலம்பட்டியிலும் கூட ப்யூட்டி பார்லர் இருக்கிறது!" என்று அவர் சொன்னபோது நம்மால் புன்னகைக் காமல் இருக்க முடியவில்லை.

**"அது சரி, நீங்கள் இந்தத் துறைக்கு வந்தது எப்படி?"**

"எனக்கு சிறுவயதில் இருந்தே அழகுக் கலையில் ஆர்வம் உண்டு. பட்டதாரியாகி, திருமணமாகி கணவரின் உந்துதலால் பி.எல். படித்தேன். ஆனால் நான் விரும்பிய அழகுக் கலைதான் எனக்கு நிலைத்தது. என் ஆர்வத் தைப் பார்த்த என் கணவரும் என்னை நிறைய ஊக்குவிக்கிறார். இல்லையென்றால் இத்துறை யில் நான் இவ்வளவு தூரம் சாதிப்பது என்பது மிகவும் கடினம்."

எனும் மல்லிகா பிரிட்டிஷ் அசோசி யேஷன் ஆஃப் பியூட்டி தெரபியின் உறுப் பினர். எனவே நவீன அழகுக்கலையின் அத் தனை செய்திகளும் அவருக்குக் கிடைத்து விடு கிறது. அதனால்தான் தன்னம்பிக்கையுடன் தன் மாணவிகள் அனைவருக்கும் அழகுக் கலை பயிற்சி சொல்லித் தருவதுடன், ப்யூட்டி பார்லர் எப்படி வைக்க வேண்டும் என்பதி லிருந்து, கடன் வாங்க வேண்டும் என்றால் ப்ரா ஜெக்ட் ரிபோர்ட் எப்படித் தயாரிக்க வேண் டும் என்பது வரை சொல்லித் தருகிறார்.

மதுரை கே.கே. நகரில் ஏ.ஆர். காம்ப்ளெக்ஸ் எண் 466-ல் ஷிபானி ப்யூட்டி பார்லர் (தொ 651377) வைத்திருக்கும் இவர் அங்கலாய்ப்பது இன்றைய தாய்மார்கள் போக்கைப் பற்றித் தான்.

"மிகச் சிறு வயதுச் சிறுமிகளைக் கூட ப்யூட்டி பார்லருக்கு அழைத்து வந்து ஹேர்கட் செய்யச் சொல்லும்போது எனக்கு வருத்தமாக இருக்கும். அந்தக் குழந்தைகளோ தான் நீளமாக சடை பின்னிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படும். காலை நேர ஸ்கூல் அவசரத்திற் குப் 'பாப் நல்லதுதான் வேலை எளிது. ஆனா லும் அப்புறம் வேண்டும் என்றாலும் வள ராதே! அதே போல இளம் பெண்கள் பேஷி யல், ப்ளீச்சிங் என வருவார்கள். பதினெட்டு, இருபது வயது வரை இவையெல்லாம் தேவை யில்லை இயற்கையாகவே சருமம் நன்றாக இருக்கும். அதற்கப்புறம் ரெகுலராக செய்து கொண்டால் சருமம் தொய்வடையாமல் இள மையை நீட்டிக்கலாம்" என்கிறார் மல்லிகா.

**"நீங்களே இளம் பெண்கள் வர வேண் டாம் என்கிறீர்களே, அது உங்கள் பிஸின ஸுக்கு விரோதமாச்சே..."**

"வர வேண்டாம் என்று சொல்லவில்லை. ஐப்ரோ, ஹேர் ட்ரிம்மிங் செய்து கொள்ளலாம். வீட்டிலிருந்தே சில எளிய அழகு சிகிச்சைக ளை செய்து கொள்ளலாம். தக்காளி, உருளைக் கிழங்கைச் சமையலுக்குச் செய்யும் போது சிறிதே முகத்தில் பூசி ஊறிக் குளிக்கலாம். பாலேடும் தடவி ஊறிக் குளிக்கலாம்.

அதே போல மஞ்சள் பூசிக் குளித்தால் முகம் அழகாகும் எனச் சிலரும், முத்தி விடு கிறது எனச் சிலரும் கூறுவார்கள். அதிலே பிரச்னை என்னவென்றால் பழையதையும், புதியதையும் கலக்கக் கூடாது. அந்தக் காலத் தில் எண்ணெய் தேய்த்துக் குளித்து மஞ்சள் பூசினார்கள். இரண்டும் இணைந்து முகம் பளபளவென இருந்தது.

இப்போதோ ஷாம்பூ, சோப், இவை சரும எண்ணெயை எடுத்து விடுகிறது. அதிலே மேலும் மஞ்சளைப் பூசும் போது முகத்தில் மேலும் வறட்சி ஏற்பட்டு கோடுகள் கூட தெரிய ஆரம்பிக்கிறது. வாராவாரம் எண் ணெய் தேய்த்துக் குளிப்பது உடம்பிற்கு, குறிப் பாக சருமத்திற்கு மிகவும் நல்லது. வயதானால் கூட சருமம் சுருக்கம் விழாமல் நன்கு பாது காக்கலாம். கூடிய வரை ரசாயனக் கலவை யைப் பயன்படுத்தாமல் இயற்கையான மூலி கைகளைப் பயன்படுத்துவது நல்லது.

அதனால்தான் நானும் பார்லரில் இந்தக் கொள்கைகளையெல்லாம் கடைபிடிக்கிறேன்" என்கிறார் மல்லிகா கௌதம்.

**— கே. ஜெயலட்சுமி**

"அழகா இருக்கறது எப்படின்னு ஒரு நிபுணர்கிட்டருந்து தெரிஞ்சுகிட்டேன்.
அந்த நிபுணர்... என் அம்மா!"

இன்று அதிகமான இளம்பெண்கள் தங்கள் மேனியெழிலை பராமரிக்க அவர்களின் அம்மாக்கள் நம்புவதையே அவர்களும் நம்புகிறார்கள். லாக்டோ-காலமைன் லோஷன். இது உங்கள் சருமத்தோடு இதமாய் இணையும். சருமத்தை மென்மையாக்கும். மிருதுவாக்கும், மேனியெழிலை சிவப்பாக்கும். உங்கள் சருமத்துக்கு முழுமையான மேனியெழில் பராமரிப்பு லாக்டோ-காலமைன் மட்டுமே தரும். நிபுணர்கள் போல.




**லாக்டோ-காலமைன்**

லோஷன்

முழுமையான மேனியெழில் பராமரிப்பு

HTA 1452-97

சில நல்ல விஷயங்கள் என்றுமே மாறுவதில்லை

# கணவனை சிறை

சித்தூர் ராணி பத்மினி என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது என்ன?

மேவார் ராணாவான பீம்சிங் இன் பேரழகுமிக்க மனைவி பத்மினி. அவளை எப்படியாவது மனைவியாக அடையத் துடித்தான் தார்த்தாரிய வீரனான டெல்லி சுல்தான் அலாவுதீன் கில்ஜி. படை பலத்தினால் மேவாரைப் பணியவைத்தாலும் உயிரோடு பத்மினியை அடைய முடியாது என்று கருதிய சுல்தான் பத்மினியின் அழகை ஒருமுறை கண்களால் பார்க்கவாவது அனுமதிக்கும்படி ராணா பீம்சிங்கிடம் கெஞ்சினான்.

நல்ல மனம் படைத்த ராணா, அலாவுதீனை விருந்தினனாகத் தன் கோட்டைக்கு அழைத்து, நிலைக்கண்ணாடியில் தன் மனைவி பத்மினியின் உருவைக் காணும்படி செய்தார். இதுவரைதான் அழகி பத்மினியைப் பற்றிப் பலரும் அறிவர். அதன் பின் நடந்தது சுவாரசியமானது.

கண்ணாடியில் கண்ட பத்மினியின் பிம்பம் அலாவுதீனைப் பித்தனாக்கியது. வழியனுப்ப கோட்டைக்கு வெளியே வந்த ராணாவை சூழ்ச்சியாகக் கைது செய்து கொண்டு டில்லிக்குத் திரும்பினான். கணவன் உயிருடன் நாடு திரும்ப வேண்டுமானால் பத்மினி தன் அந்தப்புரத்தை அலங்கரிக்க வர வேண்டும் என்று நிபந்தனை விதித்தான். கணவனைத் தன் சாதுரியத்தினால் சிறை மீட்டாள் தன் கற்புக்குக் களங்கமின்றி. பாரதப் பெண்ணே தலை நிமிர வைக்கும் செயல் அது. அதே போல இங்கிலாந்திலும் ஒரு பெண் தன் கணவனை மரணத்திலிருந்து சிறை மீட்டிருக்கிறாள்.

கணவன் உயிரோடிருந்தான் ஆனால் துக்கத்தின் அடையாளமாக அவள் கருப்பு ஆடை அணிந்திருந்தாள்! உலகப் புகழ் பெற்ற லண்டன் டவர் சிறைச்சாலையில் அவள் கணவன் அடைக்கப்பட்டிருந்தான். மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதி. இன்னும் இரண்டு நாளில் தண்டனை நிறைவேற்றப்பட இருந்தது. கருணை மனுவோடு இங்கிலாந்து மன்னர் முதலாம் ஜார்ஜ் அவர்களைக் காணக் காத்திருந்தாள் மன்னர் வரும் இடை வழியில். அமைதியின்றி, நடுங்கும் விரல்களிடையே அந்தக் காகிதச் சுருள் அவள் உள்ளத்தைப் போலவே தவித்துக் கொண்டிருந்தது. இன்றிரவு அவளுடைய கருணை மனுவை மன்னர் ஜார்ஜ் ஏற்கவில்லையானால், சீமாட்டி நித்ஸ்டேலினுடைய கணவன் மரணத்தைத் தழுவுவது நிச்சயம்.

1715 ம் ஆண்டில் இங்கிலாந்து மன்னருக்கு எதிராக ஜாக்கோபைட்களின் புரட்சி உருவாயிற்று. ஆனால் அது விரைவிலேயே பிசுபிசுத்தும் போயிற்று. புரட்சி வருவதற்குக் காரணமாக இருந்த ஸ்காட்லாந்தைச் சேர்ந்த பல பிரபுக்களோடு, நித்ஸ்டேலின் கணவனும் கைது செய்யப்பட்டான். புரட்சியாளர்கள் அனைவருக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டு, லண்டன் டவரில் அடைக்கப்பட்டிருந்தனர். தன் மனைவி நித்ஸ்டேலின் நெஞ்சுறுதியில், சாதுரியத்தில் அவனுக்கு அசையாத நம்பிக்கையுண்டு. இந்த இக்கட்டான சூழ்நிலையில், கலக்கமுற்ற நிலையில் எப்படியாவது தன்னை மரணத்தின் பிடியிலிருந்து மனைவி காப்பாற்றிவிடுவாள் என அவன் நம்பினான்.



கணவரிடம் பாசமும் நேசமும் கொண்ட மனைவி நித்ஸ்டேல் தூக்கு மேடையிலிருந்து கணவனைக் காப்பாற்றி விடுவதென்ற உறுதியோடு, தன் சேடி இவானுடன் யார்க்கிலிருந்து லண்டனுக்குக் கிளம்பினாள். அது மாரிக் காலம். மோசமான பருவ நிலை. புயல் வேறு. தபால் வண்டிகள் கூட செயல்பட பயணிக்க துணியாத அளவுக்குப் பயங்கரமான பனிப் புயல் பாதையே தெரியாத அளவுக்கு மூடுபனி

**சாந்தா மூர்த்தி**



# மீட்ட காரிகை!

வேறு. இரண்டு பெண்களும் குதிரை மீது உறுதியோடு முன்னேறியதற்கு அவர்களுடைய மனோதிடமும், கணவனின் மூச்சை முடிக்கக் காத்திருக்கும் தூக்குக் கயிற்று முடிச்சின் நினைவுமே காரணம். அவர்களுடைய குதிரைகளின் உடல் சேணைக்கட்டு வரை பனிச் சேற்றில் புதைந்த் நிலையில் போய்க் கொண்டிருந்தார்கள்.

தன்னந்தனியே இரு பெண்களும் உயிர் வாழும் எந்த ஜீவனும் வெளியே வரத் துணியாத அந்தப் பனிப் புயலில் தட்டாடி தப்பாடியாக யார்க்கிலிருந்து லண்டனை நோக்கிச் சென்றார்கள். இத்தனை கஷ்டங்களுக்கும் எவ்விதப் பயனும் கிடைக்கப் போவதில்லை என்று தெரிந்திருந்தும் அவர்கள் மனந்தளரவில்லை. அவளும் அவளைப் போலத் தங்கள் கணவர்களை இழக்கப் போகும் காரிகைகளும் பார்லிமெண்டுக்கு அடுத்தடுத்து அனுப்பிய மனுக்கள் எதுவும் ஏற்கப்படவில்லை. அதுமட்டுமல்லாமல் வெனிஸ் நகரப் பிரதிநிதி (அம்பாஸிடர்) இந்தப் புரட்சியாளர்களை, துருக்கி நாட்டோடு நடக்கும் போரில் பங்கு கொள்ளச் சம்மதிப்பார்களானால் அவர்களுக்கு மரண தண்டனையிலிருந்து மன்னிப்பு வழங்கலாம் என்று ஆலோசனை கூறினார். அதுவும் ஏற்கப்படவில்லை. ஆகவே....

மன்னிப்புக்கான சாத்தியக் கூறு வாயில்கள் அனைத்தும் அடைக்கப்பட்ட நிலையில் மன்னர் வரும் இடைகழி மண்டபத்தில்

சிமாட்டி நித்ஸ்டேல் மன்னரை நேரிலேயே சந்தித்து தன் கணவனுக்கு உயிர்ப் பிச்சை அளிக்கும்படி கெஞ்சுவதற்காகக் காத்திருந்தாள். மன்னர் இரவு உணவுக்கு அந்த வழியாகத்தான் வருவார் என்று அறிந்து.

தர்பார் மண்டபத்திலிருந்து மன்னர் தம் விடுதிக்குச் செல்லும் இடைகழியில் அடி யெடுத்து வைத்ததும் நித்ஸ்டேல் அவர்முன் மண்டியிடத் தயாரானாள்.

நெடுநேரமாக அவர் வரவிற்காகக் காத்திருந் தவள் மன்னரை பூதாகாரமாகத் தன் கற்பனை யில் உருவாக்கிக் கொண்டிருந்தவள், அவர் அருகே வந்ததும் கோபத்தினால் சிவந்த முகத் தோடு சின்னஞ் சிறு மனிதராக இருப்பதைக் கண்டாள். ஒரு முழங்காலை வளைத்து குனிந்து வணங்கும் வழக்கத்தை மறந்து, இருமுழங்கால் களும் தரையில் படிய அவர் முன் விழுந்தாள். எப்படியாவது அவரை மேலே போகவிடாமல்

**கோடை காலத்தில் நீர்மோர் தயாரிக் கும் போது நீர்மோரில் இஞ்சி, பச்சை மிள காய் போட்டு போரடிக்கிறதா? சிறிதளவு மிளகு, சீட்டிகை ரசப் பொடியை சேருங் கள். படுஜோராக இருக்கும்.**

**— ஆர். மீனாட்சி**



தடுத்து நிறுத்த வேண்டுமென்று. ஆனால் அவன் செயலைப் பரிவோடு கவனிப்பதற்குப் பதில் அவர், ஜில்லிடவைக்கும் தன் நீல விழி யால் அவளை வெறித்து நோக்கினார். மன்ன ருக்கு ஆங்கில மொழி தெரியாததினால், தன் வேண்டுகோளை அவள் பிரஞ்சு மொழியில் கூறினாள்.

"மாண்புமிகு மன்னரே! துர்ப்பாக்கிய சாலி யான நித்ஸ்டேல் சிமாட்டியான நான் உங் களைக் கெஞ்சுகிறேன்..."

மன்னர் அவளை லட்சியம் செய்யாமல் நகர்ந்து போகலானார். அவள் விடுவதாக இல்லை. அவருடைய கோட்டின் நுனியைப் பற்றி அதன் பையில் தன்னிடமிருந்த மனுக் காகிதச் சுருளைத் திணித்தாள். அவளிடமிருந்து அவர் அதைப் பெற்றுக் கொள்ள விரும்பாத போது வேறு என்னதான் செய்வது? கர்வம் கொண்ட அரசர் தன் கோட்டின் முனையை அவள் பிடியிலிருந்து விருட்டென்று இழுத்து விடுவித்துக் கொள்ளவே, அவள் நிலை குலைந்து முகம் தரையில் பதிய விழுந்தாள். மன்னரோடு வந்தவர்கள் அவளைத் தூக்கி ஆஸ்வாசப்படுத்தினார்கள்.

கோபமும் ஏமாற்றமும் மனக்கசப்புமுற்ற அவள், 'ஹனோவர் வம்சத்திலிருந்து ஆங்கில அரியணைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இவர் ஆங்கிலேய கனவான்களுக்குரிய கண்ணி யத்தைக் கற்கவில்லையே' என்று வேதனைப் பட்டவளாக, தனக்காகக் காத்திருக்கும் தன் வண்டியிலேறி (கோச்) தான் தங்கியுள்ள இடத்துக்குத் திரும்பினாள். தன் அறையில் கணப்பருகில் இரவு முழுதும் தன் கணவனை லண்டன் டவர் சிறையிலிருந்து எப்படி மீட்பது என்ற சிந்தனை வயப்பட்டு அமர்ந்திருந்தாள். சுருளை மனுவினால் மரண தண்டனையி லிருந்து மீட்டு விடலாம் என்ற நம்பிக்கை போய்விட்ட நிலையில் வேறு மார்க்கங்களைப் பற்றிச் சிந்திக்கலானாள். லண்டனில் அவ ளுக்கு நண்பர்கள் யாருமில்லை. பணித்தோழி இவானைத் தவிர வேறு பந்தமுமில்லை. தோழி இவானுக்கு லண்டனில் இருவரைத் தெரியும். திருமதி மில்ஸ், திருமதி மார்கான் என்பவர் கள்தான் அவர்கள்.

நான்கு பெண்கள் - பொருள் வசதியில்லை, செல்வாக்குடையவர்களின் உதவியில்லை, அதிகார வர்க்கத்தின் ஆதரவில்லை. இந்த நிலையில் இங்கிலாந்தின் கட்டுக்காவல் மிகுந்த ஒரு சிறையிலிருந்து ஒரு மனிதனை வெளியே கொண்டு வருவது எப்படி? அதுவும் அவனுக்கு மரண தண்டனை நிறைவேற்ற இன்னும் இரண்டே நாட்கள்தான் இருக்கின்றன. கணப் பின் கங்குகள் ஒளிகுன்றி ஒடுங்கிக் கொண் டிருந்த அந்த விடியற்காலை வேளையில் சிதறிக் கிடந்த வினாக்கள் திடீரென்று ஒன்று கூடி அவள் சிந்தையில் ஒரு சித்திரமாக உரு வாகி நின்றது. கணவனை மீட்கும் வழியைக் கண்டு பிடித்துவிட்டாள் சிமாட்டி நித்ஸ்டேல்!

பிற்பகலில் லண்டன் டவருக்குச் சென் றாள். காவல்காரர்களை நோக்கி முறுவலித் தாள். பிறகு மகிழ்ச்சியோடு அவர்களிடம் கூறி னாள். "நல்ல செய்தியோடு வந்திருக்கிறேன். கைதிகளின் மரணதண்டனை நாளைக்கு மறு பரிசீலனை செய்யப்பட இருக்கிறது" என்று உற்சாகமாகக் கூறியவள் நன்றி தெரிவிக்கும் வகையில் அவர்களுக்குச் சிறு தொகையைப் பரிசாகவும் வழங்கினாள். தன்னுடைய தாராள அன்பு மனதையும் மகிழ்ச்சியையும் அவர்கள் மறுநாள் நினைவு வைத்துக் கொள்ள வேண் டும் என்பதற்காகவே இப்படி நாடகமாடினாள்.

அவள் கணவன் சிறைக்கூடத்தில் ஆளு னரின் (கவர்னர்) இல்லப் பகுதியில்தான் அடைக்கப்பட்டிருந்தான். கவர்னரின் வீட்டில்

புகுந்து அங்குள்ள மாடிப்படிகளின் வழியே ஏறி உச்சியிலுள்ள கடைசி தளத்துக்குப் போக வேண்டும் அவன் கணவன் அடைக்கப்பட்டிருந்த பகுதிக்கு. அந்தத் தளத்தைக் காவல் புரியும் கதவைக் கடந்து, அவள் கணவனின் சிறைக் கூடத்துக்கு ஒரு இடைகழியைக் கடந்து செல்ல வேண்டும். இடைகழியில் டூட்டி கழிந்து ஓய்வுடன் இருக்கும் காவலர்கள் சிலர் தங்கள் மனைவியுடனோ அல்லது மகளுடனோ உரையாடியபடி இருந்தார்கள். அத்தகைய காவலர்கள் பத்துப் பன்னிரண்டு பேர். இதைக்கண்ட நித்ஸ்டேலின் உள்ளம் துவண்டு போயிற்று. ஆனாலும் முகத்தில் சிரிப்பு மாறாமல் அந்த மகிழ்ச்சியான செய்தியைக் கூறி அதைக் கொண்டாட அவர்களுக்கும் பரிசுத் தொகை வழங்கினாள்.

பிறகு தன் கணவன் அடைக்கப்பட்டுள்ள சிறைக்குள் நுழைந்தாள். மனைவியைக் கண்ட ஆனந்தத்தில் அவள் கணவன் அவளை அள்ளி அணைத்துக் கொண்டான். அந்த இன்பத் தழுவலை கொஞ்ச நேரம் அனுபவித்த அவள், நேரத்தை வீணாக்காமல் தன் கணவனிடம் அங்கிருந்து தப்பிச் செல்வதற்கு தான் ஒரு திட்டம் வகுத்திருப்பதாகக் கூறினாள்.

"தப்பிச் செல்வதா?" என்று விரக்தியான சிரிப்போடு கேட்டான் அவன். "இந்தச் சிறிய கல் சுவர் அறையை நீ சரியாகப் பார்க்கவில்லை என்று நினைக்கிறேன். இந்த அறையின் ஒரே ஜன்னல் இரும்புக் கம்பிகளால் அடைக்கப்பட்டுள்ளது. இதன் கீழே நீருள்ள அகழி உள்ளது. அகழியிலிருந்து நாற்பதடி உயரத்தில் இந்த அறை உள்ளது. கவர்னரின் வீட்டு வழியாக வெளியேறுவதைத் தவிர வேறு மார்க்கம் ஏதும் கிடையாது. வழிநெடுகிலும் ஒவ்வொரு திருப்பத்திலும் காவல்காரர்கள் இருக்கிறார்கள்..." பேசிக் கொணடே போன

---

**கோடை காலத்தில் சோப்பை தவிர்த்து, பயறு, வெட்டிவேர், சந்தனம், மஞ்சள், எலுமிச்சை தோல் சேர்த்து அரைத்த பொடியை பயன்படுத்தலாம். இதனால் வேனல் கட்டிகள், வேர்குரு, அரிப்பு போன்றவற்றைத் தவிர்க்கலாமே!**

**— ஜெயா**



கணவனின் உதடுகளின் மீது தன் விரலை அழுத்தி, அவனை மௌனப்படுத்திவிட்டு தன் திட்டத்தை விளக்கினாள் துணிச்சல் மிக்கவளான நித்ஸ்டேல்.

மறுநாள் அவள் கணவன் உயிரோடிருக்கப் போகும் கடைசி நாள் அதுதான். சிமாட்டி நித்ஸ்டேல் தன் தோழி இவானை வைத்துக் கொண்டு, வீட்டுக்கார அம்மாள் திருமதி மில்ஸுடனும் இவானின் சிநேகிதி திருமதி மார்கானுடனும் தன் திட்டத்தைப் பற்றி விளக்கினாள். அதைக் கேட்ட அவ்விரு பெண்மணிகளின் கண்கள் முதலில் வியப்பாலும் பிறகு உணர்ச்சிக் கொந்தளிப்பினாலும் விரிவடைந்தன. திருமதி மில்ஸ் தன் இருகைகளையும் கொட்டி, "அப்படியே செய்கிறேன் சீமாட்டியே!" என்றாள் உற்சாகக் குதூகலத்துடன். திருமதி மார்கனும் தலையாட்டி தன் சம்மதத்தைத் தெரிவித்தாள்.

உடனே இவான்ஸ் அதிகப்படியான மூன்று பெட்டி கோட்டுகளையும் (உள்பாவாடை) இரண்டாவது க்ளோக் (clock) கையும் திருமதி மார்கன் முன்னரே அணிந்துள்ள ஆடைகளுக்கு உள்ளாக அணிந்துக் கொள்ளும்படி செய்தாள். திருமதி மில்ஸுக்கு நீண்ட கருப்பு நிற க்ளோக்கும் தலைக்கும் கழுத்துக்குமான ஒரு முக்காடும் அணிவதற்கு அளிக்கப்பட்டது. பிறகு நான்கு பெண்மணிகளும் கீழே காத்திருக்கும் கோச் வண்டியில் ஏறிக் கொண்டார்கள்.

லண்டன் டவரை நோக்கி வண்டி போய்க் கொண்டிருந்த போது நித்ஸ்டேல் நிறுத்தாமல் பேசிக் கொண்டே வந்தாள். காரணம், உதவுவதாக உறுதி கூறி உடன் வரும் திருமதிகள் இருவரும், யோசிக்கவோ வாக்களித்தபடி செயல்படாமல் பின் வாங்கவோ அவர்களுக்கு அவகாசம் தரக்கூடாது என்பதுதான். ஆனால் அவ்விருவரும் வாக்குத் தவறாதவர்கள். டவரின் வெளிக்கதவைக் கடந்து கோச் உள்ளே புகுந்து குறிப்பிட்ட இடத்தில் நின்றதும் திருமதி மில்ஸும் திருமதி மார்கனும் கோச்சிலிருந்து வெளியே வந்து தாங்கள் நடிக்க வேண்டிய பாகத்துக்குத் தயாரானார்கள். இவான் காரியேஜிலேயே காத்திருந்தாள்.

முதலில் நித்ஸ்டேல், மூன்று நான்கு பெட்டிகோட் அணிந்துள்ள திருமதி மார்கனுடன் உள்ளே சென்றாள். காவலர்களைக் கடக்கும் போதெல்லாம் முதல் நாள் அவள் அவர்களுக்குத் தாராளமாக பரிசு வழங்கியது நினைவுக்கு வர, அவளைக் கேள்வி ஏதும் கேட்காமல் உள்ளே அனுமதித்தார்கள். கவர்னரின் வீட்டில் இருந்த காவலர்களும் கூட அக்கறை காட்டவில்லை. தங்கள் கைதிகள் உயிரோடிருக்கப் போவது இந்த ஒரு நாள் மட்டும் தானே என்ற இரக்கமும் - இன்றோடு இந்தத் தொல்லை முடிந்தது என்ற நிம்மதியும் காரண

வாஷிங் மிஷினில் 'டிரையர்'ரை உபயோகிக்கும் போது, வாஷிங்டப் பிலும் தண்ணீர் இருந்தால் அனாவசியமான அதிர்வுகள் தடுக்கப்படுவதுடன், மிஷினும் எளிதில் பழுதாகாமல் இருக்கும்.

— ஜெயா



மாக இருக்கலாம்.

மாடியில், இடைகழியில் உள்ள கட்டடத்தைக் கடந்து அப்பாலுள்ள நித்ஸ்டேல் சீமாட்டியின் கணவனை வைத்துள்ள சிறைக்குச் சென்றதும் நித்ஸ்டேல் அவசர அவசரமாக திருமதி மார்கன் அணிந்து கொண்டுள்ள அதிகப்படியான பெட்டி கோட், க்ளோக்குகளை அகற்றினாள். சற்றைக்கெல்லாம் சிறைக் கதவைத் திறந்து கொண்டு திருமதி மார்கனுடன் வெளிப்பட்டாள். இடைகழியைக் கடக்கையில் எல்லாரும் கேட்கும்படி உரத்த குரலில் கூறினாள்.

"தயவு செய்து என் தோழியை மேலே என்னிடம் அனுப்பு விரைவில் அவள் வராவிடில், இன்றிரவு நான் பெட்டிஷனை தருவதற்குத் தாமதமாகி விடும்!"

பேசிக் கொண்டே மாடிப்படிகளைப் பாதி கடந்த நிலையில் திருமதி மில்ஸ் மேலே வந்து கொண்டிருந்தாள். முன்பே முக்காட்டினால் மறைக்கப்பட்டிருந்த தன் முகத்தை கைக் குட்டையினால் மேலும் மறைத்துக் கொண்டு, அழுகையும் விம்மலுமாக... நித்ஸ்டேல் அவள் தோள்களை ஆதரவோடு அணைத்தபடி, திருமதி மார்கனுக்கு விடை கொடுத்து விட்டு, திருமதி மில்ஸை இடைகழி வழியே சிறைக் கூடத்துக்கு அழைத்துப் போனாள். 'நாளை கணவனை இழக்கப் போகும் மற்றொரு துர்ப் பாக்கியவதி போலும்' என்று காவலர்கள் திருமதி மில்ஸைக் கருதினார்கள்.

"பலமாக அழும்மா. அப்போதுதான் உன்னை அவர்கள் கவனிப்பார்கள்!" என்று நித்ஸ்டேல் திருமதி மில்ஸின் காதில் கிசுகிசுத்தாள். அதே போல் காவலர்களை அவள் அழுகை கவர்ந்தது. முகம் தெரியாத, கருப்பு முக்காடிட்டுள்ள அழும் பெண்ணின் மீது பச்சாதாபமேலீட்டால் கவனம் செலுத்தாமல் தங்கள் கடமைகளில் மூழ்கினார்கள். நித்ஸ்டேலுடன் எந்தப் பெண் வருகிறாள் எந்தப் பெண் போகிறாள் என்பதில் அக்கறை கொள்ளவில்லை. தன்னுடைய கருப்பு முக்காட்டையும் க்ளோக்கையும் அகற்றிவிட்டு திருமதி மில்ஸ் திரும்பிச் சென்றதைக் கூட அவர்கள் கவனிக்கவில்லை. திருமதி மார்கன் விட்டுச் சென்ற இரண்டாவது க்ளோக்கை அணிந்து கொண்டு திருமதி மில்ஸ் இப்போது அங்கிருந்து வெளியேறினாள்.

சிறையினுள் இப்போது நித்ஸ்டேலிடம் மூன்று பெட்டி கோட்டுகளும் ஒரு கருப்பு க்ளோக்கும் கருப்பு முக்காடும் இருந்தன. இங்கிலாந்தின் மிகச் சிறந்த கட்டுக்காவல் மிகுந்த ஒரு சிறைச்சாலையினுள் ஆள் மாறாட்டம் செய்வதற்கான ஆடைகள் கடத்தப்பட்டுள்ளன. காவலர்களின் கண்ணெதிரிலேயே! சீமான் நித்ஸ்டேல் தன் மனைவியின் திட்டப்படி செயல்படத் தயங்கினான்.

"கண்ணே! இது வெற்றி பெறாது. என் உயிரோடு உன் உயிரும் இதனால் போகும்" என்றான்.

நித்ஸ்டேல் தன் கணவனை முத்தமிட்டு விட்டுக் கூறினாள் "நீங்கள் இல்லாமல் நான் வாழுவேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று கூறியபடி பெண்களுக்கு உரிய அந்த ஆடைகளைத் தன் கணவனுக்கு அணிவித்தாள்.

இப்போது சிறைக் கூடத்தின் இடைகழியில் உள்ளவர்கள் கருப்பு உடை அணிந்த பெண் சிறைக் கூடத்து கதவு வழியே அழுதபடி கைக் குட்டையால் முக்காடிட்ட முகத்தை மேலும் மறைத்தபடி தள்ளாடியபடி வருவதையும் அவளை நித்ஸ்டேல் தாங்கியபடி ஆறுதல் கூறியபடி அழைத்து வருவதையும் கண்டார்கள்.

"அழாதே காதரின் உன் பெட்டிஷனும் நிச்சயம் கவனிக்கப்படும். நாளை இதே நேரத்தில் நீ மகிழ்ச்சியோடு சிரிக்கப் போகிறாய் நிச்சயம் பாரேன்!"

இவ்வாறு பேசிக் கொண்டே விம்மல் ஒலி எழுப்பும் மங்கைக்கு ஆறுதலளித்தபடி செல்லும் நித்ஸ்டேலை இடைகழியில் உள்ளவர்கள் அனுதாபத்தோடு பார்த்தார்கள். காவலர்கள் ஒதுங்கி வழிவிட்டார்கள். மாடிப்படிக்கட்டில் உள்ள காவலர்களைக் கடந்து வெளியேறினார்கள் இருவரும். "கருப்பு உடையும் முக்காடும் அணிந்த இந்தப் பெண் சிறிது நேரத்துக்கு முன் தன் கணவனைக் காண வந்தவள் தானே" என்று நினைத்தார்கள் காவலர்கள்.

கீழே நித்ஸ்டேல் துர்ப்பாக்கியவதியான அந்தப் பெண்ணை கவர்னரின் விடுதியி



**கோடை காலத்தில் மண்பானை நீரைக் குடிக்கிறீர்களா? அதில் சிறிதளவு துளசி இலைகளைப் போட்டுக் குடியுங்கள். உடலுக்கு நல்லது.**

**— ஆர். மீனாட்சி**

---

லிருந்தும், முன்வாயிலிலிருந்தும் காவலர்களின் சோதனைக்கு உட்படாமல் வெளியே அழைத்து வந்து விட்டாள். அவளிடம் விடை பெறும் போது உரக்க, "காதரின் என் தோழியைப் பார்த்தால் அவளை உடனே இங்கு வருமாறு சொல்லு" என்று கூறி விடை கொடுத்தாள். கருப்பு ஆடை அணிந்த காதரின் அது அவள் கணவன்தான்! - டவரைக் கடந்து நம்பிக்கைக்குரிய அவளுடைய தோழி இவான் காத்திருக்கும் கோச்சை அடைவதைப் பார்த்த பின் 'இனி என் இவான் தன் பொறுப்பைச் செவ்வனே நிறைவேற்றுவாள்' என்ற நிம்மதியுடன் அவசரமாகத் தன் கணவனின் சிறை அறைக்குத் திரும்பினாள்.

அந்தச் சிறை அறைகாலியாக இருந்தது. அவளுக்காக வெளியிலிருப்பவர் மூடிய கதவுகளுக்கு உள்ளே அவள் தன் கணவனுடன் தனியே இருப்பதாக நினைக்க வேண்டும் என்பதற்காக அந்தச் சிறை அங்கணத்தில் அவள் தனக்குத்தானே இரு குரலில் கணவனின் கட்டைக்குரலிலும் தன்னுடைய மென்மையான பெண் குரலிலும் பேசிக் கொண்டிருந்தாள். அவள் சிந்தையெல்லாம் தன் கணவனும் தோழி இவானும் காவல்களைக் கடந்து விடுதலை பெற்றுப் போவதையே எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. ஒரு நிலையில், தன் தோழியும் கணவனும் அபாய எல்லை தாண்டிப் போயிருப்பார்கள் என்ற முடிவுடன் தன் இரட்டைக் குரல் பேச்சை நிறுத்தினாள்.

இடைகழியில் உள்ளவர்கள் சிறை அறையின் கதவைத் திறந்து கொண்டு நித்ஸ்டேல் வெளியே வருவதைக் கண்டார்கள். கதவை மூடாமல் திறந்து வைத்தபடியே கணவனிடம் விடை பெறுபவள் போல உரக்கப் பேசினாள்.

"என் இதயங்கவர்ந்தவரே நான் இனி தாமதிக்க முடியாது. கருணை மனுவை இவான் கொண்டு வரவில்லை. நானே போய்த்தான் அதைக் கொண்டு வர வேண்டும். காலையில் எல்லாம் நல்லபடியாக முடியும் என்று நிச்சயம் நம்புகிறேன். அதுவரை கண்ணாளா! எனக்கு விடை கொடுங்கள். குட்நைட் டியர் ஹார்ட்!" என்று கூறியபடி கதவைச் சாத்திவிட்டு, இடைகழிக்கு வந்து, "என் கணவர் பிரார்த்தனையில் ஈடுபட்டிருக்கிறார். அவரைத் தொந்தரவு செய்ய வேண்டாம்" என்று காவலர்களைக் கேட்டுக் கொண்டு லண்டன் டவரிலிருந்து வெளியேறினாள் நித்ஸ்டேல் சீமாட்டி.

. நித்ஸ்டேல் சீமாட்டியைப் பொறுத்தவரை எல்லாமே திட்டமிட்டபடி நிறைவேறின. அதிகாலையில் சிறைச்சாலைக்குள் போனவர்களுக்கு அதிர்ச்சி. அவிழ்த்து எறியப்பட்ட ஆண் மகனின் கோட்டு க்ளோக்கு மட்டுமே அங்கிருந்தன. கைதியைக் காணவில்லை.

அபாய அறிவிப்பும் குழப்பமும் லண்டன் டவரை வியாபித்தது. வெனிஸ் நகர ராஜ தூதரின் (அம்பாஸிடர்) காரியேற் டோவர் சாலையில் பறந்து கொண்டிருந்தது. பிரான்ஸிலிருந்து வரும் ஹிஸ் எக்ஸலென்ஸியின் சகோதரரை வரவேற்பதற்காக! பணிச்சின்னம் தாங்கிய இரண்டு வீரர் கோச்சு வண்டியின் பின்னால் நிற்பது வழக்கம். அன்று மூன்று வீரர் நின்று கொண்டிருந்தனர். டோவரில் அந்த மூன்றாவது வீரன் தன் பணிச் சின்னமான கோட்டை அகற்றிவிட்டு, தயாராக இருந்த ஒரு பிரஞ்சுக் கப்பலில் ஏறி பிரான்ஸ் நாட்டுக்குச் சென்றான். அது நித்ஸ்டேலின் கணவன் என்று கூறத் தேவையில்லை.

நித்ஸ்டேலின் தலைக்குப் பெருந்தொகை பரிசாக அறிவிக்கப்பட்டது. சூழ்ச்சி செய்து கணவனை லண்டன் டவர் சிறைக்குள்ளிருந்து சாமர்த்தியமாகக் கடத்திக் கொண்டு சென்றதாகக் குற்றச்சாட்டு. எவ்வளவு பெருந்தொகை பரிசாகக் கொடுத்தாலும் லண்டனிலுள்ள ஆண் பெண் யாரும் பணத்துக்காக தீரமிக்க பெண்மணியான நித்ஸ்டேலைக் காட்டிக் கொடுக்கத் தயாராக இல்லை.

துன்பப்பட்ட பெண்ணை கேவலமாக நடத்தியதற்காக மன்னர் மீது மக்களுக்கு வெறுப்பும் அவள் மீது அனுதாபமும் முன்பே ஏற்பட்டிருந்தது. இப்போதோ அவள் சாமர்த்தியத்துக்காக அவளை எல்லோரும் புகழ்ந்தார்கள், பாராட்டினார்கள். மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒருவன் லண்டன் டவரிலிருந்து கவர்னரின் வீட்டிலிருந்து பட்டப்பகலில், ஆயுதம் தாங்கிய பல நூறு காவலர்களின் கண்முன்னால் தப்பிச் செல்வதென்றால் எத்தனை பெரிய அவமானம்!

நித்ஸ்டேல் சீமாட்டியின் உடைமைகள் பறிக்கப்பட்டபோதிலும் தீரமிக்க அவள் இங்கிலாந்திலிருந்து தப்பி ஐரோப்பாவுக்கு வந்தாள். அவளை எதிர்பார்த்துக் காத்திருந்த கணவனுடன் சேர்ந்து கொண்டாள். தம்பதிகள் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள்.



# அழகுக்கு அழகு செய்ய...

நம் உடல் அழகாக இருக்க காரம் சேர்த்த உணவுகளைக் குறைத்துச் சத்தான உணவு வகைகளை உண்ண வேண்டும். ஒவ்வொரு நாளும் உணவில் ஏதாவது கீரையை சேர்த்துக் கொள்ள வேண்டும். வைட்டமின் 'ஏ' மற்றும் ஃபோலிக் அஸிட் (Folic Acid) என்ற வைட்டமின் 'பி'யின் ஒரு ரகம் கீரைகளின் இலைகளில் ஏராளமாய் உண்டு. அந்த ரகத்தால்தான் ரத்தம் சோகை படாமல் தாங்கப்படுகிறது. கீரையை தினசரி உணவில் சேர்த்துக் கொள் பவர்களுக்கு மலச்சிக்கலே ஏற்படாது. மற்றும் நமது உடலுக்கு கால்ஷியம், அயர்ன் பாஸ் பரஸ், பொட்டாஷியம், தாதுப் பொருட்கள், வைட்டமின்கள் ஆகியவை இன்றியமை யாதவை. பழங்களில் இவை அதிகமாக இருப்பதால் தினசரி உணவில் ஏதேனும் ஒரு பழம் அவசியம் சேர்க்க வேண்டும்.

தினசரி அதிகாலையில் எழுந்ததும் ஓர் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து சுத்த நீருடன் கலந்து பருகி வர வேண்டும். ரத்தத்தை சுத்தம் செய்து, ஞாபக சக்தியை வளர்த்துக் கொள்ளவும், சுறு சுறுப்பாக இருக்கவும் எலு மிச்சை உதவும்.

இப்படி இயற்கை உணவு அழகு தருவது போல அழகுக் கலையில் 'அரோமோ தெரபி' முக்கிய இடம் பெற்றுள்ளது. பூக்கள் தாவரங்கள், வேர்களிலிருந்து தயாரிக்கும் அரோமோ ஆயில் முக்கியமாக மணப் பெண் ணுக்கு ஸ்பெஷல் ஆயில் மசாஜ் செய்ய உதவு கிறது. நறுமலர்களை அணிவதால் தேஜஸ் அதி கரிக்கும் என்பது நெடுங்கால உண்மை. நறு மலர்களிலிருந்து எடுக்கும் மலர்களின் ஆயில் கள் உடலுக்கு வனப்பையும், சுகந்தத்தையும் கொடுக்கிறது. 'அரோமோ தெரபியில்' பலவித மலர்களின் ஆயில்கள் பயன்படுகின்றன.

முக்கியமாக சம்பங்கி மலர். இதிலிருந்து எடுக்கும் எண்ணெயில் அபரிமிதமான சக்தி யிருக்கிறது. மசாஜ் செய்யும் போது முக்கிய மான பாகங்களில் அழுத்தம் கொடுத்து ரித மாக மசாஜ் செய்வது அவசியம். ரோஜா இதழி லிருந்து எடுக்கப்படும் அத்தர் மிக முக்கியமான தாகும். ரோஜா மலரிலிருந்து எடுக்கும் ஆயில் மசாஜ் செய்வதற்கு சிறந்ததாக கருதப்படுகிறது. தாமரை - இது மூளையைப் பலப்படுத்தும். தாமரைப் புஷ்பம், தாமரைக் கிழங்கு, தாமரை தண்டு, தாமரை இலை இலைகளைக் கொண் டும் ஆயில் தயார் செய்து, பெண்களுக்கு மசாஜ் செய்ய பயன்படுத்தப்படுகின்றன.

வலியுள்ள இடத்தில் மல்லிகையிலிருந்து எடுக்கும் ஆயிலை மசாஜ் செய்தால், வலி உடனே மறைந்து போகும். மேனி, பளபளப் புக்கு மிகவும் முக்கியமானது. சந்தன மரத்தி லிருந்து எடுக்கும் ஆயில் விசேஷ குணம் வாய்ந் தது. உடலில் ஏற்படும் உஷ்ணக் கட்டி மற்றும் மாக, மறு இல்லாத சருமத்தைப் பெறலாம்.

அரோமோ தெரபி ஆரம்பிக்கும் முன் அவரவர் சருமத்திற்குத் தக்கபடி ஆயில் உப யோகப்படுத்த வேண்டும். நன்கு மசாஜ் தெரிந் தவர்கள் செய்வதே சிறந்தது. குழந்தைகளுக்கு ஆயில் மசாஜ் செய்தபின், 10 நிமிடமாவது இளம் வெயிலில் நிற்க வைக்க வேண்டும். எண் ணெய் தடவிய தோலின் மேல் சூரிய வெளிச் சம் படுவதால் 'வைட்டமின் டி' சத்து நம் உடலில் புகுகிறது. இவ்வாறு செய்வதால் மேல் தோல் மினுமினுப்பாகவும் இருக்கும். உஷ்ணம் நீங்கி கண் குளிர்ச்சி பெறும். மேலும் தோல் சம்பந்தமான வியாதிகள் வராது.

இன்று அழகுக் கலையில் பல நவீன சாதனங்கள் வந்துள்ளன. முகம், மற்றும் கழுத் துப் பகுதியில் 'அரோமோ ஆயில்' மசாஜ்

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள் : 'விருந்து ஸ்பெஷல்' கடைசி தேதி : 15.4.97

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இது வரை 'எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

செய்து பின்பு Steam (Herbal Steam) செய்கிறேன். ஹெர்பல் சிகிச்சையில் எந்த பாதிப்பும் ஏற்படாது. சாதாரண குடும்பப் பெண்கள் முதல் பலமுக்கிய பிரபலங்கள் 'அரோமோ facial' விரும்பிச் செய்து கொள்கின்றனர்.

சத்து இல்லாத கூந்தல், வறண்ட கூந்தல் இவற்றிற்குத் தக்கவாறு மூலிகை எண்ணெய் செய்கிறேன். நம் முன்னோர்கள் விட்டுச் சென்ற அரிய பொக்கிஷங்கள்தான் மூலிகைகள். இரவில் மூலிகை எண்ணெய் கொண்டு மசாஜ் செய்தால் கேசம் உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கும்.

முடி உதிர்வது உஷ்ணத்தினால் இருந்தால் ஹென்னா கண்டிஷனர் போடுவது அவசியம். ஹென்னாவின் அற்புத ஆற்றலால் முடி உதிர்வது நிற்பதுடன் முடிக்கு வேண்டிய அனைத்து போஷாக்கும் கிடைக்கும்.

நம் முன்னோர்கள் வாரம் ஒரு நாள் சுத்தமான நல்லெண்ணெய் எடுத்து தலைமுதல் பாதம் வரை நன்கு எண்ணெய் தேய்த்து குளித்து வந்தனர். நம் பண்டைமுறைதான். ரோஜா மலர்களில் இருந்து எடுத்த அத்தர் தேகத்திற்கு, சிரேஷ்டமானதாகக் கருதப்படுகிறது. நம் நாட்டில் அரிதான மூலிகைகளும் கிடைக்கின்றது.

அதே போல 'உணவே மருந்து' என்ற அடிப்படையில் நான் 'Bridal Care' செய்கிறேன். முளைகட்டிய தானியங்கள், பச்சை காய்கறிகள், பழங்கள், அவல் மற்றும் பேரீச்சை, பாதாம், மணமகளின் சருமத்திற்கு ஏற்றவாறு அவர்களுக்குக் கொடுத்துதான் 'Bridal Care' ஆரம்பிக்கிறேன். Facial மட்டும் செய்தால் பலன் இராது என்பதால், சருமத்திற்கு வேண்டிய ஊட்டச் சத்துகளையும் கொடுக்கிறேன். டி-5, ஸ்ரீ அபார்ட் மெண்ட்ஸ், 11, இரண்டாவது கிராஸ் தெரு, யுனைடெட் இந்தியா காலனி, கோடம்பாக்கத்திலுள்ள என் பார்லரை அணுகினால் மேலும் விவரங்கள் தரமுடியும்.

இதில் முக்கியமாகக் கடைபிடிப்பது ரசாயன கலவை இல்லாத அழகு சாதனப் பொருட்கள், மூலிகை 'பேக்'குகள் மூலிகை எண்ணெய் என்றும் ஆபத்தை விளைவிக்காத 'அரோமோ ஆயில்'களைத்தான். நாம் ஆரோக்கியமாக இருந்தால்தான் நம் சருமமும், முடியும் ஆரோக்கியமானதாக இருக்கும்.

— ஹேமா லஷ்மண்

(அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்.)

11

ரமணி அன்று லீவு போட்டு விட்டான். சங்கரும் சொல்லிவிட்டு வந்து விட்டான். வனஜாவும் வந்து விட்டதால் ராமனாதனை வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுக்கும்படி இருவரும் வற்புறுத்தினர். மங்களமோ தூங்குவதற்கு மருந்து கொடுத்திருந்ததால் நன்றாக தூங்கிக் கொண்டிருந்தாள்.

வீட்டுக்கு வந்த ராமனாதன் கிரிஜாவின் புத்தக அலமாரி, மேஜை டிராயர் - ஆகியவைகளைக் குடைந்தார். ஒரே சினிமாப் பத்திரிகைகள். நடிக நடிகையர் படம் கட் பண்ணி ஒட்டிய ஆல்பம். அந்த நோட்டுக்குள் புதுமுகம் தேவை விளம்பரம். ஓ. இது காதல் விவகாரம் இல்லை. சினிமா மாயை. ஒரு முனை கிடைத்திருக்கிறது. இதைப் பிடித்துக் கொண்டு மேலே போகலாம். இன்னும் குடைந்ததில் ஒரு டயரி கிடைத்தது.

அதில் சில போன் நம்பர்களும் அட்ரசும் கிடைத்தன. பக்கத்து வீட்டுப் போனில் அந்த நம்பர்களைக் கூப்பிட்டார்.

"இல்லையே. அவ இந்தப் பக்கம் வந்து ரொம்ப நாளாச்சு" பதில் வந்தது.

"அவ பெஸ்ட் பிரண்ட் யாரும்மா! ஒரு விஷயம் விசாரிக்கணும்!"

"கீதாவும் அவளும்தான் ரொம்ப குளோஸ். அவளுக்கு டிரை பண்ணிப் பாருங்க அங்கிள் - நம்பர் தரவா?"

கொடுத்தாள். அதே நம்பர் அட்ரசுடன் டயரியில் இருந்தது. நேரிலேயே போய் விசாரிக்கலாம் என்று அங்கு போனார்.

நேரில் அவரைப் பார்த்தவுடனேயே பயந்து விட்டாள் கீதா. "கடைசியில் சொன்னபடி சினிமாவில் சேரக் கிளம்பி விட்டாளா, கிரிஜா!" அவரும் எப்படி எப்படியோ சாமர்த்தியமாய் மடக்கி கேட்டுப் பார்த்தார். "தெரியாது அங்கிள். தெரியாது!" என்றே சமாளித்தாள்.

வெளியே போயிருந்த அவள் பெற்றோர் திரும்பி விட்டனர்.

"என்னடி கீதா. அவ்வளவு பெரியவர் கவலைப்பட்டுண்டு வந்து கேக்கறார். அவ எப்பவும் உன்னோடுதானே இருப்பா. நீ எதையோ மறைக்கிறே. பயப்படாம சொல்லுடி. அவளைத் தேட உதவும்!" என்று அவள் அம்மா அதட்டினாள்.

எல்லாவற்றுக்கும் கீதா பெரிதாக அழுதாளே தவிர, அவளால் சொல்ல முடியவில்லை. கீதாவின் அப்பா ஏதோ புரிந்து கொண்டவர் போல், "சார் நீங்க பயப்படாம வீட்டுக்குப் போங்க. நீங்க இருக்கும்வரைக்கும் அவ பயத்துலே பேசமாட்டா. நீங்க நாளைக்கு வாங்க. நாமெதுவா விசாரிச்சு வைக்கிறேன்" என்று தனியாகக் கூப்பிட்டுச் சொல்லி அனுப்பினார்.

"விசாரியுங்க சார்! இவங்க ரெண்டு பேரும்தான் குளோஸ்னு தெரியுது. நேற்று இரவே போயிருக்கணும். வயசுப் பெண் பாருங்க. காணோம்னு சொல்லிக்கவும் முடியல்லை. சொல்லாம, தேடாமலும் விட முடியவில்லை."

நர்சிங் ஹோம் வந்து சேர்ந்தார்.

"அப்பா! அம்மா கண்ணை முழிச்சிப் பாத்தா. மறுபடியும் நகை போச்சே. நகை போச்சேனு புலம்பல். மறுபடி மயக்கம் துரோகம் பண்ணிட்டேனேன்னு அழறா. மறுபடி மயக்கம் ஆயிடறா. என்னப்பா ஆச்சு? ரமணியும் சங்கரும் இப்ப ஒண்ணும் கேக்காதே அப்புறம் சொல்றேன்னு சொல்றா."

வாசல் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டிருந்த வனஜா, ராமனாதனைப் பார்த்ததும் அழுதாள்.

கோதா பார்த்தசாரதி

"அழாதேம்மா. அம்மாவுக்கு ஒண்ணும் இல்லை. ஷாக்தான். லாக்கருக்குப் போகணும்னு நகையை எடுக்க உள்ளே போனவதான். ரூமுக்குள்ளேயே மயங்கி விழுந்துட்டா. நல்ல வேளை கதவைத்திறந்துட்டா. தோலிருக்க சுளைமுழுங்கின மாதிரி மன்னி நகையெல்லாம் காணோம். அட்டைப் பெட்டி மட்டும் இருக்கு.

பெட்டியிலே என்னம்மா இருந்தது அப்படி? அத்தோட எல்லாத்தையும் நா எடுத்துண்டு போறேன்னு கிரி வேறே லெட்டர் எழுதி வெச்சிருக்கு. சின்னப் பெண். எங்கே போச்சோ யாரிடம் மாட்டிண்டாளோ. என்ன ஆச்சோ? இத்தனை நகையோட ஓடிப் போறதானா என்ன பிளான்னு தெரியல்லையே!" என்று அரற்றினார்.

"தப்பா எதுவும் நடந்திருக்காதுப்பா. அது ஒரு சினிமாப் பைத்தியம். எவனாவது சினிமாவில் சேர்த்து விடறேன்னு சொன்னான்னு கிளம்பிட்டிருக்கும். சீக்கிரம் ஏதாவது பண்ணுங்கப்பா. அவளுக்கு ஏதாவது ஆறதுக்குள்ளே அவளைக் காப்பாத்துங்கப்பா!"

வனஜாவால் அழுவதைத் தவிர வேறு ஒன்றும் துப்புக் கொடுக்க முடியவில்லை. மாலையில் கீதாவின் அப்பா வந்தார். கொஞ்சம் தனியாகப் பேச வேண்டுமென்று சொல்லி வெளியே கூட்டிப் போனார்.

"சாரி சார்! எங்க கீதா உண்மையைச் சொல்லிட்டா. கிரிஜா எப்பவும் தனக்கு இருக்கிற அழகுக்கும் திறமைக்கும் சினிமாவிலே சேர்ந்தா ஓகோன்னு வருவேன்னு சொல்லிண்டிருப்பாளாம். இப்ப கொஞ்ச நாளைக்கு முன்னாலே பிரபல படக் கம்பெனி பானர்லே வித்யாசமான படங்களைக் கொடுக்கிற ஒரு பிரபல டைரக்டர். அவர் சிஷ்யன் எடுக்கிற சொந்தப் படத்தில் நடிக்கப் புதுமுகம் தேவைன்னு விளம்பரம் வந்ததாம்.

கிரிஜா கீதாவிடம் காமிச்சு நா அப்ளை பண்ணப் போறேன்னிருக்கா. பதில் கிடைக்க அட்ரஸ் எங்க வீட்டு அட்ரஸ் கொடுத்த போது கீதாவால் ஒண்ணும் சொல்ல முடியல்லை. நாங்க ரெண்டு பேரும் வேலைக்குப்





பாதாம் கேக்குடன்
சிறிது மில்க் மெய்ட் மற்றும்
ஐஸ்க்ரூப் சேர்த்து மிக்ஸியில்
அடித்தால், புதுமையான,
சுவையான 'மில்க் ஷேக்' ரெடி!
— ஜெயா

போறவங்க. வீடு திரும்ப ஏழு மணியாகிடும்.

இதோ தான் ஸ்கூலலேயிருந்து முதல்லே வருவா. சோ, லெட்டர்ஸ் முதல்லே அவதான் பார்ப்பா. அதிலே கிரிஜாவுக்கு வர லெட்டரை ஒளிச்சு வச்சு அவனிடம் கொடுப்பது ஒண்ணும் கஷ்டம் இல்லை. லெட்டருக்கு பதில் வந்து, இதோ டிரஸ்ஸைப் போட்டுண்டு போனா ளாம்.

திரும்பி வந்து டைரக்டர் இவளையே கனவில் பார்த்து இவளை மாதிரியே ஓவியம் வரைந்திருக்கிறதாகவும், கூடிய சீக்கிரம் மெட் ராஸ் கூட்டிட்டுப் போறேன்னு சொன்னதாக வும் சொன்னானாம். விலாசம் எதுவும் தெரி யல்லை. காரஸ்பாண்டன்ஸ் எல்லாம் கை யோடு எடுத்துப் போயிருக்கலாம். கிளம்பற விஷயம் இவளுக்குச் சொல்லல்லை.

விலாசம் கிடைச்சாலும் போலியாகத்தான் இருக்கும். இனிமே தாமதம் கூடாது. போலீசில் சொல்லி ஆக்ஷன் எடுக்கணும்" என்று குமுறி னார்.

"போலீஸ் அது இது பத்திரிகை, பப்ளி சிடினு ஆயிட்டா, கல்யாணத்துக்கு இருக்கிற வயசுப் பெண்ணாச்சே! பேர் கெட்டுடாதா?"

நியாயமான கவலையோடு கேட்டார் ராம னாதன்.

"சார் நாம இப்படி குடும்ப கௌரவம் அது இதுன்னு தயங்கறதுலே எதுவும் லாபம் இல்லை. குற்றவாளி ரொம்ப தூரம் போயிடு வான். நமக்கு ஹெல்ப் பண்ணத்தான் போலீஸ் இருக்கு. ஆனா நாமளும் அதுக்கு உதவி பண்ணணும் இல்லியா?

நகை பணம் போனா போகட்டும். உங்க மகளையாவது உயிரோடு பார்க்கணும்னா, போலீசுக்கு போயி உண்மையைச் சொல்லுங்க. பெட்டர் நீங்களே மெட்ராஸ் போய், மெட் ராஸ் போலீசை காண்டாக்ட் பண்ணுங்க!"

மங்களம் இருக்கும் நிலைமையில், மெட் ராசுக்கு எப்படிப் போவது? இரவு முழுதும் தூக்கம் இல்லாமல் தவித்தார்.

சென்னையில் ஒரு சிறிய வீட்டின் முன் கார் நின்றது.

"வாங்க மேடம்!" என்று மரியாதையாக அழைத்துப் போய் உட்கார வைத்தான் கதிர்.

"ஹலோ!" என்று கை குவித்தபடி ஒரு இளைஞன் வந்தான்.

"வாங்க வாங்க! மிஸ் கிரிஜா. ஐம் கார்த்திக். டைரக்டருடைய பி.ஏ. டைரக்டர் படப்பிடிப்பு வேலைகளைப் பார்க்கிறதுக்காக பாம்பே போயிருக்கிறார். ஹீரோயின் கெடைச்சாச்சுன்னதும் அவரால பொறுமையா இருக்க முடி யல்லை. லொகேஷன் பாத்து வைக்கிறேன். மானஸா வந்ததும் அழைச்சிட்டுக் கிளம்பு என்றார்!"

"மானஸாவா. யார் அது? நான்தான் ஹீரோ யின்னீங்களே, மிஸ்டர் கதிர்! இவர் வேறு என்னமோ சொல்றாரே!"

"சாரி மேடம்! உங்களுக்குத் தெரியாதா? 'மா' வரிசையிலே நம்ம டைரக்டர் அறிமுகப் படுத்தின புது முகங்கள்ளாம் இன்னிக்கு ஓகோன்னு இருக்காங்க! அதனாலே தன் வழக்கப்படி உங்க பேரைத்தான் மானசான்னு மாத்தி வெச்சு பெரிய போஸ்டர்லாம் அடிச் சிருக்காரு!" என்று ஒரு ரூமுக்குள் அழைத்துப் போனான்.

'கமலா!' என்று கதிர் கூப்பிடவும், ஒரு நடுத் தர வயதுப் பெண் வந்து நின்றாள். வேலைக் காரி என்றும் சொல்ல முடியாது. வீட்டுக்காரி யாகவும் தெரியவில்லை. சுத்தமாக உடுத்தி தலைவாரிக் கொண்டு, சாதாரணப் புடைவை யில் இருந்தாலும் தளுக்கும் மினுக்கும் கொஞ் சம் இருந்தது.

"மேடம். அப்ப நாங்க கிளம்பட்டுமா? கமலா உங்களுக்குத் தேவையானதை கவனிச் சுப்பா. நிறைய வேலை இருக்கு. டைரக்டர் நாங்க இல்லாம ரொம்ப திண்டாடுவார்!" என்று தலையைச் சொரிந்தான் கதிர்.

"என்ன வேணும் கதிர்!" கிரிஜா கேட்டாள்.

"கொஞ்சம் பணம் வேணும்மா. பாம்பே போனதும் டைரக்டர்கிட்ட வாங்கிக் கொடுத் துடறேன்" என்று சிரித்தான் கதிர்.

அவர்கள் காட்டிய பவ்யத்தில் பரவசமாகி இருந்த அவள், பெட்டியைத் திறந்து ஒரு கட்டு ரூபாய் நோட்டுகளை எடுத்தாள். அதிலிருந்து சிலநூறு ரூபாய் நோட்டுகளைப் பிரிக்க முற் பட்ட போது, "அப்படியே கொடுத்துடுங்கம்மா. ரெண்டு பேருக்கு பிளைட் டிக்கட் வாங்கணு மில்லே? இன்னும் கொஞ்சம் சாமான்கள் வாங் கணும்."

"சும்மா கொடுங்க மேடம். ஆரம்பத்துலே

தான் கொஞ்சம் உங்க உதவி தேவைப்படும். அப்புறம் டிஸ்டிரிப்யூடர்ஸ் கொண்டு வந்து கொட்டப் போறாங்க. டைரக்டர் உங்களை பணத்தாலும், நகையாலும் கனகாபிஷேகம் பண்ணிடமாட்டாரா?" என்று ஐஸ் வைத்தான் கதிர்.

இவனை நம்பலாமா? நம்பித்தான் ஆக வேண்டும். நம்பிக்கையில்தானே உலகமே இயங்குகிறது?

வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி, உடம்பு நோக ஆபிசில் சங்கரும், ரம்யாவும் சம்பாதித்த பணம், மங்களத்தம்மாள் பதுக்கியது கயவர்கள் கைக்கு மாறிவிட்டது.

"அப்ப நான் வரட்டுமா மேடம்! கமலாவும் கார்த்திக்கும் உங்களைக் கவனிச்சுப்பாங்க." கதிர் கிளம்பினான்.

கமலா இரண்டு கப்பில் ஆவி பறக்கக் காப்பி எடுத்துக் கொண்டு உள்ளே வந்தாள்.

"சாப்பிடுங்க மானஸா. சாப்பிட்டுட்டு பிரெஷ்ஷா குளிச்சுட்டு வாங்க! டிபன் சாப்பிட்டுட்டு, உங்களுக்கு மெட்ராஸ் சுத்திப் பார்க்கணும்னா ஒரு ரவுண்ட் போயிட்டு வரலாம். வெளில ஏதாவது நல்ல ஹோட்டல்ல சாப்பிட்டுக்கலாம். கெட் ரெடி!" என்று அவளிடம் ஒரு கப்பைக் கொடுத்து தானும் எடுத்துக் கொண்டான்.

"வேண்டாம், மிஸ்டர் கார்த்திக்! முன்னாடியே பார்த்திருக்கேன். மேலும் இங்கே எங்க ரிலேஷன்ஸ் நிறைய பேர் இருக்கா. என்னைப் பாத்துட்டா வம்பாயிடும். ரிஸ்க் எடுக்க வேணாம். எவ்வளவு சீக்கிரம் இங்கே விட்டுப் போறமோ அவ்வளவு சீக்கிரம் போயிடணும்" என்றாள் கிரிஜா.

"அப்படியானா வேண்டாங்க! அலமாரில ஏதாவது கதைப் புத்தகம் இருக்கும். பாத்துட்டிருங்க. வீடியோ இருக்கு. பழைய படங்கள் காசட் வாங்கி அனுப்பறேன். பத்மினி, சாவித்ரி, பானுமதி இவங்க படமெல்லாம் பாருங்க. உங்களுக்கும் ஒரு இன்ஸ்பிரேஷன் கிடைக்கும். நா வரட்டா?"

கார்த்திக்கும் வெளியே போய்விட்டான். டிபன் சாப்பிட்டு விட்டுக் கட்டிலில் படுத்தது தான் தெரியும். இரவு முழுதும் நகை, பணம், கதிர் எல்லாவற்றுடனும் பயந்து கொண்டே பயணம். பொட்டுத் தூக்கம் இல்லை. அடித்துப் போட்டது போல் தூங்கினாள்.

தூக்கத்தில் கலர்கலராய் கனவுகள். அரண்மனை மாதிரி வீடு. வாசலில் கூட்டம் நெரிகிறது. 'மானசா, மானசா!' என்ற கூச்சல் அந்தக் கூட்டத்தில் அம்மா, 'கிரி, கிரி!' என்று புலம்பியபடி வருகிறாள். பின்னால் அப்பா, சங்கர், வனஜா, மன்னி!

'அய்யோ அம்மா!' என்று அலறியபடி விழித்தாள் கிரிஜா. உடல் முழுதும் தெப்பமாக




**மார்ச், ஏப்ரல் மாதமா! எங்கும் எக்ஸாம் என்பதே பேச்சு. உங்கள் வீட்டுக் குழந்தைகளோ அடுத்த வீட்டுக் குழந்தைகளோ, பரீட்சைக்குச் செல்லும் மாணவ மாணவியரை 'பெஸ்ட் ஆப் லக்' சொல்லி அனுப்புங்கள். நீங்கள் கார் வைத்திருந்தால் உங்கள் பிள்ளைகளுடன் மற்ற குழந்தைகளையும் முடிந்தவரை பள்ளிக்கு அழைத்துச் செல்லுங்கள்.**

வியர்த்திருந்தது. கரெண்ட் போயிருந்தது.

'காணாமல் போனவர்கள் பற்றிய அறிவிப்பு.

மதுரை நகரைச் சேர்ந்த கிரிஜா என்ற பதினைந்து வயதுப் பெண்ணை இந்த மாதம் ஆறாந் தேதியில் இருந்து காணவில்லை. உயரம் நூற்றி அறுபது சென்டிமீட்டர். நல்ல நிறம். காணமற்போன அன்று இவர் ஆகாய நீலத்தில் பாவாடையும், அரக்கு தாவணியும் அதே கலரில் சட்டையும் அணிந்திருந்தார்.'

ஹாலில் அமர்ந்திருந்த மகாதேவன் குடும்பமே அதிர்ந்தது.

"என்னம்மா இது? உங்க நாத்தனார் கிரிஜா?"

"போட்டோ கூட காமிச்சாங்களேப்பா. அவளேதான். சீமந்தம் நாலாந்தேதி. அஞ்சாம் தேதி மன்னியும் நானும் கிளம்பி வந்தோம். ஆறாம் தேதியிலிருந்து காணோம்னா இன்னிக்கு பத்து தேதி. நாலு நாளாயிடுத்தே!" என்று துடித் தாள் ரம்யா.

"ஏம்மா மாப்பிள்ளையிடமிருந்து ஏதாவது தகவல் வந்ததா?"

கவலையுடன் விசாரித்தார் மகாதேவன்.

"இல்லப்பா. வந்தால் நானே சொல்லியிருப்பேனே? ஏன் தெரிவிக்கலைனு தெரியல்லை."

"காணோம்னா உடனே கலவரப்படக் கூடாது. அக்கம் பக்கம் தேடிட்டு அப்புறம் சொல்லலாம்னு நெனச்சிருக்கலாம். ஆனாலும் முழுசா நாலு நாளாச்சே!" என்று கவலைப் பட்டாள் மதுரம்.

"என்ன ஆச்சுனு தெரியல்லையேம்மா. ஸ்கூலுக்குப் போனவளைக் காணோம்? ஸ்கூல் கூட ஸ்டடி ஹாலிடேசாச்சே! எப்படி ஆச்சோ தெரியல்லையே!"

ஒரு ஓரமாக உட்கார்ந்து படித்துக் கொண்

குழந்தைங்க சாப்பிடாம **அடம்பிடிப்பாங்கதான்!**

எம் பையன் அர்ஜுன், வயிறு நிறைய சாப்பிட்டானா அதுவும் சரியானத சாப்பிட்டானான்னு எனக்கு எப்பவுமே கவலையாக இருந்தது.

நான், டாக்டரை பார்த்து இதுக்கு என்ன செய்யலாம்னு கேட்டது ரொம்பவே நல்லதா போயிடுச்சு.

அப்போதான் தெரிஞ்சது, 1-லிருந்து 3 வயசு குழந்தைங்களுக்கு **ஸ்பெஷல் ஊட்டச்சத்தோட தேவை** இருக்குன்னு. இந்த வயசுல அவங்க எவ்ளோ வேகமா வளர்றாங்க!

அப்புறம்தான் Junior Horlicks பத்தி எனக்கு தெரிய வந்தது.

பால், கோதுமை, மால்டட் பார்லி இதெல்லாம் சேர்த்து சின்ன குழந்தைகளுக்குன்னு தனித்தன்மையா, **இயற்கையான** முறையில இத தயாரிச்சிருக்கிறதால, **ஈஸியா ஜீரணமாகுது.**

அதோட, இதுல எக்ஸ்ட்ரா கால்ஷியம், எக்ஸ்ட்ரா அயர்ன், முக்கிய விட்டமின், புரோட்டீன் எல்லாம் இருக்கு.

தயார் பண்றதா? ரொம்ப ஈஸிங்க! பால்ல கலந்து அப்படியே குடுக்கலாம். தெனமும் ரெண்டு தடவை.

ஸ்பெஷல் 1·2·3 ஊட்டச்சத்து

உண்மையா சொன்னா, மனசு சந்தோஷப்படறப்போ, எனக்கு இதத்தான் சொல்லத் தோணுது...

க்யூ, .



டிருந்த ரமேஷ். "அக்கா நீ தப்பா நினைக்கல் லைன்னா ஒண்ணு சொல்றேன். நேத்து காலை சென்டிரல் ஸ்டேஷனுக்கு என் பிரண்ட் ஊருக் குப் போறான்னு போனேன். அவன் வர கொஞ்சம் நேரமாச்சு.

அதனாலே ஸ்டேஷன்லே சும்மா நடந்து வேடிக்கை பார்த்துட்டிருந்தேன். அப்ப கூபே கம்பார்ட்மென்டில் ஒரு ஜோடி வந்து ஏறியது. முஸ்லிம் ஜோடி. ஆனால் வித்யாசமாக வேஷம் போட்ட மாதிரி எனக்குத் தோணித்து. இயல் பாக இல்லை.

அந்தப் பெண் பர்தா போட்டிருந்தாலும் துருதுருவென்று பயத்தோட அலைஞ்ச அந்தக் கண்கள் எனக்குப் பழக்கம் மாதிரி இருந்தது. என்னைத் தாண்டி ஏறும் போது அந்தப் பெண் மிரண்டு தலையில் போட்டிருந்த துணியை இழுத்து மொத்தமும் மூடிண்டா.

இவர்களுடன் வந்த இன்னும் இரண்டு பேர் இவர்களை ஏற்றிவிட்டு உடனே போய் விட்டார்கள். திரும்பும் போது ஒரு நிமிஷம் பர்தாவிலகியது. அந்த ஒரு செகண்டில் அது கிரிஜா மாதிரி தோன்றியது. அவர்களும் உள்ளே போய் விட்டார்கள். என் பிரண்டும் வந்து விட்டான்.

யாரோ அவளை மாதிரி சாடை உள்ள பெண்ணாயிருக்கலாம். இதை எப்படி உங்க கிட்ட சொல்றதுன்னு பயந்துண்டு பேசாம இருந்துட்டேன். இப்ப டீவி நியூஸ் கேட்க விட்டுத்தான் தப்பு பண்ணிட்டேனோன்னு வருத்தப்பட்றேன்!"

பயந்து கொண்டே சொன்னான் ரமேஷ்.

"ரொம்ப சமத்துபோ. எவனாவது ஏமாத்திக் கூட்டிண்டு போனானோ என்னமோ? இப்ப வந்து சொல்றியே!" என்று பதறினாள் மதுரம்.

**அடுக்கு மாடி வீட்டில் வசிப்பவரா? வேண்டாமே டீ.வி. சத்தம். பரிட்சை நாட் களில் அதிலும் A to Z சானல்கள் உள்ள வர்கள், உங்கள் வீட்டில் மாணவர்கள் இல்லாவிட்டாலும், அடுத்த வீட்டு குழந் தைகளிடம் அக்கறை காட்டுங்கள். அவர் கள் கவனம் உங்கள் வீட்டு டீ.வியால் சிதற வேண்டாமே!**





"தப்புதான். ஆனா ஒண்ணுமட்டும் நிச் சயம். கிரிஜாவை ஏமாத்தியோ, பலவந்தப் படுத்தியோ கூட்டிண்டு போகல்லை. அவளே விருப்பத்தோட சந்தோஷமா அவன் கையைப் பிடிச்சிண்டு ஏறினா. ஏதாவது லவ் அஃபேரா யிருக்குமோ?" என்றான் ரமேஷ்.

"கடவுளுக்குத்தான் தெரியும்!" என்று பெரு மூச்சு விட்டான் ரம்யா. அவள் மனதில் ஒரு பயம் பம்பாய் என்றதும்.

"அப்பா ஒண்ணு செய்யலாமா? மதுரை யிலே பக்கத்து வீட்டு நம்பர் ஒரு அவசரத்துக்கு இருக்கட்டும்னு எழுதிண்டு வந்தேன். அவங் களுக்கு போன் பண்ணி பார்க்கலாமா?" என் றாள் ரம்யா.

"முதல்லே அவங்க சித்தி வீட்டுக்கு போன் பண்ணி அவங்களுக்கு ஏதாவது தெரியுமானு கேட்டுண்டுவா! விபரம் தெரிஞ்சப்புறம் நான் நேரிலேயே போயிட்டு வரேன். இதெல்லாம் போன்லே பேசறது அவ்வளவு மரியாதையா இருக்காது." என்றார் மகாதேவன்.

ரமேஷும் ரம்யாவும் எதிர் வீட்டுக்குப் போய்ப் போன் பண்ணினார்கள். கோபி போன் பண்ணானாம். மெட்ராஸ் வந்தாளா என்று விசாரித்திருக்கிறார்கள். நகைகளையும் காணாததால் மங்களம் பிரமை பிடித்த மாதிரி இருக்கிறாள். டாக்டர்கள் அதிர்ச்சி என்கிறார் கள்.

நாலு நாள் பார்த்து விட்டு வேறு வழி இல் லாமல் போலீசுக்குப் போய் இருக்கிறார்கள். அங்கிருந்து சென்னை போலீசுக்கு தகவல் வந்து டீவியிலும் அறிவித்திருக்கிறார்கள். மங்களத்தை மெட்ராஸ் அழைத்துப் போனால் நல்ல வைத்திய வசதி கிடைக்கும் என்றாராம் டாக்டர்.

தங்கம் போனிலேயே அழ ஆரம்பித்து விட் டாள்.

"ரம்யா, அக்காவுக்கு கிரிஜா அந்த நகை களை எடுத்துண்டு போயிட்டா என்கிறதுதான் பெரிய அதிர்ச்சி. படபடன்னு பேசுவாளே தவிர, மனசுக்குள் ஒண்ணும் கிடையாது. எப்படியாவது இங்கே அழைச்சிண்டு வந்து வைத்தியம் பாத்தா சரியாயிடும்மா.

கோபிட்ட சொல்லி இருக்கேன். இந்த வாரம் சனி ஞாயிறில் அழைச்சிண்டு வரேன் னான். உங்கப்பாட்ட சொல்லி யாராவது நல்ல டாக்டரா காட்டினா சரியாயிடும்!"

"ஆகட்டும் சித்தி அப்பா இப்பவே காரிலே போறேன்னார். திரும்பி வரச்சே அழைச்சுண்டு வந்துடுவார். உங்களுக்கு போன் பண்ணி கேட் டுண்டு போகலாம்னு வந்தேன்."

வீட்டுக்கு வந்து மகாதேவனிடம் விபரம் சொன்னாள்.

"அப்படியா? நகைகளோட கிரிஜாவைக் காணோம்னா யாரோ ஏமாத்தித்தான் அழைச்

# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக நேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்ப்பணிக்க வேண்டும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்றார்தனை : ஸுமங்கலி ப்றார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

**MAY VEDA MATHA BLESS US ALL**



## SHARAVANA

**29 years of Glorious Service**

Estd. in 1967, Sharavana is a pioneer in the manufacture of Wet Grinders, right from 1 litre to 20 litres.

Models available : Regular, Tilting & Table Top grinders.

- Exporting since 1980.
- High quality finish with Tapper & Double Ball Bearing System with AUE Motor
- Long lasting & durable

**Available in different colours with stainless steel body finish and with sun glass finish. Specialists in the manufacture of commercial grinders for Hotels, Hostels & Canteens.**

Mfrs : **SHARAVANA ENGG. TRADERS**
Krishnasamy Mudaliar Road, R.S. Puram, Coimbatore - 641 002
Phone : 455117, 435118 Fax : 445119

**TRADE ENQUIRIES SOLICITED**



**பரிட்சை நாட்களில் உங்கள் குழந்தைகளை, அடுத்த வீட்டுக் குழந்தைகளுடன் 'ஒப்பிடு' செய்யா தீர்கள். உன்னால் முடிந்தவரை நன்றாக படி, நன்றாக எழுது' என்று மட்டுமே சொல்லுங்கள்!**



சிண்டு போயிருக்கா. இவ்வளவு நடந்திருக்கு. சம்பந்தியோ, மாப்பிள்ளையோ நமக்கு ஒரு தக வலும் சொல்லல்லியே! திடீர்னு போய் நின்னா ஏதாவது தப்பா..." என்று இழுத்தாள் மதுரம்.

"அழகுதான். இந்த அமனியிலே இதெல் லாம் சொல்லிண்டிருக்க முடியுமா? நமக்கு சொல்லப்படாதுன்னு இருக்காது. டீவியிலே பாத்த பிறகும் போகலைன்னா நல்லா இருக் காது. நான் போய் அவர்களை அழைத்துக் கொண்டு வந்துடறேன்" என புறப்பட்டார் மகாதேவன்.

இரவு முழுதும் படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தார் ராம ணாதன். மனசில் ஏறி உட்கார்ந்திருந்த பாரம் அவரைத் தூங்கவிடவில்லை. மங்களத்துக்கு இன்னும் சரியான நினைவு வரவில்லை. கண் விழித்துப் பார்த்தாலும், யாரையும் அடை யாளம் கண்டு கொண்ட மாதிரி தெரிய வில்லை.

சித்தப்பிரமை பிடித்த மாதிரி உட்கார்ந்து கொண்டிருந்தாள். வாயைத் திறந்தால் 'நகை அய்யோ அத்தனையும் போச்சே. பாவம் ரம்யா. அவளுடையதையும் கொண்டு போயிட்டியேடி சண்டாளி. உன்னைச் சும்மா விடமாட்டேன்!' என்று கத்துவாள்.

"டேய் சங்கர். கோச்சுக்காதேடா. வயசு வந்த பெண்ணு இரண்டு இருக்கே. கல்யாணம் பண்ணனுமே, உனக்குச் சுமையா இருக்கப் படாதுன்னு தாண்டா சேத்து வெச்சேன். எல் லாம் போச்சே! அடியே கிரிஜா உன்னைக் கொன்னுடுவேன். மரியாதையா எல்லாத்தை யும் கொடுத்துடு!" என்று வனஜாவை உலுக்கு வாள்.

பாவம் வனஜா. அடி, திட்டு எல்லாவற்றை யும் பொறுத்துக் கொண்டு, "அழாதேம்மா, நகை எங்கும் போகல்லை. என்னைத்தானே லாக் கர்லே கொண்டு வைக்கச் சொன்னே! நீ அழாம இந்த சாதத்தைச் சாப்பிடு. மருந்து குடிச்சிட்டுத் தூங்கு. கோபியாவது ரமணியா வது வரட்டும். லாக்கருக்குப் போய் எடுத் துண்டு வரேன்!" என்று சொல்லி சாப்பிட வைப்பாள்.

ராமணாதனைப் பார்த்தால் எதுவும் பேச வில்லை. சங்கர், ரமணி, கோபி யாரையும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. நர்சிங் ஹோம் டாக்டர், தனக்குத் தெரிந்த சைகியாடி ரிஸ்ட் ஒருவருக்கு லெட்டர் எழுதித் தருவதாக வும், மெட்ராசில அவரிடம் போய்க் காட்டும் படியும் சொன்னார்.

சென்னைக்குப் போய் எங்கே தங்குவது?

கோபியும் ரமணியும் ரொம்ப உதவியாக இருக்கிறார்கள். கோபி சென்னையில் தங்கள் வீட்டில் தங்கிக் கொள்ளலாம் என்கிறான். பாவம் வாடகை வீடு. சின்னப் போர்ஷன் அவர்களுக்கே இருக்க இடம் போராது.

"பாவம் வாயில்லாப் பூச்சி அந்த ரம்யா. பெரிய இடத்துப் பெண்ணாக இருந்தாலும், மங்களம் ஆட்டி வெச்சதுக்கெல்லாம் பதில் பேசாம பதவிசா இருந்தது. ஒரு கண் வெண் ணெய், ஒரு கண் சுண்ணாம்புனு பெண்களைத் தலையில் தூக்கி வெச்சுண்டு ஆடினா.

ஒரு பொண்ணு இப்படிப் பண்ணிட்டுப் போச்சு. இன்னொண்ணு என்ன பண்ணப் போறதோ!" என்று மங்களத்தின் சிநேகிதிகள் எல்லாரும் அவளைப் பார்க்க வரும்போது பேசினார்கள். மங்களம் படுத்துவிட்ட தைரியம். தலைக்கு மேலே வெள்ளம் போன பின் சாண் என்ன முழமென்ன?

இழந்த மானத்தை இனி மீட்க முடியாது. சங்கர் குன்றிப் போயவிட்டான். சாப்பாடு, தூக்கம் எதுவும் நேரத்துக்கு இல்லை. ஆபீஸ் நேரம் போக நர்சிங்ஹோமே பழியாகக் கிடந் தான். அவனுக்கு அம்மாதான் எல்லாம். காலை யில் எழுந்து பல் தேய்ப்பதில் இருந்து படுக்கப் போகும் வரை அம்மாதான்.

அந்த அம்மா பிரமை பிடித்தவள் போல, எல்லாரும் பைத்தியம் என்று பரிகசிக்கும்படி படுத்திருப்பதில் மனம் உடைந்து போயிருந் தான். மேலும் அவன் ரொம்ப சங்கோஜி மானி. ரோஷக்காரன். யாராவது ஏதாவது சொன் னால் பொறுக்க மாட்டான்.

ஆனால் கடந்த சில தினங்களாக, உளர் வாயில்தன் குடும்பம் அரைபடுவதைக் கண்டு வருந்தினான். அவள்தான் அப்படிப் போனால், இந்த வனஜாவுக்கு என்ன ஆயிற்று? அம்மா சுயநினைவு இல்லாமல் பைத்தியமாக இருக் கிறாள் என்றால் இவள் சுயநினைவுடனேயே சுவற்றை வெறித்துக் கொண்டு --

கண்ணீர் விடுகிறாள். இரவில் நல்ல தூக்கம்

RECKITT & COLMAN

**"என்னுடைய அக்கம்பக்கத்தில் இருப்போர் தங்கள் இல்லங்களை வெறுமனே சுத்தம் மட்டுமே செய்கிறார்கள்; ஆனால் ஒரு டாக்டரான நான், எனது இல்லத்தில் கிருமிகள் அறவே இல்லாதவாறும் சுத்தம் செய்கிறேன்!"**



ஒவ்வொரு இல்லமும் கிருமிகளின் தாக்குதலுக்கு உள்ளாகின்றன. ஒரு டாக்டரான எனக்கு தெரியும், பார்ப்பதற்கு சுத்தமாக தெரிவதெல்லாம் உண்மையான சுத்தம் இல்லை என்று. பரிசுத்தமாக பளிச்சென்று தோன்றும் வீடுகளிலும் கூட, வயிற்றுக் கோளாறுகளை ஏற்படுத்தும் ஸல்மோனெல்லா மற்றும் சரும நோய்கள் உண்டாக காரணமான ஸ்டாபைலோகோக்கஸ் போன்ற நோய்பரப்பும் கிருமிகள் இருக்க முடியும்.

**கிருமிகளை நீங்கள் சுத்தப்படுத்த முடியாது. அவைகளை நீங்கள் அறவே அழிக்க வேண்டும்.** பினாயில் மற்றும் டிடர்ஜென்ட்டினால் செய்யப்படும் சாதாரணமான சுத்தம் இதுபோன்ற கிருமிகளை அழிக்காது. அதனால்தான் நான் லைஸோல் டிஸ்இன்ஃபெக்டன்ட் மற்றும் பாத்ரூம் க்ளீனரை மிகவும் நம்பகமானதாக கருதுகிறேன்.

**லைஸோல் கிருமிகளை 99.9% அழிக்கிறது.** இதன் அடர்வு செய்த பிரத்யேக ஃபார்முலா, இல்லங்களில் இருக்கும் கிருமிகளை 99.9% அழிக்கிறது.

**இது ஒரு ஆற்றல்மிக்க க்ளீனர் ஆகும்.** இதன் தனித்தன்மைவாய்ந்த நாஸில் தரைகளின் ஓரங்களிலும் விளிம்புகளிலும் படியும் அழுத்தமான கடின கறைகளை சுத்தம் செய்ய உதவுகிறது. இதன் நீரால் கழுவ தேவையற்ற ஃபார்முலா தரையை இருமுறை கழுவ வேண்டிய அவசியத்தை போக்குகிறது.

டபுள் **ஆக்ஷன்** டிடர்ஜென்டுகள் மற்றும் பினாயில்கள் இனி எனக்குத் தேவையில்லை. லைஸோலின் டபுள் ஆக்ஷன், கிருமிகளை அழித்து தரைகளையும் பாத்ரூம்களையும் சுத்தப்படுத்துகிறது. கனபாரமுமில்லை. தொல்லையுமில்லை. சுத்தமும், ஆரோக்கியமும் நிறைந்தது, எனது இல்லம். **குடும்பத்துக்கு பாதுகாப்பு** ஆற்றல்மிக்க டபுள் ஆக்ஷனுடன், லைஸோல் என் குடும்பத்தினரை சுகவீனத்திலிருந்தும், நோய்தொற்றுகளிலிருந்தும் பாதுகாக்கிறது. இதமூட்டும் பரவசமான இதன் மணம் நாள் முழுதும் நீடித்திருக்கிறது. லைஸோல் எல்லா தரை பரப்புகளிலும் உபயோகிக்க பாதுகாப்பானது; மேலும் குழந்தைகள் இருக்கும் இல்லங்களிலும் உபயோகிக்க உகந்தது. ஒரு டாக்டரான நான், எனது குடும்பத்தினரின் பாதுகாப்புக்கு லைஸோல் நம்பகமானதாக கருதுகிறேன்.




INTRODUCTORY PRICE Rs. 16/- FOR 200ml. PACK

HYGIENIC HOME CARE

**கி ரு மி க ளி ன் அ ழி வி ல் ஆ ரோ க் கி ய ம் ஆ ர ம் ப ம்.**









தேங்காய் துருவி (COCONUT SCRAPER)


மாவு பிசைதல் (ATTA KNEADER)
















இல்லை. ஒன்று சொன்னால் ஒன்று செய்கிறான். அம்மாவுக்கு உதவி வேணும் என்று ஆபீசுக்கு போகவில்லை. லீவு போட்டிருக்கிறான். இவன் நிலைமைக்கு அம்மா கிரிஜா மட்டும் காரணம் இல்லை.

இதற்கும் பின்னால் வேறு ஏதோ இருக்கிறது....

சங்கரும் அதையேதான் யோசித்துக் கொண்டிருந்தான்.

ஊருக்குப் போகும் போது ரம்யா சொன்னது நினைவுக்கு வந்தது.

'நா சொல்றேங்கிறதாலயே அலட்சியம் பண்ணிடாதீங்க. அந்தப் பையனைப் பற்றி விசாரித்தேன். அவன் எங்க எம்.டி. பையன் தானாம். அவன் காரக்டர் ரொம்ப மோசம். நாளைக்கொரு பெண்ணுடன் சுற்றுவானாம். இவன் லீலையால மனசு நொந்து பெத்தவ பரலோகம் போயிட்டா.

இவர் அவன் முகத்திலேயே விழிக்கப் பிடிக்காமல் வீட்டை விட்டே விரட்டி விட்டுட்டார். எல்லாம் சுயசம்பாத்தியம். திருந்தி வந்தா லொழிய உனக்கு ஒண்ணும் கிடையாதுன்னுட்டார். அவன் சுபாவத்தை மாத்திக்கறதா இல்லை. பெத்த கடனுக்காக மாசம் ஏதோ கொடுக்கிறார்.

அதிலேதான் இந்த ஆட்டம் போடறான். எத்தனை நாளா வனஜாவோட சிநேகமோ தெரியல்லை. எதுவும் விபரீதமாறதுக்கு முன்னால் நிறுத்திடுங்க. ஒரு மாசமா பார்க்கிற தில்லைனு நெனைக்கிறேன். வனி நேரத்தோட வீட்டுக்கு வந்துடறா. இப்படியே இருந்தா நல்லது. மறுபடியும் வனராம பார்த்துக்குங்க!'

இப்படி ஒருவரும் தூக்கம் வராமல்

**குழந்தைகள் நலன் கருதி, பெற்றோர்கள் இந்த நாட்களில் திருமணம், பர்த்டே, பார்ட்டி இவற்றிற்குப் போவதைத் தவிர்க்கலாம். முடிந்தவரை உங்கள் வீட்டிற்கு உறவினர்கள் வரு வதையும் தவிர்க்கலாம்.**



புரண்டு கொண்டிருந்தபோது வனஜா மெதுவாக எழுந்து உள்ளறைக்குப் போவதைப் பார்த்தான். அன்று ரமணி ஆஸ்பத்திரியில் படுத்துக் கொள் வதாகச் சொல்லி அவனை வீட்டுக்கு அனுப்பி இருந்தான்.

ஏன் இந்த வேளையில்...? என்று மெதுவாக அவள் பின் போனான். உள்ளே போன வனஜா, கிரிஜாவின் பெட்டியைத் திறந்து ஒரு பாட்டிலை எடுத்தாள். அது அன்று கிரிஜா எல்லாருக்கும் கலந்து கொடுத்துவிட்டுப் பாக்கி வைத்திருந்த தூக்க மாத்திரை பாட்டில்!

வனஜா அதிலிருந்து அத்தனை மாத்திரை களையும் சரித்து உள்ளங்கையில் கொட்டி எண்ணினாள். ஜக்கிலிருந்து நீரைச் சரித்து அத்தனை மாத்திரைகளையும் வாயில் போடப் போகும் நேரம், ஓடி வந்து அவள் கையைத் தட்டி விட்டான் சங்கர்.

மாறி மாறி அவள் இரு கன்னத்திலும் ஆத்திரம் தாங்காமல் அறைந்தான் சங்கர். சத்தம் கேட்டு ராமனாதனும் எழுந்து வந்தார்.

"அடிபாவி. ஒருத்தி குடியைக் கெடுத்தது போதாதா? அவ எங்களுக்கு மாத்திரையை கொடுத்துட்டு, நகையை சுருட்டிண்டு யாருடனோ போனா. நீ பாக்கி மாத்திரையை சாப்டுட்டு மரணத்தை தேடிண்டு போகத் துடிக்கிறே. எதுக்காக என்ன ஆச்சு?"

"அடி! அண்ணா நல்லா அடி! அடிச்சே கொன்னுடு. முன்னாடியே இப்படி அடிச்சு நொறுக்கியிருந்தா, அம்மாவுக்குப் பயந்து நாங்க போன வழி விடாம இருந்தா, நானும் கிரியும் பிழைச்சிருப்போம். இப்ப எல்லாம் மிஞ்சிப் போச்சண்ணா ஏற்கெனவே உனக்கு இருக்கிற தலை குனிவு போதாதா?

நா மகா பாவி. இந்த உலகத்துலே வாழறதே தப்பு. நானும் போயிடறதுதான் நல்லது. என்னைச் சாகவிடு" என்று குமுறி அழுதாள் வனஜா.

துடித்துப் போய் வனஜாவை அணைத்துக் கொண்டான் அவன்.

"சாரிம்மா, வனி! சாரி! இனிமே புதுசா மானம் போக எதுவும் இல்லை. என்ன ஆச்சம்மா? ப்ளீஸ் அண்ணாட்ட சொல்லும்மா!" என்று கெஞ்சினான்.

ராமனாதன் கண்களைத் துடைத்துக் கொண்டு, மாத்திரைகளைப் பொறுக்கி பிளஷில் விசிவிட்டு, சிந்திய தண்ணீரைத் துடைத்தார்.

"மன்னி மேலே அபாண்டமா பழி சுமத்தி ஆனந்தப்பட்டேன். ஆனா உண்மையா நான் தான் என் பாய் ப்ரண்டோட அங்கே டிபன் சாப்பிட்டிருந்தேன். கோடைக்கானல் போகணும்னு பிளான் போட்டோம். அது நடக்கல்லைன்னதும் தன்னோட அப்பா அம்மா வுக்கு அறிமுகப்படுத்தறதா சொல்லி ஒரு வீட்

**முக்கியமான விஷயம், எக்ஸாம் மட்டுமே வாழ்க்கை ஆகாது. அதனால் மார்க் குறைந்தால் தெரியும் செய்தி என்று குழந்தைகளை மிரட்டாதீர்கள். பரீட்சை நேரத்திலும், ரிசல்ட் வரும் நேரத்திலும் காணாமல் போகும் சிறுவர், சிறுமியர் அதிகம் என்று போலீஸ் ரிக்கார்ட்ஸ் கூறுகிறது.**

**— பவானி சந்திரசேகரன்**

டுக்கு அழைச்சிட்டுப் போய்....

ஏமாந்துட்டேண்ணா. அவன் பேச்சிலும் ஆடம்பரமான நடவடிக்கைகளிலும் மயங்கி ஏமாந்துட்டேன். விளைவு விபரீதமாப் போச்சு. தேடிண்டு போனா டாக்டரிட்ட போகச் சொல்லி பணத்தை நீட்டறான். அம்மாவும் இல்லை. அப்பாவும் இல்லை. வீடு யாரோ பிரண்டோடது.

சுத்தமா டாடா சொல்லி, கையைக் கழுவிட்டான். என் கண் எதிரேயே இன்னொரு பெண்ணோட போனான். அந்த வேதனையிலே திரும்பி வந்தா கிரிஜா கதை இப்படி. அம்மா ஆஸ்பத்திரியிலே. அம்மாவுக்காகத் தான் இத்தனை நாள் தள்ளிப் போட்டேன். ஊர் சிரித்து என்னாலும் உனக்குக் கஷ்டம் வேண்டாண்ணா.

கிரிஜா மாதிரி கண்காணாம ஓடிப் போக தைரியமில்லை. அதான்..." கேவிக் கேவி அழுதாள் வனஜா.

"அம்மாவுக்காக இல்லை வனி! நீ ஒரு அம்மாவாகப் போறேங்கிறதாலே உன் உயிரை அழிச்சுக்க உனக்கு உரிமை இல்லை. உன் மன்னி அப்பவே சொன்னா. அப்ப என் கண் மூடி இருந்தது. நடந்தது நடந்து போச்சு வனி. இனி எப்படியும் இந்த ஊரில் தலை காட்ட முடியாது.

அம்மாவையும் டாக்டர் மெட்ராஸ் அழைச்சிண்டு போகச் சொல்றார். நீங்க எல்லாருமே மெட்ராஸ் போயிடுங்க. ஆடிட் சமயம் முடிந்ததும் அம்மா உடம்பைக் காரணம் காட்டி நான் மெட்ராசுக்கு மாத்திண்டு வந்துடறேன். ரம்யா அப்பாவிடம் சொல்லி பக்கத்திலேயே பெரிய வீடாப் பார்க்கச் சொல்லலாம். இப்ப கோபியும் ரமணியும் லீவிலே இருக்கா.

உங்களை மெட்ராஸ் அழைச்சிண்டு போவா!" என்று தேற்றினான். அம்மா இல்லாமல் பிள்ளை தானாக ஒரு முடிவு. அதுவும் நல்ல முடிவாக எடுத்துட்டானே! என்று ராமனாதனுக்கு சந்தோஷம்.

"சங்கர், இவ்வளவு நடந்திருக்கு நாம் ரம்யாவுக்கோ, அவங்க வீட்டுக்கோ ஒண்ணும் தெரிவிக்கவில்லை. உன் மாமனார் நல்ல மனுஷர். உபகாரி. அவருக்கு மறைக்கிறது நியாயம் இல்லை. டீவி நியூஸிலிருந்து தெரிஞ்சுகண்டிருப்பாளானாலும நாம சொல்லிடணும்.

நீ இன்னிக்கு ஆபீஸ் போனதும் அவரைக் கூப்பிட்டு பேசிடு!" என்றார்.

"ஆகட்டும்பா!" என்று சொன்னவன், "வனி இனிமே இந்த மாதிரி அசட்டுத்தனம் எல்லாம் நினைச்சுக் கூட பார்க்கமாட்டேன்னு சத்தியம் பண்ணிக்கொடு. அதுக்காகவே உன்னை மன்னியிடம் அனுப்பப் போறேன். மன்னி, அவன் தன்னோட எம்.டி. பிள்ளைன்னு சொன்னா.

நாவேணா அவரைப் பார்த்து." அவன் முடிக்கும் முன் இடைமறித்தாள் வனஜா.

"பார்த்து என்னண்ணா பண்ணப் போறே? கால்ல விழுந்து 'என் தங்கைக்கு வாழ்வு கொடுங்க'ன்னு கேட்கப் போறயா. இனிமே அந்த ராஸ்கல் பேச்சே வேண்டாம். அவனா வந்து வாழ்வு கொடுக்கிறேன்னு சொன்னா கூட அந்த வாழ்வு அவனோட வேண்டாண்ணா. எவன் திட்டமிட்டு என் வாழ்க்கையையே பாழாக்கினானோ, அவனையே ஏத்துண்டா நாசெஞ்ச தப்பு நேராயிடுமா?

அவனை மட்டும் குற்றம் சொல்லிப் பயனில்லை. நானும் சேர்ந்து செஞ்ச தப்புதானே? அதற்குப் பரிகாரமா இந்த களங்கத்தை நான் சுமந்துதானாகணும். உங்களுக்கெல்லாம் அவமானம்னுதான் இந்த முடிவுக்கு வந்தேன். நீங்க என்னைப் புரிஞ்சிண்டா சரி. இனிமே அந்த மாதிரி மனசால் கூட நினைக்க மாட்டேன்" என்றாள் வனஜா.

"நீ சொல்றது ரொம்ப சரிம்மா வனி. அயோக்கியன்னு தெரிஞ்சுகண்ட பிறகும், அவனோட வாழறதிலே என்ன அர்த்தம்? வேறே நல்ல வழி பிறக்கும் கவலைப்படாதே!" என்று தேற்றினான் சங்கர்.

மீதி இரவு முழுதும் அவர்கள் மூவரும் ரம்யாவைப் பற்றியும் அவள் குடும்பத்தைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தார்கள்.

காலையில் அவர்கள் கண் விழித்த போது புழுதியில் குளித்த மேனியுடன் இரவு முழுதும் பயணம் செய்து வந்து நின்றது அந்த அம்பாசிடர். அதிலிருந்து இறங்கியது மகாதேவன்!

(தொடரும்)

உ

ஓம் நம: சிவாய






# தஞ்சை ஜில்லா, மயிலாடுதுறை, (மாயூரம்) தாலுகா, அன்னியூர் என்கிற பொன்னூர் ஸ்ரீ பிரஹந்நாயகி சமேத ஸ்ரீ ஆபத்ஸகாயேஸ்வரர் திருக்கோயில் மற்றும் இதர கிராமக் கோவில்கள் திருப்பணி

சென்னை மாநிலத்தில் சோழவள நாட்டில் தஞ்சை ஜில்லா, மயிலாடுதுறை தாலுகாவில், காவிரி நதிக்கரையில் மாயவரத்திலிருந்து, வடமேற்கே நான்கு மைல் தொலைவில் தெய்வத் தன்மையுடன் சோழ மன்னர்கள் ஆண்டு வந்த காலத்திலேயே அமையப் பெற்ற திருத்தலமாகும் திரு அன்னியூர் க்ஷேத்திரம். பொன் விளையும் கிராமம் என்பதால் அது பொன்னூர் என்றும் வழங்கலாயிற்று. அங்கு அமைந்துள்ள அருள்மிகு ஆபத்சகாய சுவாமி ஆலயம் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய சமயக்குரவர்களால் பாடல்பெற்ற திருத்தலமாகும். திருவேள்விக்குடி, திருஎதிர்கோய்பாடி, திருமணஞ்சேரி, திருக்கொருக்கை முதலிய பாடல் பெற்ற தலங்கள் இதனைச் சுற்றிய க்ஷேத்திரங்களாகும். பொன்னூர் சூரியன் வழிபாட்டுத் தலமுமாகும்.

ஆண்டுதோறும் பங்குனி மாதம் 25-ஆம் தேதி முதல் 30-ஆம் தேதி முடிய சூரியன் மேற்படி அன்னியூரிலுள்ள சிவனை வழிபட்ட காரணத்தால் அங்குள்ள குளம் சூரிய புஷ்கரணி என்று வரலாற்றில் இடம்பெற்றுள்ளது. மேற்படி ஐந்து தினங்களும் அதிகாலையில் சூரியன் கோயிலின் உள்ளே கர்ப்பகிரகத்தில் இருக்கும் சிவலிங்கத்தின் மீது ஒளிக்கதிர் வீசுவது மிகவும் அதிசயமான நிகழ்ச்சி. இவ்வாலயத்தின் மேற்படி நிகழ்ச்சியை தரிசிக்கவும், பாடல் பெற்ற ஸ்தலமாக இது விளங்குவதாலும் வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் இங்கு வருகின்றனர்.

மேற்படி கோவிலில் உள்ள ஸ்வாமி அம்மன் மூல விக்ரஹங்கள் இருக்கும் கர்ப்பக்கிரஹ அறை மிகவும் பாழடைந்தும், அர்த்த மண்டபம் விமானங்களில் பல விரிசல்கள் ஏற்பட்டும், சுற்றுப்புற மதில்சுவர்கள், பிராகாரம் முதலானவை இடிந்தும் பழுதுபார்க்க வேண்டிய நிலையிலும் இருப்பதாலும் தற்சமயம் அடுத்த கும்பாபிஷேகம் செய்யவேண்டிய தருணம் ஏற்பட்டுள்ளது. அதற்காக மேற்படி திருப்பணிகள் செய்வதற்கும், மற்றும் பொன்னூரில் உள்ள பெருமாள் கோவிலுக்கும் மாரியம்மன் கோவிலுக்கும் இந்த சிவன் கோவிலுடன் திருப்பணிகள் செய்து கும்பாபிஷேகம் செய்வதற்கு சுமாராக ரூ. 4,00,000/- வரை ஆகலாம் என மதிப்பீடு செய்யப்படுகிறது.

ஆகவே வரப்போகும் ஈச்வர ஆண்டு சித்திரை மாதம் 19ம் தேதி (02.05.97) அன்று திருப்பணி வேலைகளை முடித்து அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்ய இறைவனின் திருவருளை முன்னிட்டு தங்களின் பேராதரவையும் கணிசமான நன்கொடைகளையும், நிதி உதவிகளையும் நாங்கள் வேண்டுகிறோம்.

தாங்கள் மனமுவந்து தங்கள் திருக்கரங்களால் நன்கொடைகளை அள்ளித் தந்து ஸ்ரீபிரஹந்நாயகி சமேத ஆபத்ஸகாயேஸ்வரர் அருளைப் பெற பிரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு

இறைவன் நற்பணி மன்றம் பொன்னூர், பாண்டூர் போஸ்ட், மயிலாடுதுறை தாலுக்கா

*காசோலைகளையும் டிமாண்ட் ட்ராப்டு* **(DD)** *களையும் இறைவன் நற்பணி மன்றம்* **(IRAIVAN NARPANI MANDRAM)** *என்ற பேரில் எழுதி* **Sri. V. Rajamani, No.1, 2nd Cross Street, E.K. Raghava Reddiar Colony, Jafferkhanpet, Madras - 600 083** *என்ற முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.*

# திருமண மலர்

## மணமகள் தேவை

■ வடமாள், பாரத்வாஜ, கார்த்திகை, வயது 30, டைடன் வாட்ச் இண்டஸ்ட்ரியில் சம்பளம் ரூ. 7500/- பையனுக்கு பட்டதாரி வேலைக்கு போகும்/போகாத, அழகான வசதியுள்ள பெண் தேவை. ஜாதகம், முழு குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13700

■ இல்லத்து பிள்ளை, 38, பி.காம், 60 கிலோ, சொந்தமான கம்ப்யூட்டர் பிரிண்டிங் பிரஸ், ஜாதி பேதமில்லை. மணமகள் தேவை. பெட்டி எண் : 13701

■ கார்காத்த வேளாளர், வயது 30, பி.இ. சிவில், உயரம் 165 செ.மீ. காருட கோத்திரம், ஹஸ்த நட்சத்திரம், சைவம், சிதம்பரத்தில் சுயதொழில் (TWAD Registered Civil Contractor) ரூ. 10,000/- மாத வருமானம் மணமகனுக்கு படித்த நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. (Employed girl preferable) ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13702

■ Alliance for a well placed, highly qualified senior executive in Bombay, widower 49, Vadama, Bharadwaja, 2 children. Widows/divorcees without encumbrances can also apply to Box No. 13703

■ Vadama, North Arcot, Bharadwajam, Thiruvadirai. 28/165 cms/12,500/-, B.Sc. post graduate Diploma Computers - System Analyst, Bangalore. Seeks graduate girl below 24 years. Reply with details. Box No. 13704

■ கொங்கு வெள்ளாளர் கவுண்டர் பி.எஸ்ஸி, Cement Technology, 30 வயது, 165 செ.மீ. அவிட்டம், (ஒரிஸ்ஸா) ரூர்கேலா அருகே Chief Chemist மாத வருமானம் ரூ. 6000/- செவ்வாய் தோஷமுள்ள மணமகனுக்கு பட்டதாரி பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13705

■ Iyengar, Thenkalai, Bharadwajam, Rohini aged 34, Diploma Radio -TV having own service centre earning monthly 3000/- p.m. and own house seeks employed girl. Reply Box No. 13706

■ Fair graduate Iyer girl, height above 150 cms. age between 21 - 26 years for Brahacharanam boy, Kousika, Rohini, 28/167, executive, Multinational Company, Chennai. Salary Rs. 9000/- p.m. plus. Subsect no bar. Box No. 13707

■ தஞ்சாவூர் சைவப்பிள்ளை, வயது 31, உயரம் 172 செ.மீ. சிகப்பு நிறம், எம்.காம்., எம்ஃபில் பி.எச்டி, கல்லூரியில் விரிவுரையாளர் வேலை பார்க்கும் பையனுக்கு, தகுதியுள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 13708

■ Saiva Pillai, fair, 27/168/5000/- D.M.E., (B.E.) Central Govt. job, propertied, decent family seeks fair, homely, graduate bride age below 24 years from a respectable family. Box No. 13709

■ Tamil Iyer family settled in Mysore Dist. since over 30 years require homely bride for undergraduate boy 26 yrs., 5.6" height, Kashyapa Gothram, Maka, having own lorry transport business. Box No. 13710

■ செங்குந்தர் (பெரிய மாங்கல்யம்) 29 வயது, பி.எஸ்ஸி உத்திர நட்சத்திரம், சிவ கோத்திரம், சொந்தத் தொழில் (மாத வருமானம் ரூ. 10,000/-க்கு மேல்) செய்யும் வரனுக்கு (ஒரே பையன்) இளங்கலைப் பட்டம் பெற்ற 25 வயதுக்குக் குறைவான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்கள் தொடர்பு கொள்ளவும். கோவை, பெரியார் மாவட்டங்கள் வரவேற்கப்படுகின்றன. பெட்டி எண் : 13711

■ Vadamal, Kousikam, Sathayam, 32 yrs. M.A., B.Ed, working as a auto consultant, 3000/- p.m. boy seeks alliance from graduate girls from a respectable family. Subsects no bar. Box No. 13712

■ திருநெல்வேலி சைவப்பிள்ளை, 29 வயது, B.Sc. (Agri), சதயம் நட்சத்திரம், Asst. Executive, national Dairy Development Board, Anand, Gujarat. ரூ. 7000/- மாதம். மணமகனுக்கு டிகிரி முடித்த அழகான பெண் தேவை. பெட்டி எண் : 13713

■ Correspondences invited from the parents of Chennai based decently employed Tamil Iyer girls for Vadama/Kousika/Thiruvadhirai/34, post graduate, 165 cms, Rs. 5000/- p.m. Southern Railway, Chennai employed boy. Send horoscope and details to Box No. 13714

■ Vadagalai Iyengar boy, Kousika Gothram, Murugaseersham, 45/155 cms, M.Tech (Mettallurgy) healthy, senior position in private Steel Tube Mill at M.P. No encumbrances. Horoscope with family details to Box No. 13715

■ தெலுங்கு பிராமணர் ஸ்ரீவத்ஸ கோத்திரம், பூராடம், 33/5.5"/6500/- D.C.E., J.E. Municipal Office சொந்த வீடு உள்ள வரனுக்கு படித்த பட்டம் பெற்ற வேலைக்குச் செல்லும்/செல்லாத பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13716

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்ய, கட்டணம் ரூ. 100/-. இதை சென்னையில் மாற்றலாகக் கூடிய டிமாண்ட் டிராப்ஃடாக, "மங்கையர் மலர்" என்ற பெயருக்கு எடுத்து விளம்பர வாசகத்துடன் அனுப்ப வேண்டும். மணியார்டர், போஸ்டல் ஆர்டர் காசோலை கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. விளம்பரக் கட்டணத்தை எங்கள் அலுவலகத்திற்கு நேரில் வந்து பணமாகவும் செலுத்தலாம்.

■ வன்னிய க்ஷத்ரியர், வயது 29, உயரம் 172 செ.மீ. மத்திய அரசுப் பணி ரூ. 5000/-. எந்த தீய பழக்கமும் இல்லாத மணமகனுக்கு பட்டப் படிப்பு முடித்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13717

■ சைவ வெள்ளாளர், வயது 26, உயரம் 180 செ.மீ. பூர நட்சத்திரம், Dip. in Comp. Science & Engineering படித்த வசதியான வேலையில் உள்ள, மணமகனுக்கு அதே இன அழகான பட்டதாரி, குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். செவ்வாய் தோஷம். பெட்டி எண் : 13718

■ Tamil Yadava Pillai, B.Com with P.G. Diploma, Anusham, 32/175 cms employed in private limited firm, settled in New Delhi, own flat seeks girl employed or suitable to get employment. Write with horoscope to Box No. 13719

■ இந்து நாடார் வகுப்பைச் சார்ந்த மாதம் ரூ. 6500/- வருமானத்துடன் அரசு பணிபுரியும் திடகாத்திரமான 46 வயதான சமீபத்தில் அருமை குழந்தையை இழந்தவருக்கு குடும்பப்பாங்கான வயது 30க்கு உட்பட்ட மணமகள் தேவை. கணவரை இழந்தவராய் இருந்தாலும் பரவாயில்லை. பாசமுடையவராய் பட்டப் படிப்பு படித்தவராய் இருக்க வேண்டும். பெட்டி எண் : 13720

■ Indian Engineer, educated in England, well settled in Malaysia. Youthful and energetic 47, Hindu, divorced, seeking fair, beautiful girl for marriage. Caste no bar. Send Bio-data to Box No. 13721

■ கார்காத்த வெள்ளாளர், சைவம், எம்.இ., 31, 6000/- தமிழ்நாடு அரசில் பணிபுரியும் மணமகனுக்கு மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13722

■ ஐயங்கார், 39 வயது, 5.4" அரசுடைமையாக்கப்பட்ட வங்கி ஊழியர் மௌத்கல்ய கோத்திரம், ஹஸ்த நட்சத்திரம் வரனுக்கு பட்டதாரியான, 34 வயதுக்குட்பட்ட வேலைக்கு செல்லும்/செல்லாத பெண் தேவை. பிராமணர் உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13723

■ Alliance invited from broadminded bride, Tamil Iyer or any Iyer - Poor/middle class for slightly handicapped, Kasyapa Gothram, Kannada smartha Iyer, 33/5.2", 3500/- Central Govt. bridegroom. Reply horoscope with details to Box No. 13724

■ பரந்த மனப்பான்மையுள்ள தமிழ் ஐயர் அல்லது எந்த ஐயர் - ஏழை/நடுத்தர வகுப்பைச் சேர்ந்த மணமகள், சற்றே கால் ஊனமுள்ள, காஸ்யப கோத்திரம், கன்னட ஸ்மார்த்தா ஐயர், 33/5.2", 3500/- மத்திய அரசு மணமகனுக்கு வரன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13725

■ வடமாள், பாரத்வாஜம், பூரட்டாதி 4, மீனம், 37/5.8", 10,000/- B.Com., CAIIB, State Bank of India, Bombay, Assistant வரனுக்கு தகுந்த மணமகள் தேவை. பம்பாயில் சொந்த வீடு, பூர்வீகம் வட ஆற்காடு. ஐயரில் உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். போன் பம்பாய் : 8952604. பெட்டி எண் : 13726

■ 29/165/எம்.ஏ. பிராட்டஸ்டண்ட், ஆதி திராவிடர் கடவுள் பக்தி மிகுந்தவர், தீய பழக்கம் ஏதுமில்லாவர். அரசு வேலையில் உள்ள மணமகனுக்கு, இரயில்வே, பேங்க், இன்ஷுரன்ஸ், நர்ஸ், டாக்டர், ஆசிரியர் பணிகளில் உள்ள அழகான குடும்பப்பாங்கான பெண் தேவை. சாதி பேதமில்லை. பெட்டி எண் : 13727

■ Hindu, Balija.Gavara, Uthiradam, D.M.E/27/180 self employed in Cuddalore, 5000/- seeks suitable graduate girl from decent family. Parents reply with horoscope. Box No. 13728

■ அரசுப் பணி, 3500/-, 34/170 செ.மீ. பி.எஸ்ஸி, சைவம், சிவப்பு, சற்றே ஆண்மைக் குறைவு உடைய ஆனால் சரி செய்து கொள்ளலாம். இன்னும் மணமாகாத மணமகனுக்கு பரந்த நோக்குள்ளோர் விண்ணப்பிக்கலாம். வரதட்சணை இல்லை. விதவை விவாகரத்தானோர் தடையில்லை. எம்மதமும் சம்மதம். பெட்டி எண் : 13729

■ துளுவ வெள்ளாளர், 32/168/4000/+2, I.T.I./Govt. Transport Corp. Ltd., ஈரோடு, மாநிறம், பரணி, விருச்சிக லக்னம், உட்பிரிவுகள். சம்மதம். படித்த வேலையுள்ள அல்லது வாய்ப்புள்ள பெண் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13730

■ ஐயர், பிரஹசரணம், கௌசிக கோத்திரம், திருவோணம், டி.இ.இ.இ. 28/160 செ.மீ./ரூ. 3500/- தனியார் கம்பெனியில் வேலை. 7-ல் செவ்வாய் உள்ள இந்த வரனுக்கு வேலைக்குப் போகும் குடும்பப்பாங்கான பெண் தேவை. பட்டதாரிகள்/உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13731

■ Rich, handsome, fair Bharadwaja/Vadama/ Poorattadhi Iyer 30/175 well employed in USA seeks fair, tall good looking bride qualified as Doctor/Engineer/MCA/M.Sc. (Computer Science), MBA only from orthodox affluent families. Apply with horoscope. Phone (Chennai) : 8274728. Box No. 13732

■ Tanjore Vathimal Kasyapa, Punarpoosam, AMIE, 26/168 cms. Rs. 6000/- Junior Engineer, Railways employed boy requires graduate employed girl based/transferable to Chennai. Box No. 13733

■ Suitable alliance for handsome boy running own business 32/Magam, Athreya above Rs. 20,000/- p.m. Girl should be very fair, beautiful, graduate above 25 yrs. and 155 cms. height. Apply Box No. 13734

■ Tamil Iyer Vadama, Bharadwaja, Purattadhi, 30/163/86 B.E. (Mech.) Software Engineer USA employed H1-B Visa holder. Suddha jatakam, god fearing, clean habits, visiting India, seeks qualified brides. Box No. 13735

■ வட ஆற்காடு ஐயர் வடமாள், ஆத்ரேய, மிருகசீரிஷம், வயது 28, உயரம் 175 செ.மீ. B.Sc., M.A. (Personal Management) கம்பெனியில் H.R.D. Executive 7500/- + perks, பையனுக்கு வடமாள் பட்டப் படிப்பு 25 வயதுக்குட்பட்ட பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13736

■ Alliance invited from broadminded educated bride decent respectable Hindu Vellala family for divorcee 28, B.A., LLB. employed well settled family. Send full

**விளம்பர வாசகங்கள் கண்டிப்பாக 30 வார்த்தைகளுக்கு மேல் இருக்கக் கூடாது. விளம்பர வாசகங்களை அனுப்பும் போது பெட்டி எண்ணுடன் விளம்பரம் செய்ய வேண்டுமா அல்லது விலாசத்துடன் பிரசுரம் செய்ய வேண்டுமா என்பதைத் தெளிவாக எழுத வேண்டும். ஒன்றும் குறிப்பிடவில்லை என்றால் விலாசம் பிரசுரிக்கப்படும்.**

details with horoscope to Box No. 13737

■ Alliance for Vathima Koundinya Gothram, good looking Govt. Post graduate teacher. 32/5,500/- from suitable employed or unemployed girls of the same subsect. Apply with horoscope to Box No. 13738

■ Boy, Vellala, 34/160 cms, M.A., Home Ministry, nearing officer grade, own house Delhi. Alliance from same community sought, send full details with horoscope. Box No. 13739

■ Gulf employed Iyer Vadama, Athreya, Pooram, 30/167. Divorcee seeks graduate bride. Subsect acceptable. Reply with horoscope to Box No. 13740

■ Income Tax Inspector, 27/176 cms. M.Com., MBA, native of East Godavari, but now settled at Coimbatore. Good family, clean habits, very fair handsome, propertied groom seeks homeloving Telugu speaking affluent girl. Education/Caste no bar. C.A. girls may also apply. Please send a detailed bio-data to Box No. 13741

■ Iyer, Vadamal, Bharadawajam, Poorattadhi, 5500/-, 30/5.5" B.Com and D.Pharm, employed in Tamil Nadu Govt. Service invites alliance from graduate religious, home loving girls, below 25 yrs. Apply with horoscope and family details to Box No. 13742

■ Madhwa Kannada, Hastham, Bharadwaja, 35/178/4300/- Cental Govt. Delhi (non-transferable), seeks qualified employed Brahmin girl fluent in Kannada or Tamil. Sects/Subsects no bar. Reply with horoscope and complete details to Box No. 13743

■ Brahmin bride even poor willing to settle at Nasik for Matriculate 5.2" Iyengar 36, Koundinya, Poosam, with mother, earning 2500/- Electrical Contractor. Own flat. Reply Box No. 13744

■ Iyer, brothers, Haritha, Swathi, 30/155/2500/B.A. own business and Hastham/28/165/2000 private firm, own flat seeks employed girl or if propertied employment optional. Subsects no bar. Box No. 13745

■ Post graduate 40 Iyer, bachelor, Bharadwajam, Visakam, Bank employed owning house seeks suitable brides. Decent simple marriage. Horoscope optional. Reply Box No. 13746

■ துளுவ வேள்ளாள முதலியார், புனர்பூசம், 180 செ.மீ. B.Sc. (CS) NIIT சென்னையில் தனியார் கம்பெனியில் வேலை ரூ. 5000/- சேல்ஸ் ஆபீசர், வயது 28, சிவப்பு, வேலைக்கு செல்லாத சிகப்பும், அழகுமுமான குடும்பப்பாங்கான பட்டதாரி மணமகள் தேவை. 5.4"க்கு குறையாத உயரம். ஜாதகம் விவரங்களுடன் தொடர்பு கொள்க. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13747

■ Sourashtra, 30, Rs. 6500/-, 172 cms, boy Salem working at Tiruppatur in Railway Junior Engineer, seeks suitable professional/LIC/Bank employed bride. Apply with details of the family and horoscope to Box No. 13748

■ கார்காத்தார் சைவ வேளாளர் 32/5.6"/4000/- அண்ணாமலை யுனிவர்சிட்டி வரனுக்கு அதே இனம் ஆசிரியை/அரசு பணியில் உள்ள மணப்பெண் தேவை. விவரங்களுடன் தொர்பு கொள்க, பெட்டி எண் : 13749

■ Sourashtra Jennurishi, Anusham, 26/171, Software Engineer AT&T USA planning to settle in India after few yea: s seeks good looking B.Sc./MCA/BE/MBBS bride. Reply horoscope, family details Box No. 13750

■ ஐயர், பிரஹசரணம், கௌசிகம், பூரம் 29/175, பி.காம் டிப்ளமோ கம்ப்யூட்டர் பெங்களூரில் மத்திய அரசாங்கத்தில் அக்கவுண்டன்ட்டாக பணிபுரியும் சிவந்த அழகான பையனுக்கு. பெங்களூருக்கு மாற்றல் ஆகக்கூடிய வேலைக்கு செல்லும் அழகான பட்டதாரி பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம், குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 13751

■ Vadama, Kousikam, Visakam, 5.5", D.E.E.E., B.E., TNEB Rs. 4500/- seeks employed preferably Govt. employed girl. Reply Box No. 13752

■ Brahacharanam Iyer, 5.4", B.Sc. Hons. Naithrupakasyapa, Punarpusam, 28 yrs. working in Private Engg. College, Rs. 1200 + other income 6000/- p.m. Only son, no father, girl employed/unemployed/Vadamal acceptable. Apply with horoscope. Box No. 13753

■ கள்ளர், கண்டியர், 30/160, ரூ. 10,000/- கேட்டை நட்சத்திரம், பி.இ. படித்து சென்னையில் தனியார் நிறுவனம் ஒன்றில் மேனேஜராக பணிபுரியும் மணமகனுக்கு டிகிரி படித்த, அழகான, குடும்பப்பாங்கான நல்ல குடும்பத்தைச் சார்ந்த மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 13754

■ Kallar, B.E. 29, Rs. 12,000/-. Employed in a leading Private Company, seeks alliance from C.A., MCA, B.E., MBA, MBBS, qualified fair and good looking bride from respectable family. Reply with horoscope and family particulars. Box No. 13755

■ வடமாள், கௌசிக கோத்திரம், மகம், 34 வயது, பி.காம், படித்து சென்னையில் EDP ஆக A leading Pvt. Co. யில் பணிபுரியும் சென்னையிலும், திருச்சியிலும் சொந்த வீடும் பிற வசதிகளும் உடைய மணமகனுக்கு, டிகிரி படித்து வேலைக்கு போகும்/போகாத மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13756

■ Unencumbered divorcee, Vadama, Palghat Iyer, B.Com/34/180/7000/- Central Govt. seeks graduate, broadminded, fair homely good looking girl from decent family. Subsects acceptable. Box No. 13757

■ அஷ்டசாஸ்திரம், பாரத்வாஜம், மூலம், 28, 165 செ.மீ. ரூ. 5000/- தென்னிந்திய ரயில்வேயில் பணிபுரியும் வரனுக்கு சென்னையில் மத்திய (அ) மாநில அரசில் பணிபுரியும் மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 13758

■ Iyer, Vathimal, Bharadwaja, Chithirai, graduate, well-built, 30/175/Rs. 4000/- p.m. (Private Limited Company) plus income from property. Seeks alliance from graduate employed/unemployed girls. Subsect no bar. Reply Box No. 13759

■ Brahacharanam, Kousikam, Uthiradam, B.Sc., 27/170/7500/- New Delhi, seeks Delhi based graduate, employed girl from respectable family. Subsects no bar. Reply with horoscope and family details. Box No. 13760

■ 55/5.6"/6000/-, 48 கிலோ, ஒல்லியானவரும், மத்திய அரசில் பணிபுரியும் விவாகரத்தான, வில்லங்கம் எதுவும்

விளம்பர வாசகங்கள் அனுப்பி வைத்தபிறகு, அதில் திருத்தங்களோ, மாற்றங்களோ செய்வதற்குக் கண்டிப்பாக இயலாது.

